# வையாபுரிப்பிள்ளை
## வாழ்க்கைக் குறிப்புக்கள்



வை. சரோஜினி




தமிழ்ப் புத்தகாலயம்
திருவல்லிக்கேணி :: சென்னை-5

**Dr. A. L. MUDALIAR,**
Vice-Chancellor
University of Madras

MADRAS
14th March '57

## FOREWARD

The late Sri S. Vaiyapuri Pillai was appointed Editor of the Tamil Lexicon in 1926 and later as Reader in Tamil from 1936. He served the University for a period of 20 years till he retired on the 11th October 1946.

Mr. Vaiyapuri Pillai's contributions were outstanding, and it is due to him that the Tamil Lexicon was published in the University. It is a monumental piece of work. As a scholar in Tamil he served in many committees and his advice was always of great value. A person of a very simple nature and a gentleman, he was loved and respected by all, and the University of Madras is greatly beholden to late Mr. Vaiyapuri Pillai for the services that he rendered.

A. L. MUDALIAR

# பதிப்பகத்தார் குறிப்பு

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் காலமாகிப் பதினைந்து மாதங்களாகிவிட்டன. அவர்களின் மறைவால் ஏற்பட்ட துயரமும் மனோவேதனையும் தணிந்து அமைதியுடன் சிந்திக்கக்கூடிய சூழ்நிலை ஏற்படப் பதினைந்து மாதங்கள் போதுமான காலமேயாகும். பதினைந்து மாதங்களுக்குப் பிறகு, உணர்ச்சி வசப்படாமல் அமைதியுடன் சிந்திக்கும்போது கூட அவர்கள் மறைவால் தமிழ் மொழிக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் குறைவானதல்லவென்றுதான் தோன்றுகிறது.

மகாகவி கம்பனின் பெருங்காப்பியத்திற்கு ஒரு நல்ல ஆராய்ச்சிப் பதிப்பினை வெளியிடுவதுடன் தமிழ் இலக்கிய வளர்ச்சியின் வரலாற்றினையும் விஞ்ஞான ரீதியாக நன்கு ஆராய்ந்து எழுதி வெளியிட வேண்டுமென்பதும் பேராசிரியரவர்களின் பேரவா. இவை அவர்களின் ஆசைக்கனவு மட்டுமல்ல, இவற்றை நிறைவேற்றிவைக்கும் பேராற்றலும் அவர்களுக்கே உரியது. பேராசிரியரவர்களுக்கு ஆசையும், ஆற்றலுமிருந்தும், அதை உபயோகித்து நற்பயன் அடையாமல் போனது தமிழ் நாட்டின் துர் அதிர்ஷ்டமேயாகும்.

பேராசிரியரவர்கள் தமிழ்மொழிக்குச் செய்துள்ள சேவை மகத்தானது. **உண்மையினும் சிறந்ததெதுவுமில்லை** என்ற லட்சியத்துடன் தமிழ் இலக்கியங்களை நன்கு ஆராய்ந்து தெளிந்து அவர் வெளியிட்டுள்ள முடிவுகள்

பலவும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பெருந்துணை புரியும் என்பது திண்ணம்.

பேராசிரியரவர்களின் வாழ்க்கை வரலாற்றினை அவர்கள் வாழ்ந்த காலத்திலேயே எழுதி வெளியிட முயற்சித்தோம். புகழினையும் துதியையும் விரும்பாப் பேராசிரியரவர்கள் அப்போது அதைத் தடுத்துவிட்டார்கள். அவர்கள் மறைவுக்குப்பின், அவர்களது அருந்தவப் புதல்வியார் திருமதி சரோஜினி அம்மையாரவர்கள், பேராசிரியரவர்களின் வரலாற்றினைச் சீரிய முறையில் எழுதித் தந்துள்ளார்கள். அவர்கட்கு எங்கள் மனப்பூர்வமான நன்றி.

பேராசிரியரைப்பற்றித் தமது நினைவுகளையும்-சிறந்த கருத்துக்களையும் பல அறிஞர்கள் எழுதியுள்ளார்கள். அவற்றைப் பின் இணைப்பாகச் சேர்த்துள்ளோம். அவ் அறிஞர் பெருமக்கள் அனைவருக்கும் எங்கள் உளங்கனிந்த நன்றி.

இந் நூலுக்கு அன்புடன் முன்னுரை எழுதி உதவிய சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் இலட்சுமணசாமி முதலியாரவர்கட்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

**தமிழ்ப் புத்தகாலயத்தார்**

# முன்னுரை

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் வாழ்க்கைச் சரிதையை எழுதித் தரும்படி தமிழ்ப் புத்தகாலய அதிபர் திரு. கண. முத்தையா என்னைக் கேட்டுக் கொண்டபோது, ஒருபுறம் சந்தோஷமும், மற்றொருபுறம் தயக்கமும் உண்டாயிற்று. எனது தந்தையாரின் வரலாற்றை எழுதும் சந்தர்ப்பம் நேர்ந்தது குறித்து மகிழ்ச்சி யடைந்தேன்; அதே சமயத்தில் பேராசிரியர் எனது தந்தை என்ற உறவுநிலை குறுக்கிட்டதால் தயங்கினேன். இருப்பி னும், அன்னாரது வாழ்க்கைக் குறிப்புக்களையாவது உடனடியாக வெளியிடக் கருதி இப்பணிக்கு இசைந்தேன்.

சம்பவங்கள் நிறைந்த ஒரு வாழ்க்கை குறித்து எளிதில் எழுதி விடலாம். ஆனால் தமிழ் ஆராய்ச்சித்துறைக்கு அடிகோலிய ஒரு அறிஞரைப்பற்றி அவ்வளவு எளிதில் எழுதிவிட முடியுமா? முதன் முதலாக திரு. பிள்ளையவர்களின் நெருங்கிய நண்பர்களிடமிருந் தும் உறவினர்களிடமிருந்தும் வாழ்க்கைக் குறிப்புக்களைப்பெற முயற்சி எடுத்து வந்தேன். அடுத்தபடியாக ஆராய்ச்சித்துறைக்குப் பேராசிரியரை உருவாக்கிய சூழ்நிலையை அறிவதில் கவனம் செலுத்தினேன். இதற்குப் பேராசிரியர் எழுதியுள்ள நூல்களையும், ஆராய்ச்சி முன்னுரைகளையும், நூல் வடிவில் வெளிவராத கட்டுரைகளையும், இடையறாது அவர்கள் எழுதிவந்த நாட்குறிப்புக் களையும் பயன்படுத்திக்கொண்டேன்.

ஓயாது கற்பதற்கென்றும், ஆராய்வதற்கென்றும், எழுது வதற்கென்றும் எழுதியவற்றை மீண்டும் மீண்டும் சிந்தித்துத் திருத்துவதற்கென்றும் பேராசிரியர் தமது வாழ்க்கையின் ஒவ் வொரு கணத்தையும் செலவிட்டிருப்பதைக் குறித்துவைத்துக் கொண்டேன்.

இத்தருணத்தில், எனது தந்தையாரின் நெருங்கிய நண்பரும் அறிஞருமான திரு. பி. ஸ்ரீ. ஆச்சார்யா அவர்கள் சில யோசனை களைக் கூறினார்கள். பேராசிரியரின் வாழ்க்கை, தக்க ஆராய்ச்சி

நெறியில் சென்றிருப்பதைத் தெள்ளிதிற் புலப்படுத்துவதாகவே இவ்வாழ்க்கை வரலாறு அமையவேண்டும் என்று உணர்ந்தனர் கள். இந்நோக்கம் நிறைவேற கவி தாகூரின் வாழ்க்கையைப் பற்றி எட்வர்ட் தாம்ஸன் எழுதியிருக்கும் நூல் உதவும் என்றும் குறிப்பிட்டார்கள். அவர்களுடைய ஆலோசனை பெரிதும் பயனளித்தது. இங்ஙனம் ஒருவாறு தகுதிபெற்ற பின்னரே இந்நூலை எழுதத் துணிந்தேன். பேராசிரியரின் விரிவான வாழ்க்கை வரலாற்று நூல் வெளிவரவேண்டும் என்பது எனது பேரவா. அதற்கு முன்னால் இச்சிறிய நூலை வாசகர்களுக்குச் சமர்ப்பிக் கிக்கிறேன்.

இந்நூலை எழுதுவதற்கு உதவிய பெரியார்களுக்கு எனது வணக்கம். திரு. பெ. நா. அப்புஸ்வாமி அய்யரவர்கள் திரு. பிள்ளையின் நண்பர்களுக்கெல்லாம் கடிதங்கள் எழுதிச் சில தகவல்களைப் பெறுவதற்கு உதவினார்கள். திரு. பி. ஸ்ரீ. அவர்கள் அச்சுப்படிகளைத் திருத்தியும், பிறவாறும் துணைபுரிந்தார்கள். இவர்களுக்கு எனது நன்றி உரித்தாகின்றது. மேலும், பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள்ள கட்டுரைகளை மனமுவந்து அளித்து என்னை ஊக்குவித்த பேராசிரியரின் நண்பர்களுக்கு நான் மிகக் கடப்பாடுடையேன்.

இந்நூலை அச்சிடும்போது பற்பல காரணங்களால் காலதாமதம் ஏற்பட்டது. விரைவில் முடிக்குமாறு அடிக்கடி தூண்டிப் பின்னர் நூலை அழகிய முறையில் அச்சியற்றி வெளியிட்ட தமிழ்ப் புத்தகாலய அதிபர் திரு. கண. முத்தையா அவர்களுக்கும் நன்கு அச்சிட்டுதவிய தமிழன் அச்சகம் திரு. மு. ஏழுமலை அவர்கட்கும் எனது நன்றி.

சென்னை
29—4—57

வை. சரோஜினி





பேராசிரியரின் பெற்றோர்கள்



பேராசிரியரின் குடும்பம்

# 1. இளமையில் தளிர்த்த தமிழ்

## பரம்பரையும் தோற்றமும்

தமிழ்த் தாயின் அரும் பெறற் புதல்வர் பலரைத் தந்த புகழ்மிக்க பொருநை யாற்றங்கரையில் சிக்க நரசையன் கிராமம் என்னும் சிற்றூரில் தோன்றியவர் ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு வையாபுரிப் பிள்ளை. மாஞ் சோலைகளும் வயல்களும் சூழப்பெற்று, இயற்கையழகுடன் திகழும் இவ்வூருக்கு மெய்யணிகள், சலசல வென்று பரந்து தவழ்ந்து நல்லறிஞர் உளமெனத் தெளிந்து செல்லும் தாமிரபரணியும், அதன் நீரிலே தொட்டும் தொடாமலும் அழகுக்கு அழகு செய்வதுபோல் எழுந்து நிற்கும் குறுக்குத் துறைக் கோயிலும். முருகப் பெருமான் விழாக் காலங்களில் சிக்க நரசையன் கிராமத்து வீதிகளில் எழுந்தருளுவதுண்டு. கிராமவாசிகள் தவிர அடுத்துள்ள ஊர்களிலிருந்தும் மக்கள் தரிசனத்திற்காக வருவார்கள். ஆகவே, எப்பொழுதும் கலகலவென்று ஆரவாரத்துடன் விளங்கும் கிராமம் இது.

இந்தக் கிராமத்தில் சைவவேளாள மரபிலே தோன்றிய சங்கரலிங்கம் பிள்ளை யென்ற தமிழறிஞர்— இவர்தாம் ஆராய்ச்சிப் பேரறிஞர் வையாபுரிப்பிள்ளையவர்களின் பாட்டனார்—தாமிரபரணிப் புராணம் பாடியதாகப் பிள்ளையவர்களே குறிப்பிடுவதுண்டு. இவரது மைந்தர் சரவணப்பெருமாள் பிள்ளை தந்தையாரைப்போலவே தமிழிலும் வடமொழியிலும் தக்க புலமையடைந்து ஆங்கில அறிவும் பெற்றிருந்தார்.

சரவணப்பெருமாள் பிள்ளை இளம் பருவம் தொட்டுப் பக்தி நெறியில் ஈடுபட்டவர். சைவ சித்தாந்த சாஸ்திரங்களையும் சிவ புராணங்களையும் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களையும் நன்கு கற்றறிந்தவர். சிவதீக்ஷை பெற்றுச் சிவவழிபாட்டிலும் சைவ சமயப் பிரசாரத்திலும் கருத்தைச் செலுத்தியவர். சமயப்பற்றுக் காரணமாகவேதாம் வகித்து வந்த ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வேலையிலிருந்து உரிய காலத்திற்கு முன்பாக ஓய்வு பெற்றுச் சமயத் தொண்டாற்றி வந்தவர்.

வேலைத் தொல்லையிலிருந்து விடுபட்ட பின் சரவணப் பெருமாள் பிள்ளை முறைப்படி மணிக்கணக்காகச் சிவபூஜை செய்வார். அதிகாலையில் எழுந்து தமிழ், வடமொழித் தோத்திரப் பாடல்களை வாய்க்குள் பாடிக்கொண்டே தாமிரபரணியில் நீராடி, குறுக்குத்துறைக் குமரக் கடவுளை வழிபட்டு, வரும் வழியில் கோயில் நந்தவனத்திலிருந்து பூக்குடலை நிரம்ப மலர்கொய்து கொண்டுவீட்டிற்குவருவார். அதற்குள் அவர் வாழ்க்கைத் துணைவி பாப்பம்மாள் வீட்டுத் தோட்டத்திலிருந்தும் மலர்களைப் பழுது பார்த்து வைத்துப் பூஜை மடத்தையும் சுத்தம் செய்து சித்தமாக்கி வைத்திருப்பாள். வீட்டிற்குள் வந்ததும் அவர் நேராகப் பூஜை மடத்திற்குள் செல்வதைத்தான் பார்க்கலாம். அதன்பின் சுமார் மூன்று மணி நேரம் அவரை யாரும் பார்க்க முடியாது. தீபாராதனை மணியடிக்கும் ஓசைகேட்டுப் பேரப்பிள்ளைகள் ஓடோடிவந்து நைவேத்யப் பொருளுக்காக மௌனமாய் நிற்பார்கள். தாத்தா யாரையாவது ஒருவரைக் கண்ஜாடை செய்து உள்ளே அழைத்து மிக்க அன்போடு அப்பொருளைத் தருவார். பூஜை முடிந்த பிறகே அவர் காலையுணவு உட்கொள்வது வழக்கம்.

பேரப்பிள்ளைகளோ, மற்றவரோ இவரைப் பூஜைக்குப்பிறகே காணமுடியும். அதுவும் கொஞ்ச நேரம்தான்.

அதற்குமேல் சைவ சித்தாந்த விளக்கம் கேட்கக் காத்திருக்கும் அன்பர்கள் மத்தியில்தான் காட்சியளிப்பார். மாலை நேரங்களில் நெல்லையப்பக் கவிராயர் என்ற அறிஞர் இல்லத்தில் சிவஞான சித்தியார் வாசித்து வியாக்கியானம் செய்யப் போய் விடுவார்.

இவ்வாறு வைதிகப் பற்று மிகுதியும் உடையவராய்ச் சைவசமயத்தொண்டு ஒன்றே தம் வாழ்க்கை லட்சியமாகக் கருதி வாழ்ந்தவர் சரவணப்பெருமாள் பிள்ளை. அவர் வாழ்க்கைத் துணைவி இதற்குப் பெரிதும் துணை நின்றாள் என்பது குடும்பப் பொறுப்பெல்லாம் தானேமேற்கொண்டு நடத்தியதிலிருந்தே தெரியவரும்.

பாப்பம்மாள் உத்தம பத்தினிக்குரிய நற்குணங்களெல்லாம் ஒருங்கே அமையப்பெற்றவள்; அன்பே உருவானவள். கணவன் விருப்பப்படியே தானும் சிவதீக்ஷை பெற்று, தேவார திருவாசகங்களைப் பாராயணம் செய்வாள். பொருள் தெரிந்தோ தெரியாமலோ வடமொழி சுலோகங்களையும் உச்சரிக்கக் கற்றிருந்தாள். கல்வியறிவு அதிகம் பெற்றிராத நிலையிலும் அநுபவத்தால் குடும்பக் காரியங்களைத் திறம்படக் கவனித்துக் கொள்வாள்.

இத்தகைய அருங்குணவதி பாப்பம்மாளுக்கும் சிவநேசச் செல்வர் சரவணப் பெருமாள் பிள்ளைக்கும் திருமகனாய்த் தோன்றியவர் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை. இவர் தாயாரைப் பெற்ற பாட்டனாரின் இருப்பிடமாகிய வண்ணாரப் பேட்டையில், 1891-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 12-ம் நாள் (1066-ம்ஆண்டு, புரட்டாசி 29-ம் நாள்) புதன்கிழமை திருவோணத் திருநட்சத்திரத்தில் பிறந்தார். இவர் பிறக்கு முன்னமேயே மூன்று ஆண் குழந்தைகள் பிறந்து இறந்து போய், தாயம்மாள் என்ற பெண் ஒருத்தி மட்டுமே இருந்தாள். ஆகவே, பாப்பம்மாளும் அவள் தாயாரும் இவரை வெகு ஜாக்கிரதையாகப்

பாதுகாத்து வளர்த்தார்கள். 'வையாபுரி' என்று பெயரிட்டார்கள். 'பாலருவாயர்' என்று மற்றொரு பெயரும் இவருக்கு உண்டு. அது மருவிப் 'பாலையா' என நிலைத்தது. வீட்டவர் இப்பெயர் வைத்தே பிள்ளையை அழைப்பர். பின்னாளில் கட்டுரைகள் பல 'பாலையா' 'சம்பந்தன்' எனப் புனைபெயர்களில் வந்ததாகப் பலரும் நினைத்தது இவருடைய உண்மைப் பெயர்களே.

பிள்ளையவர்களுக்குப் பின் தோன்றியவர்கள் மூவர். இவர்களுக்கு மூன்று வயது இளையவர் சங்கரலிங்கம் பிள்ளை. இவருக்கும் தங்கை, சிவகாமி என்னும் பெண், மங்கைப்பருவம் எய்துவதற்கு முன்னே பரமனடி சேர்ந்தாள். சங்கரலிங்கம் பிள்ளைக்கு ஆறு வயது இளையவர் நடராஜபிள்ளை.

## இளமைப் பருவமும் சமயப் பற்றும்

பிள்ளையவர்களும் தம்பியரும் சிறு குழந்தைகளாக இருந்த காலத்தில் இன்று இருப்பவை போன்ற பொழுது போக்கு வசதிகள் கிடையா. பொருநையில் நீராடச் செல்லும்போது குறுக்குத்துறைக் கோயில் மண்டபத்தின் மேலிருந்து நீரில் குதித்து நீந்தி விளையாடுவது, ஆற்று மணலில் கிளியந்தட்டு, சடுகுடு போன்ற விளையாட்டுக்கள் விளையாடுவது முதலியன சிறுவர் பொழுது போக்கு. பிள்ளையவர்களும் இவைபோன்ற விளையாட்டுக்கள் விளையாடி மகிழ்வதுண்டு. மற்ற நேரமெல்லாம் பள்ளிப்பாடங்களைப் படிப்பதோடு, வீட்டில் தந்தையார் செய்யும் பூசை முதலியவற்றைக் கருத்தூன்றிக் கவனித்து வருவார்.

தகப்பனாருடைய நூலகத்தில் அவர் திரட்டி வைத்திருந்த நூற்றுக்கணக்கான சமய நூல்களில் எதையேனும் ஒன்றைப் படிக்க முயல்வார். அதிகமாக வெளியே

சென்று மற்றக் குழந்தைகளுடன் தாராளமாகப் பழகுவது இவர் இயல்பல்ல.

திருவிழாக் காலங்களில் குறுக்குத்துறைப் பெருமான் வீதியில் எழுந்தருளும்போது, வையாபுரிப் பிள்ளை கூட்டத்தோடு சேர்ந்து, மேனியில் வெண்ணீறு துலங்க ருத்திராக்ஷமாலை யணிந்து தேவார, திருவாசகப் பாடல்களை இனிமையாக ஓதிச் செல்வார். இவரது தம்பியருக்கும் இப் பழக்கம் உண்டு. தந்தையார் சரவணப் பெருமாள் பிள்ளை சமயம் வாய்க்கும்போதெல்லாம் குழந்தைகளுக்குப் புராணக் கதைகளையும் தேவார திருவாசகப் பாடல்களையும் புகட்டிச் சமயப் பற்றை வளர்த்தார். பிள்ளை சமயத் தொடர்புள்ள பல நூல்களையும் தாமே படித்து வழிவழித் தாம் பெற்ற தமிழ்ப் புலமையிலும் திறம் பெறலானார்.

ஏழு எட்டு வயதுச் சிறுவராகப் பிள்ளை இருந்த நாட்களில் இவருக்குச் சைவ சமயத்திலிருந்த ஈடுபாட்டைக் கவனித்த தாய்மாமன் முதலியோர் தந்தையாரைப் பின் பற்றி விடுவாரோ என்று ஐயுற்றதும் உண்டு. ஆனால் இவர் இராமாயணத்தின் சுவையறிய ஆரம்பித்த பிறகு முன் கடைப்பிடித்த தீவிர சைவநெறியில் நின்று நெகிழ்ந்து விரிந்த மனப்பான்மை பெறலானார். இந்த மாற்றத்திற்கு அடிப்படைக் காரணம் ஒன்று இல்லாமற் போகவில்லை.

சரவணப்பெருமாள் பிள்ளை, எதிரில் யாராவது 'ராம' என்ற பெயரைச் சொன்னாலே "சிவசிவ" என்று காதை மூடிக்கொள்வார். இந்த 'வைராக்கிய' பக்தி அவருடைய மைத்துனர் முதலானோருக்குப் பிடிப்பதில்லை. எப்பொழுதும் அவரைக் கேலி செய்து கொண்டு, வேண்டுமென்றே இராமாயணம் முதலிய நூல்களை அவர் கண்ணெதிரில் படும்படி வைப்பார்கள். இராமாயணம்

தந்தையாருக்கு ஏன் பிடிப்பதில்லை என்ற சிந்தனை, முதல் முதல் அவருக்குத் தெரியாமல் அந்நூலைப் படித்துப் பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தைப் பிள்ளை யுள்ளத்தில் எழுப்பியது. இதன் விளைவாகப் பொருநையாற்று மணலில் நண்பர் கூட்டத்துடனிருந்து இராமாயணம் படிக்க ஆரம்பித்தார். படித்துப் பாடி நண்பர்களுக்கும் விளக்கம் சொல்லி ரசிக்கலானார். நாளடைவில் சமய உணர்ச்சியையும் வென்றுவிட்டது தமிழார்வம்.

## கல்வியும் தமிழார்வமும்

பள்ளிப் பருவம் வந்ததுமே, பெற்றோர் தம் இல்லத்திற்கருகிலேயே இருந்த கணபதி வாத்தியார் ஆரம்பப்பாடசாலைக்குப் பிள்ளையை அனுப்பி வைத்தனர். கணபதிப் பிள்ளைதான் இவருக்கு ஆரம்பபாடம் போதித்தவர். இந்தப் பள்ளிக்கூடத்தில் தாம் படித்துவந்த காலத்து நிகழ்ச்சிகள் சில குறித்து இவரே சொல்லிச் சொல்லி இன்புறுவதுண்டு.

"...வாத்தியாருக்குப் பல தொல்லைகளைக் கொடுத்து வருவார்கள் மாணவர்கள். எழுத்துக்களை மணலில் எழுதிப் பழகச் சொல்லுவார் உபாத்தியாயர். இதைச் சட்டாம்பிள்ளை மேற்பார்வை செய்வார். ஒரு நாள் சட்டாம்பிள்ளை என் விரலை மணலில் வைத்து அழுத்திப் பலமுறை எழுத வைத்ததால் எனக்குப் பள்ளிக்கூடத்தின் மேலேயே வெறுப்பு வந்துவிட்டது. விரலில் இரத்தம் வெளிவராத குறை. என் நண்பர்கள் எனக்காகப் பரிதாபப்பட்டு அருமையான ஒரு யோசனை சொன்னார்கள்.

"மறுநாள் பள்ளிக்கூடத்திற்குப் புறப்படும் போதே என்னை அழைத்துச் செல்ல இரண்டு நண்பர்கள் வந்தார்கள், மூவரும் புறப்பட்டோம். பள்ளிக்கூடத்திற்கல்ல,

வீட்டிற்கும் பள்ளிக்கும் நடுவே இருந்த மாந்தோப்புக்கு. ஏடு, பலகை முதலியவற்றை ஓரிடத்தில் பத்திரமாக வைத்துவிட்டு விளையாட ஆரம்பித்தோம். எனக்கு உள்ளூர அச்சமாகவேதான் இருந்தது. அவர்கள் நான் சோர்ந்துபோன நேரமெல்லாம் 'இதற்கு இவ்வளவு பயம் எதற்கு? நாங்கள் அடிக்கடி இப்படித்தான் செய்வோம்'என்று என்னை ஊக்கப்படுத்தினார்கள். நடுப்பகல் வரை எப்படியோ நேரத்தைப் போக்கிவிட்டு வீட்டுக்குத் திரும்பினேன். தாயார் என் தோற்றத்திலிருந்தே நான் ஏதோ பெரிய குற்றம் செய்துவிட்டேன் என உணர்ந்து கொண்டாள். அவளைக் கட்டிக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதேன். உண்மையைக் கூறி 'அப்பாவுக்குத் தெரிவிக்காதே' எனக் கெஞ்சினேன். அப்பா கோபித்துக் கொள்ளமாட்டார்கள். அடிக்க மாட்டார்கள். ஆனால் அவர்கள் பார்வை ஒன்றே 'இப்படியும் குற்றம் செய்வாயா' என்று இரக்கப்படுவதைத் தெரிவிக்கும். அதை என்னால் பொறுக்க முடியாது. அடுத்த வீட்டுச் சிறுவனை அழைத்து 'இன்று பெரியவன்—தாயார் என்னை அப்படித்தான் அருமையாக அழைப்பாள்—பள்ளிக்கு வரமாட்டான். உடம்புக்குச் சரியில்லை; நாளையிலிருந்து ஒழுங்காக வருவான்' என உபாத்தியாயருக்குச் சொல்லி அனுப்பினாள். 'நாளையிலிருந்து ஒழுங்காக வருவான்' என்ற தொடரை வாய்க்குள் பலமுறை நானே மனமாரச் சொல்லிப் பார்த்துக் கொண்டேன். மன ஆறுதல் கிடைத்தது.''

ஆரம்பப் பள்ளியிலேயே பிள்ளை ஆசிரியர்களுடைய அன்பைக் கவர்ந்தார். இவரைப்போல் ஓரிருவர் பள்ளிக்குக் கிடைப்பதால்தான் நாம் ஆசிரிய வேலையை மகிழ்ச்சியோடு செய்துவர முடிகிறது என்று அவர்களுக்குள்ளே பேச்சு நிகழும்.

கணபதி வாத்தியாரின் பாடசாலையிலிருந்து விலகி சிக்க நரசையன் கிராமத்தை அடுத்த மீனுட்சிபுர ஆரம்பப் பாடசாலைக்குச் சென்றார் வையாபுரிப் பிள்ளை. ஆசிரியர் திரு ஐயாசாமிப் பிள்ளைக்கு இவரிடத்தில் மிகுந்த அன்பு. வகுப்பில் பல முறை தம்மையும் மீறி இவரைப் பற்றிப் புகழ்ந்து பேசுவாராம்.

ஆரம்பப் பாடசாலைப் படிப்பு முடிவுற்றதும் இவர் மதுரைத் திரவியம் தாயுமானவர் பாடசாலை என்று தற்போது வழங்கிவரும் ஹிந்துகலாசாலையில் சேர்ந்தார். இங்கும் ஒவ்வொரு வகுப்பிலும் முதல் மாணவர் இவர்தாம். கட்டுரைப் போட்டிகளிலும் இவர் முதற் பரிசுக்குரியவ ராகவே மதிக்கப்படுவார். அடக்கம், பொறுமை, அன்பு இவற்றையே அணியெனக் கொண்டு அறிவுச்சுடராய் விளங்கினர் வையாபுரிப்பிள்ளை.

இளமைப் பருவத்திலேயே பிள்ளைக்கு வாய்த்திருந்த தமிழாற்றலை மேலும் மேலும் வளர்த்து வளம்பெறச் செய்தவர்கள் கல்லூரித் தமிழாசிரியர்கள் சிவராமபிள்ளை யும் எம். எஸ். சுப்பிரமண்யக் கவிராயரும் ஆவர். இவர் கல்லூரிப் பாடங்களைத் தவிர வேறுபல இலக்கிய இலக்கண நூல்களையும் ஆய்ந்து கற்கும் முறைகளைச் சிவ ராமபிள்ளையிடம் கேட்டுத் தெரிந்து, நேரம் கிடைக்கும் போதெல்லாம் அவற்றைப் பயின்று வந்தார். இவருடைய திறமையை நன்கறிந்த ஆசிரியர் சிவராமபிள்ளை மாணவர் களைக் கேள்விகேட்டு வரும்பொழுது, ஒருவரும் விடை யளிக்காத விஷயங்களைப் பிள்ளையைக் கேட்டு 'என்ன! புலவரவர்களே! இந்தக் கேள்விக்கு உம்முடைய விடை யாது?' எனக் கேட்பதுண்டு. மாணவர்களும் இவர்க ளுடைய புலமையை மதிப்பாராயினர்.

தனிப்பட்ட முறையில் சில பெரியார்களிடம் பாடம் கேட்கும் பேறும் இவருக்குக் கிட்டிற்று. பாம்பன்

ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகள் குறுக்குத்துறை மடத்தில் சில காலம் தங்கியிருந்தார். தகப்பனூர் மூலமாக சுவாமிகளை நேரில் சந்திக்கும் வாய்ப்புப் பெற்று, பாடம் கேட்கத் தமக்கிருந்த ஆவலை வெளியிட, சுவாமிகள் மன மகிழ்ந்து இவரது விருப்பத்தை நிறைவேற்றித் தந்தார். இலக்கிய இலக்கணத்தோடு தத்துவ சாஸ்திரத்தையும் கற்றுப் பெரிதும் பயனடைந்தார் வையாபுரிப் பிள்ளை. சுவாமிகள் ஒரு முறை பிள்ளை வீட்டிலே சில நாட்கள் தங்கியிருந்து தம் மாணவருடைய அன்புக் கட்டளையை நிறைவேற்றித் தந்தாரென்றால், இருவரிடையே நிலவிய ஆசிரிய-மாணவ உறவை ஒருவாறு ஊகித்தறியக் கூடும்.

பிள்ளை ஹிந்து கலாசாலை மாணவராக இருந்த காலத்திலேயே யாழ்ப்பாணம் சுவாமிநாதப் பண்டிதரிடமும் சில காலம் தமிழ் பயிலும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்ததுண்டு.

வகுப்பு மாணவர் எல்லோரையும்விட, பிள்ளை திறமையுள்ளவர் என்பதை உடன்பயின்ற நண்பர்களும் ஆசிரியர்களும் அறிவார்கள். எதையும் எளிதில் மனப்பாடம் செய்யும் சக்தி இவருக்கு இயற்கையாகவே அமைந்திருந்ததால் அநேக தேவார—திருவாசகப் பாடல்களையும், இராமாயணத்தில் சில பகுதிகளோடு, திருக்குறள் முதலியவற்றையும் மனப்பாடம் செய்திருந்தார். ஆங்கிலச் செய்யுட்களைக் கற்பதிலும் இவருக்கு ஆர்வம் உண்டு. ஆங்கிலப் பெருங்கவி Milton எழுதிய 'Paradise lost' 'Princess' போன்ற கவிதைகள் எல்லாம் F. A. வகுப்பில் படித்து வந்த காலத்திலேயே மனப்பாடம். பள்ளித் தேர்வு நாட்களில் தமிழ்த் தேர்வு எழுதுவதென்றால் இவருக்கு ஒரே ஆனந்தம். "கேள்வித்தாள் கைக்கு வந்ததுமே ஒரு தனி இன்ப உலகத்தில் இருப்பது போல் நான் உணர்வேன். கணக்கு என்றாலோ கைகால் சோர்ந்துவிடும். நடுக்கம் எடுத்துவிடும். எப்படியோ தப்பித்தவறி வெற்றிக்குத் தேவையான

மதிப்பு—எண்கள் வாங்கிவிடுவேன்'' என்று இவர்தம் பள்ளிப் பருவ நிகழ்ச்சிகள் பற்றிக் கூறுவதுண்டு.

மாணவராக இருந்த காலத்திலேயே இவர் முத்தையா பிள்ளை, சுடலையாண்டிப் பிள்ளை முதலிய பள்ளித் தோழர் சிலருக்கு நளவெண்பாவின் பாடல்களைப் பொருள் நயம் தோன்ற எடுத்துக் காட்டி விளக்குவார். அவர்களுக்கு நூல் முழுவதையும் படித்து மனப்பாடஞ் செய்ய ஊக்கத்தை ஊட்டுவார். இவ்வாறு பிள்ளையவர்களால் இலக்கிய நயம் அறிந்து சுவைத்துப் பயன் பெற்ற பள்ளி நண்பர்கள் பலர்.

F. A. வகுப்புக்கு வருவதற்குள் இவர் கம்பராமாயணத்தையும் திருக்குறளையும் கற்றிருந்தார் என்றால் இவரது மேதையை என்னவென்று கூறுவது? F. A. வகுப்பில் படித்துவந்த நாட்களில் கலித்தொகை முழுவதையும் பல பிரதிகளைக்கொண்டு ஒப்புநோக்கித் தாம் படித்ததாகத் தாமே கட்டுரையொன்றில் குறித்துள்ளார். இங்ஙனம் மாணவ நிலையிலேயே சிறப்பாகத் தமிழ்ப் பயிற்சி பெற்றுத் தமிழார்வத்தைப் பிறருக்கு ஊட்டியும் தமிழைப் பரப்பியும் வந்தார்.

பேராசிரியர் ஸ்ரீ க. அ. நீலகண்ட சாஸ்திரியார், வழக்கறிஞர் ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், பி. ஸ்ரீ. காலஞ் சென்ற பேராசிரியார் வே. சாரநாதையங்கார், அனந்தராமையங்கார் ஆகியோர் இவரது பள்ளிப் பருவத்திலிருந்தே இணைபிரியாத தோழர்கள்; பின்னாளில் இலக்கியத் தோழர்களாகவும் குடும்பத் தோழர்களாகவும் விளங்கினார்கள்.

## சென்னையில் கல்வி

நெல்லைக் கல்லூரியில் பி. ஏ. வகுப்புக்கள் அந் நாட்களில் இல்லை. ஆகவே, பிள்ளை சென்னையில் கிறிஸ்துவக்

கல்லூரியில் இடம் பெற்று, சரித்திரம், பொருளாதாரம் ஆகிய இரண்டையும் விருப்பப் பாடமாக எடுத்துக்கொண்டார். கல்லூரியில் தமக்கு இயல்பாக அமைந்த அடக்கம் அன்பு அறிவாற்றல்களால் நண்பர்களுடையவும் ஆசிரியர்களுடையவும் நன்மதிப்பைப் பெற்றுத் திகழ்ந்தார்.

தமிழ் நாட்டில் புகழ் பெற்று விளங்கிய மறைமலையடிகள் இக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராய் அமைந்ததைப் பிள்ளை பெறற்கரிய பெரும்பேறாய் எண்ணினார். அப் பெரியாரும் இவரிடம் கலியாற்றல் இருந்தமை கண்டு, அன்புகாட்டி மேலும் மேலும் தமிழை நன்கு பயில வழி காட்டினார். இத் தமிழ்ப் பெரியாரின் பேராதரவு பிள்ளையின் இலக்கிய முயற்சிகளுக்குப் புதிய ஊக்கம் அளித்தது.

தமது 21-வது வயதில் 1912-ல் பிள்ளை பி. ஏ. வகுப்பில் தமிழில் மாகாணத்திற்கே முதல்வராய்த் தேர்ச்சி பெற்றார். இச் சிறந்த தேர்ச்சி இவருக்குப் புகழைத் தேடித்தந்தது. தமிழ்ப் பேராசிரியருக்கும் இது பெரு மகிழ்ச்சியை அளித்தது. அரசாங்கத்தார் 'சேதுபதி' தங்கப் பதக்கத்தைப் பிள்ளைக்குப் பரிசளித்துக் கௌரவித்தனர்.

மாணவத் தோழர்களின் நன்மதிப்பைப் பெற்றவராகையாலே கல்லூரித் தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அந்தத் துறையில் பணியாற்றியபோது பல இலக்கியக் கனவான்களை நேரில் அறியும்பேறு பெற்றார். தமிழ்ப் பெரியார் தி. கனகசுந்தரம் பிள்ளை போன்ற பேரறிஞர்களோடு பழகும் வாய்ப்பும் கிட்டிற்று.

இப் பெரியாரிடமிருந்து, கல்லூரி மாணவராக இருந்த நாட்களிலேயே, தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரைப் பிரதியைப்பெற்று, காகிதத்தில் பிரதி செய்து வைத்துள்ளார். அது இன்றும் இவர் நூலகத்தில் உள்ளது.

## அன்னையும் உடன் பிறந்தாரும்

பிள்ளையவர்களும் தம்பியரும் ஹிந்து கலாசாலையில் பயின்ற காலத்து இவர்கள் தந்தையார் வெளியூர்களில் தாசில்தாராக வேலைபார்த்து வந்தமையால் இவர்கள் தாயாரின் பாதுகாப்பில் சிக்க நரசையன் கிராமத்தில் வசித்துவந்தார்கள். வையாபுரிப்பிள்ளை பிறவியிலேயே மெலிந்த பலவீனமான உடல்நிலை பெற்றிருந்தமையால் இவரைப் பற்றிய கவலை எப்பொழுதும் அன்னை பாப்பம் மாளுக்கு இருந்துவந்தது.

தம்பியருக்கும் தாயாருக்கும் இவரிடத்தில் பெரு மதிப்பு உண்டு. தாயார் 'பெரியவன்' சொல்வதை வேத வாக்காக எண்ணுவாள். பொதுவாகப் பிள்ளை ஊண், உடை இரண்டையும் இளமைப் பருவமுதலே பொருட் படுத்தியதில்லை. இதை நன்குணர்ந்தே அந்த அம்மாள் அவற்றைக் கவனிக்கும் பொறுப்பைத் தான் ஏற்றுக் கொண்டாள். வயது வந்தபின் கூட இவருக்குத் தானே பக்கத்திலிருந்து கதைசொல்லிச் சாதம் ஊட்டுவாள். பிள்ளையும் பெற்ற தாயைத் தெய்வமெனப் போற்றும் மனப்பாங்குடையவர் என்பதை எடுத்துக்கூற வேண்டுவ தில்லை.

பிள்ளை தம் தமக்கையிடமும், தம்பியரிடமும் அள வற்ற அன்புடையவர். தமக்கை தாயம்மாள் திருவாளர் ஆர். எஸ். சுவர்ணவேலுப் பிள்ளை என்ற தம் தூரபந்து வான ஒரு செல்வருக்குத் திருமணம் செய்யப்பெற்றுத் திருநெல்வேலியிலேயே பாளையங்கோட்டையில் இல்லறம் நடத்திவந்தாள். பிள்ளை தம்பியருடன் அடிக்கடி பாளை யங் கோட்டைக்குச் சென்று தமக்கையோடும் அவள் கணவரோடும் உரையாடி மகிழ்வார். அந்த அம்மாளும் தம்பியரைப் பரிவு பொங்க வரவேற்று உபசரிப்பாள். சகோதரர்கள் ஒருவருக்கொருவர் இணைந்து ஒன்றியிருந்

தமை, பின்னுளில் தம்பியர் மூவரும் தம் மக்களில் ஒவ்வொருவரைத் தமக்கையாரின் மக்களுக்கு மணஞ் செய்வித்ததால் புலனுகும். பிள்ளை தமது மூத்த மகள் ஸரோஜினியைத் தம் இரண்டாவது மருமகன் எஸ். எஸ். இராமசுவாமிக்கு மணம் செய்வித்தார். சங்கரலிங்கம் பிள்ளை தமது முதல் மகன் சரவணப்பெருமாளுக்குத் தம் மருமகள் செல்லம்மாளை வாழ்க்கைத் துணைவியாக்கினுர். நடராஜபிள்ளை மூன்முவது மகள் மீனுகூநியை மருமகன் சிவஞானத்திற்கு மணமுடித்து வைத்தார். குடும்பத்தில் நிலவிய அமைதியையும் கட்டுப்பாட்டுணர்ச்சியையும் இது விளக்கமுறச் செய்கிறது.

இளமைப் பருவத்திலும் பிள்ளைக்குப் பல பொறுப்பான வேலைகள் இல்லாமலில்லை. தாம் கல்வியில் முன்னேற்றமடைந்து வருதல்போல் தம் தம்பியரும் வர வேண்டும் என்ற அவா இவருக்கிருந்தது. தந்தையார் வெளியூரில் இருந்தமையால் தம்பியரைக் கவனிப்பது தமது பொறுப்பு என்றே கருதி வந்தார். சங்கரலிங்கம பிள்ளையும், நடராஜபிள்ளையும் அறிவாற்றலில் தமையனுருக்கு இளைத்தவர்களல்லர். சகோதரர் மூவருக்கும் சங்கீதத்திலும் பயிற்சி இருந்தது. சங்கரலிங்கம் பிள்ளைக்கு அத்துறையில் தீவிரமான ஈடுபாடு உண்டு. இவர் ஹிந்துகலாசாலையில் ஆரும் பாரத்தில் படித்துக் கொண்டிருந்தபொழுது பள்ளியில் ஏதோ தகராறு காரணமாக அங்கே படிக்க மறுத்துவிட்டார். தமையனுர் வார்த்தைகளை என்றுமே தட்டாத அவர் அம் முறை பிடிவாதமாகப் பள்ளி செல்ல மறுக்கவே, பிள்ளை சாத்தூரில் தம் நண்பர் ஒருவர் வேலை பார்க்கும் பள்ளிக்கு அனுப்பிவைக்க, அங்கும் படிப்பில் நாட்டம் செலுத்தாது மீண்டும் நெல்லைக்கே வந்துவிட்டார். தமையனுரோ எளிதில் இவரை விட்டு விடுவதாக இல்லை. அடுத்த வருடம் தம்பியை வற்புறுத்தி நெல்லையில் மிஷன் பள்ளியில்

சேர்த்துப் படிக்கச் செய்தார். அவ்வருடம் சங்கரலிங்கம் பிள்ளை சிறந்த மதிப்பு எண்கள் வாங்கி மெட்ரிக்குலேஷனில் தேறினார். பிறகு தொடர்ந்து F. A. படித்துத் தேர்வில் வெற்றி பெறாததால் மீண்டும் சோர்வுற்றார். மேலே படிக்க விருப்பமின்மையால் தமது பாட்டனார் வேலையாகிய கிராமமுன்சீப் வேலையில் அமர்ந்தார்.

அவருக்கு இளையவரான நடராஜபிள்ளை படிப்பில் கருத்துடையவர். Intermediate முடிய ஹிந்துகலாசாலையில் படித்து மேற்படிப்புக்குத் திருவனந்தபுரம் மஹாராஜா கல்லூரியில் சேர்ந்து 1921-ல் B. A. பட்டம் பெற்றார். உடன்பிறந்தார் இருவரையும் மேலும் படிக்கவைத்து, நல்ல நிலைக்குக் கொண்டு வரவேண்டுமென்பது பிள்ளையவர்களது அவா. அதிலும், இளையவர் படிப்பில் ஊக்கமுடையவராக இருந்ததால் அவரை மேல்நாட்டுக்கு அனுப்பிவைக்க வேண்டுமென்றுகூட இவர் நினைத்ததுண்டு. ஆனால் அது நடைபெறவில்லை. L. T. வகுப்புத் தேர்ச்சிபெற்று நடராஜபிள்ளை சிறந்த தலைமை ஆசிரியர் என்ற தகுதியுடன் அத் துறையிலேயே அமைந்துவிட்டார்.

நடராஜபிள்ளை, காலஞ்சென்ற தம் அருமைத் தமையனாரின் பேரன்பு குறித்துப் பின்வருமாறு தெரிவித்துள்ளார்: "சாதாரணமாகச் சகோதரர்கள் வளர வளர, அவரவர்களுடைய குடும்பம் பெருகப்பெருக, அவர்களிடையே யுள்ள அன்பு தேய்ந்து மாய்ந்துபோவது உலக இயல்பு. அதுவேயன்றி, பாகம் வைத்தல் முதலிய காலத்தில் சண்டை சச்சரவுகள் மூண்டு மனக்கசப்பு ஏற்படுவதுமுண்டு. எங்கள் சகோதரவாஞ்சை இவ்வித மனவேற்றுமைகளுக்கெல்லாம் இடம் தராதது. நாளுக்கு நாள் வளம்பெற்று ஓங்கி வளர்ந்து இணையற்றுத் திகழ்ந்தது."

## திருமணமும் சென்னை வாழ்க்கையும்

திருவனந்தபுரத்தை அடுத்த பாலராமபுரம் என்ற சிற்றூரில் சைவ வேளாள மரபில் தோன்றிய எஸ். வேலாயுதம் பிள்ளை என்ற செல்வர் ஒருவர் இருந்தார். சிறந்த அறிவாளி. உலக அநுபவம் மிக்குடையவர். முண்டகக்கயம் என்ற ஊரில் வேலை பார்த்து வந்த இவர் தம் ஒரே மகள் சிவகாமியைத் திருவனந்தையில் நெருங்கிய உறவினர் ஒருவர் வீட்டில் படிப்பதற்கு விட்டுவைத்தார். வயது பன்னிரண்டு நிரம்பும்போது திருவனந்தபுரத்தில், 'மஹாராஜா பெண்கள் பள்ளி'யில் மூன்றும் அமைப்பு முடியப் படித்திருந்தாள். அதற்குமேல் மகளைத் தம்மிடமே வைத்துக் கொள்ள விரும்பிய பெற்றோர், தம் இருப்பிடம் அழைத்துச் சென்று சங்கீதம், தையல் முதலிய கலைகளைக் கற்க ஏற்பாடு செய்தனர்.

வேலாயுதம் பிள்ளை தம் ஒரே பெண்ணுக்குப் 'படித்த' மாப்பிள்ளை ஒருவரைத் தேடிவந்தார். 1912-ம் ஆண்டு சென்னையில் கிறிஸ்தவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த பிள்ளையவர்களைப் பற்றிக் கேள்வியுற்று அவரையே தம் மருமகனாக்க நிச்சயித்து விட்டார்.

தாயார் பாப்பம்மாள் மகனுக்கு மணம் செய்வதைப் பற்றிச் சிந்திக்கு முன்னரே, திடீரென்று ஒரு நாள் வேலாயுதம் பிள்ளை திருமணம் பேச வந்தார். முடிவு கட்டவேண்டிய முழுப்பொறுப்பும் அம்மையாருடையது என்பது அவருக்குத் தெரியும். அக்கால வழக்கப்படி குலம் கோத்திரம் சரிப்பட்டுக் கொடுக்கல் வாங்கல் திருப்திகரமாய் அமைந்து விட்டால் திருமணம் நடந்தேற வேறு தடையிராது.

பாப்பம்மாளுக்கு இந்தச் சம்பந்தம் மிகப் பிடித்திருந்தது. சங்கரநயினார் கோயிலில் அலுவல் பார்த்து வந்த சரவணப்பெருமாள் பிள்ளையவர்களும் இச்சம்

பந்தம் தமக்குப் பூரண திருப்தியென மனைவிக்குத் தெரிவித்தார். திருமணம் மணமகள் இல்லத்தில் நடை பெற ஏற்பாடாயிற்று.

சம்பந்திகள் இருவரது முதல் சந்திப்பைக்குறித்த விநோத நிகழ்ச்சியை அவர்கள் தாமே பலமுறை பேரப் பிள்ளைகளிடையே சொல்லிச் சொல்லிச் சிரித்து மகிழ் வதுண்டு. இந்த நாடகளிற் போல ரயில் வசதி அப் பொழுது கிடையாது. தபால் வண்டிகள் மூலம் தான் ஊர்விட்டு ஊர் செல்ல வேண்டும். ஆகவே, திருமணத்திற்கு இரண்டு தினங்களுக்கு முன்னமே மாப்பிள்ளை வீட்டார் வந்து அவர்களுக்கென நியமித்திருந்த பங்களாவில் இறங்கினார்கள். மாப்பிள்ளையின் தகப்பனார் மட்டும் விவாகத்திற்கு முன்தினம் வந்து சேர்வதாகத் தகவல் தந்திருந்தார்.

பாலராமபுரத்தில் ஒரே பரபரப்பு. 'அப்பாத்திரி ஐயா' வீட்டுக் கல்யாணம். கேட்கவா வேண்டும்?... அவ் வூருக்குப் பெரிய மனிதர் அவர். பொழுது விடிந்தால் திருமணம் ஆடம்பரமாக நிகழ இருந்தது. சம்பந்தி ஐயா மட்டும் வந்து சேரவில்லையே யென்று வேலாயுதம் பிள்ளை கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். மாலை மயங்கும் வேளை. நீறு பூசிய மேனியுடன் பஞ்ச கச்சமும் மேலாடையும் அணிந்து, கையில் ஒரு பிரம்புப் பெட்டியுடன் கல்யாண வீட்டிற்குள் நுழைந்தார் ஒருவர். வந்தவர், பெண்ணின் தகப்பனார் இன்னாரெனக் கேட்ட றிந்து கொண்டு நேராக அவரிடம் சென்று "முதலில் எனக்கு ஸ்நானத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று தயக்கத்துடன் கேட்டார். வேலாயுதம் பிள்ளை "வர வேண்டியவர் வரக்காணோம்......ஊம்" என்று மேலும் ஏதோ முணு முணுத்துக் கொண்டு, அருகில் நின்ற ஒருவரிடம் இவரை ஒப்படைத்துக் கவனிக்கும்படி ஜாடை

காட்டி விட்டு, தம் சம்பந்தியை எதிர்நோக்கி வாசலில் நின்று கொண்டிருந்தார். நல்ல வேளையாக, சம்பந்திகள் இருவரையும் அறிந்த ஒருவர் ஓடோடி வந்து, "என்ன! நீங்கள்...? இப்படி......வந்தவர்தாம் மாப்பிள்ளையின் தகப்பனார்," என்று தெரிவித்தார். இருவருக்கும் அறிமுக மானபின் ஒருவரையொருவர் கட்டித் தழுவிய காட்சியைப் பந்தலிற் கூடியிருந்தோர் மட்டுமே கண்டு களித்திருக்க முடியும்.

திருவாளர் எஸ். வையாபுரிப்பிள்ளைக்கும் திருமதி சிவகாமி அம்மாளுக்கும் 1912-ம் வருடம் ஜூன் மாதம் ஐந்தாம் நாள் (அதாவது, 1087-ம் ஆண்டு வைகாசி மாதம் 23-ம் நாள்) புதன்கிழமையன்று திருமணம் விமரி சையாக நடைபெற்றது.

## சென்னை வாழ்க்கையும் நண்பர்களும்

மணமகனுக்கு B. A. யில் ஒரு பிரிவு அதாவது சரித் திரம் ஒன்று தேர்ச்சி பெற இருந்தமையால் சென்னை சென்று படிக்க விரும்பினார். மாமனார் சென்னையில் ஜார்ஜ்டவுனில் சிங்கார நாயக்கன் தெருவிலுள்ள ஒரு கட்டிடத்தை வாடகைக்கு அமர்த்தித் தம் அருமை மகளையும், மனைவியையும் உடன் அனுப்பிக் குடித்தனத் திற்கு ஏற்பாடு செய்தார். சென்னையில் பிள்ளையவர் களோடு ஓரே கட்டிடத்தில் வசித்து வந்தவர்கள் ஸர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களும் சுவாமி நாத பிள்ளையவர்களும் ஆவர். இருவரும் தம் மனைவியருடன் அக்கட்டிடத்தின் வெவ்வேறு பகுதிகளில் வசித்து வந்தனர். மூன்று குடும்பங்களுக்கும் பிரிக்க முடியாத இணையற்ற நட்புறவு இருந்து வந்தது. சுவாமிநாத பிள்ளையும் பிள்ளை யவர்களும் ஒருவரையொருவர் "அத்தான்" என்றே அழைப்பார்கள்.

நண்பர் மூவரும் ஒரே கட்டிடத்தில் சென்னையில் வாழ்ந்து வந்த நாட்களை அடிக்கடி நினைவுபடுத்தி என் தந்தையார் பேசி மகிழ்வார்.

ஒரு நாள் இவரும் நண்பர்களும் கல்லூரியிலிருந்து வீட்டுக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். செட்டியாரும் சுவாமிநாத பிள்ளையும் ஒரு வேடிக்கை செய்ய நினைத்து, பிள்ளை உருவத்தில் சிறியவராகையால் எளிதாக வாசலில் மறைந்திருக்கச் செய்துவிட்டு, எதையோ பறி கொடுத்தவர்கள் போல் முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு வீட்டிற்குள் நுழைந்தார்கள். உள்ளே பேசிக் கொண்டிருந்த பெண்கள் மூவரும் கூட்டத்தில் ஒருவர் வராமையைக் கவனித்தார்கள். செட்டியார் பேச ஆரம்பித்தார். "எவ்வளவோ சொன்னோம், கேட்டாரா?...சரி— இனி என்ன செய்வது?" என்று சோகக் குரலில் சொன்னார். மற்றவரும் "இவ்வளவு தெரியாதா! என்ன அவசரமானாலும் கண்ட இடத்தில்..." என்று இழுத்தார். பெண்களுக்கு விளங்கிவிட்டது. நகரச் சுகாதார விதிகளை மீறி நடப்பவரைப் போலீசார் கைது செய்வது வழக்கமாதலால் பிள்ளையைப் போலீசார் பிடித்துச் சென்றதாகவே நம்பினார்கள். செட்டியார் மனைவி ஜயம்மாள், சிவகாமி அம்மாளின் பரிதாப நிலைகண்டு தன் கணவரிடம் "அவரை விட்டுவிட்டு நீங்கள் மாத்திரம் எப்படி வந்தீர்களாம்? எப்படியாவது..." என அவள் கெஞ்சிக் கேட்டு முடிப்பதற்குள் மேலும் ஒளிந்திருக்க விரும்பாத பிள்ளை அங்கே தோற்றமளித்தார். "அப்படி அவரை விட்டுவிட்டு நாங்கள் வந்துவிடுவோமா! உங்களுக்கேன் அது தெரியவில்லை?" என்று சிரிப்பொலிகளுக் கிடையே மறித்துப் பேசிப் பெண்பாலர் மூவரையும் குற்றவாளிகளாக்கினார் சுவாமிநாத பிள்ளை.

மூன்றுமாத காலம் இனிது கழித்து, பி. ஏ. தேர்வு எழுதி முடித்ததும் பிள்ளை மீண்டும் திருவனந்தபுரத்தை

யடைந்தார். அங்கே தம் மாமனார் புதிதாக விலைக்கு வாங்கிய வீட்டில் இருந்து கொண்டு சட்டக் கல்லூரியிற் சேர்ந்து படிக்கலானார். செட்டியாரும் சுவாமிநாத பிள்ளையும் தொழில்-துறையில் புகுந்தபின்னரும் பிள்ளையுடன் தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

# 2. அனந்தையில் வழக்கறிஞர்

## வழக்கறிஞரின் தமிழ்வளம்

1914-ம் வருடம் B. L. தேர்ச்சி பெற்றவுடன் திரு வனந்தபுரத்திலேயே இவர் உயர்நீதிமன்ற வழக்கறிஞராகத் தம்மைப் பதிவுசெய்துகொண்டு புத்தன்சந்தையில் ஒரு வீட்டில் குடும்பத்துடன் வசித்துவந்தார். தொழில்—துறையில் மனம் ஈடுபடவில்லை. பெயரளவிற்கு வேலை பார்த்து வந்தாரே தவிர, சிந்தனை செயல் எல்லாம் தமிழாராய்ச்சி நோக்கி நின்றன. நீதிமன்றத்திற்குப் போகும் நேரம் தவிர மற்ற நேரமெல்லாம் தமிழ் நூல்களையும், அவ்வப்போது வடமொழி—ஆங்கில நூல்களையும் பயில்வதுண்டு.

பிரதேச மொழியாகிய மலையாளத்தையும் கற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டமையால் அதையும் ஓரளவு கற்றுத் தேர்ந்தார். பின்னாளில் மொழியாராய்ச்சிக்கு இப் பன்மொழியறிவு பயன்படுவதாயிற்று.

வழக்கறிஞர் தொழிலால் வரும்படி அதிகம் கிட்டாவிட்டாலும், இவரது லட்சியம் நிறைவேறத் திருவனந்தபுர வாழ்க்கை பெரிதும் துணைசெய்தது. இவர் முதல் முதல் பத்திரிகைகளுக்கு எழுத ஆரம்பித்ததும், தமிழ்ப் பண்டித உலகத்திற்கு அறிமுகமானதும், பல பேரறிஞர்களின் நட்புறவு பெற்றதும், பாரதியாரை முதல் முதல் சந்தித்ததும், பதிப்பாசிரியர் என்ற தகுதி பெற்றதும், திருவனந்த புரத்தில் இவர் வாழ்ந்துவந்த காலத்தில்தான் என்பதை இங்கே குறிப்பிடவேண்டும்.

பிள்ளையின் ஆழ்ந்த தமிழறிவையும், பண்பட்ட உள்ளத்தையும் அறிந்தவர் அனைவரும் அவரது நண்பர்களே. ஆயினும் இவரது இலக்கிய முயற்சிகளுக்குத் தூண்டுகோலாயிருந்து ஆராய்ச்சி-மன்னராகத் திகழ்வதற்கான சூழ்நிலையை ஏற்படுத்த உதவிய நண்பர்கள் ஒரு சிலரைப் பற்றி இங்கே தெரிவிப்பது நலமாகும், தமிழாராய்ச்சியிலும் சரித ஆராய்ச்சியிலும் பேராவல் கொண்டிருந்த நீதிபதி கே. ஜி. சேஷையரை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். பிள்ளையின் ஆராய்ச்சி வன்மையை நன்குணர்ந்த அவ் அறிஞர் இவரை அடிக்கடி வாயாரப் புகழ்ந்து மேலும் மேலும் இலக்கிய முயற்சிகளில் ஈடுபடச் செய்ததோடு, "நீ காலேஜுகளிலேனும் ஸர்வகலாசாலையிலேனும் தமிழாசிரியராக அமர்ந்தால் நலமாகும்" என்று கூறினராம். ஆசிமொழி பலித்ததை அந்த நீதிபதி உயிர்வாழ்ந்த காலத்திலேயே அறிந்து மகிழ்ந்தார்.

பிள்ளை வழக்கறிஞராக இருந்த காலத்தில் இவரது இல்லத்திற்கருகிலேயே கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை வசித்துவந்தார். இருபேரறிஞர்களும் ஒருவருக்கொருவர் அறிமுகமானதிலிருந்து சிலநாட்களிலேயே இணைபிரியா நண்பர்களாயினர். அப்பொழுது கவிமணி மகாராஜா பெண்கள் போதனமுறைக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தார். அநேகமாக ஒவ்வொருநாளும் இருவரும் சந்தித்து மணிக்கணக்காக இலக்கிய ஆராய்ச்சிகளில் ஈடுபடுவர். இவர்களுடன் தமிழறிஞர்கள் கே. என். சிவராஜ பிள்ளை, கே. என். குமரேச பிள்ளை, இசைப் புலவர் டி. இலக்குமணப் பிள்ளை, நீதிபதி கே. ஜி. சேஷையரின் மாப்பிள்ளை கே. ஜி. சங்கரையர் முதலியோரும் ஆராய்ச்சிகளில் கலந்துகொள்வதுண்டு. இவ் ஆராய்ச்சியாளர்கள் திருவனந்தபுரம் புத்தன் கச்சேரி மைதானத்தில் கூடுவது வழக்கம். மலையாள மூதறிஞர்களாக விளங்கிய திவான் பகதூர் கோவிந்தப் பிள்ளையும், எம். ஸி. நாராயணப்

பிள்ளையும் இளைஞராகிய இவரிடம் நட்புக்கொண்டு இலக்கிய ஆராய்ச்சிகளை மேலும் மேலும் தொடர்ந்து செய்ய ஊக்கமளித்துவந்தனர்.

கே. ஜி. சங்கரையர் பள்ளிப்பருவம்தொட்டுப் பிள்ளையுடன் மனமொன்றிய நண்பர். இவரது இடைவிடா முயற்சியாலும் தூண்டுதலாலும்தான் பிள்ளை பத்திரிகைகளுக்குக் கட்டுரை வரைய ஆரம்பித்தார். முதற்கட்டுரை புறநானூற்றுச் செய்யுள் ஒன்றுபற்றிய ஆராய்ச்சிக் கட்டுரையாகும். இதைச் செந்தமிழ்ப் பத்திரிகை தாங்கி வெளிவந்த வரலாற்றை 'அகராதி நினைவுகள்' என்ற தம் நினைவுக்குறிப்புக்களில் இவரே எழுதியுள்ளார்.

"சேரர் தலைநகராகிய கருவூர் எங்கிருந்தது என்ற கேள்வியானது அக்காலத்துத் தமிழ் வித்வான்களிடையே பெரிதும் விவாதிக்கப்பட்டு வந்தது. செந்தமிழ்ப் பத்திரிகாசிரியராயிருந்த திருநாராயணையங்கார் ஒரு புறமும், ஸேதுஸமஸ்தான வித்வான் ரா. ராகவையங்கார் எதிர்ப்புறமாகவும் பத்திரிகைமூலமாய்த் தருக்கித்து வந்தனர். எனது நண்பர் கே. ஜி. சங்கரையரும் நானும் இப்பத்திரிகைகளை வாசித்து வந்தோம். ஒருமுறை ராகவையங்கார் புறநானூற்றில் 13-ம் செய்யுள் சேரரது கருவூர் சோழநாட்டை அடுத்துச் சேரரது உள்நாட்டிலிருந்ததென்பதை ஆதரிப்பதாகக் காட்டினர். இதனை மறுத்துத் திரு நாராணையங்கார் தமது தர்க்க வன்மையெல்லாம் காட்டி இப் புறநானூற்றுச் செய்யுள் தமது கொள்கைக்குச் சாதகமாயிருப்பதுபோல் பொருளுரைத்தனர்.

"இவர்கள் தமது தர்க்க நூற்பயிற்சி கொண்டு எதனையும் நிறுவி விடலாம் என்று நினைத்தார்கள். நச்சினார்க்கினியரைச் சாட்சிக் கூண்டில் ஏறச்செய்து, அவரைக் குறுக்கு மறுக்காகக் கேள்விகள் கேட்டு, தாம்

எழுதி யிருப்பதன் பொருள் தமக்குத் தெரியாது என்று சொல்லும்படி திருநாரணையங்கார் செய்தவிநோத ஆராய்ச்சி என்றும் தீராத நகைப்பிற்கு விளைபுலமா யுள்ளது. இக் கருத்தை நான் சங்கரையருக்குக் கூறி னேன். அவர் அப்படிக் கூறுவது உண்மையானால் அதைப்பற்றி எழுத வேண்டுமென்று ஐயவுணர்ச்சி மிகுதியும் தோன்றப் பதில் விடுத்தார்கள்.

“நானும் என் கருத்துப் புலப்பட இச் செய்யுள் பற்றி மிக விரிந்த கண்டனவுரை யொன்று பல பகுதி களாக எழுதினேன். இவ் உரை என்னைப் பண்டித உலகிற்கு அறிமுகமாக்கி வைத்தது. கண்டனவுரைப் பகுதிகளைக் கொடுத்து அவற்றிற்குக் கீழே தமது மறுப்புக்களையும் திருநாரணையங்கார் எழுதி வந்தனர். இவற்றால் எனது கண்டனவுரையின் நேர்மையும் தெளிவும் ஆராய்ச்சி வன்மையும்தான் தெள்ளத்தெளிய உணரப்படலாயின. எனக்குத் தமிழ் நாடு, யாழ்ப் பாணம் முதலிய பிரதேசங்களிலிருந்து புகழ்மாலைகள் வந்து குவிந்தன. இக்கண்டன வுரையை அடுத்து, தொல்காப்பியரது சமயம் பற்றிச் சில கட்டுரைகள் எழுதி, ‘அவர் ஜைன மதத்தினர்’ என்பதை நிறுவினேன். இது ஜைன உலகில் ஒரு கிளர்ச்சியை உண்டு பண் ணியது. ஜைனர்களது நன்மதிப்பு எனக்குக் கிடைக்கும் படிச் செய்தது.”

இந்த நிகழ்ச்சிகளுக்குப் பின் பிள்ளையவர்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல எழுதி வரலாயினர். அவை **செந்தமிழிலும் தமிழர் நேசனிலும்** அடிக்கடி வெளிவந்து கொண்டிருந்தன. இவ்வித ஆராய்ச்சிகளுக்கு விளைபுல மாய் அமைவது பன்மொழிப் புலமை. பிள்ளைக்கோ இதற்கு வாய்ப்பு நிரம்ப இருந்தது. இளமைப் பருவத் தில் தந்தையாரின் வற்புறுத்தலினால் வடமொழியும்

கற்றிருந்தார். திருவனந்தபுரத்தில் இருந்த போதும் அம் மொழிப் புலமை மேலும் செழிக்க வடமொழி நூல்கள் பலவற்றைப் படித்து வந்தார். இவரும் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையும் அதிகாலையில் எழுந்து வடமொழி யிலுள்ள சப்த ரூபாவலியை மனப்பாடஞ் செய்து வந்தார் கள். லகுசித்தாந்த கௌமுதியை, கவல் (Cowell) எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்பின் உதவிகொண்டு பிள்ளை தமிழில் முழுவதும் பெயர்த்து வைத்துள்ளார். அது இன்றும் இவர் நூலகத்திலுள்ளது. அரண்மனை நூல் நிலையத்திலிருந்து கிடைத்த மிகப் பழைய ஏட்டுப் பிரதி யுடன் கம்பராமாயணத்தை ஒப்பிட்டுப் பார்த்துப் பாட பேதங்களையும் குறித்து வைத்துள்ளனர். இவ்வாறு வட மொழி, தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களை நுணுகிக் கற்றதோடு பிறநாட்டு ஆராய்ச்சியாளர் கொள்கைகள் பற்றிய ஆங்கில நூல்களையும் இவர் வாசித்தறிவதுண்டு.

## பாரதியாரும் வையாபுரிப்பிள்ளையும்

திருவனந்தைத் தமிழர்கள் முயற்சியால் சைவப் பிரகாச சபை என்ற ஓர் இலக்கிய மன்றம் செயலாற்றி வந்தது. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் திருக்குறளா ராய்ச்சியும், வேறுபல இலக்கிய இலக்கண ஆராய்ச்சி களும் நடை பெற்று வந்தன. ஆனால் ஆராய்ச்சி முற்ற முற்றக் கருத்து வேறுபாடுகளும் முற்றிக் குழப்பத்தை உண்டாக்கின. அச்சபை கலையும் நிலைக்கு வந்த காலத்து வையாபுரிப் பிள்ளை அதன் நிர்வாகப்பொறுப்பை ஏற்றார். இவர் காரியதரிசியாக வந்தபின்தான் சைவப் பிரகாசசபை அடங்கி ஆராய்ச்சிக்கு நிலைக்களமாகப் பிரகாசிக்க ஆரம் பித்தது. இச்சபை செயலாற்றிய திறத்தையும், பாரதி யாரைக் காணும்பேறு தமக்குக் கிடைத்தமைபற்றியும் இவரே குறிப்பிட்டிருக்கிறார்.

"ஒவ்வொரு நாளும் மாலையில் புத்தன்சந்தையி லுள்ள சைவப்பிரகாச சபையில் நானும் வேறு சில நண்பர்களுமாகக் கூடிக் காலம் போக்குவது வழக்கம். ஞாயிற்றுக் கிழமைகளில் திருக்குறள் ஆராய்ச்சி நடை பெற்று வரும். இந்தக் காலங்களில் ஆராய்ச்சி நடப் பதற்குப் பதிலாக அடிக்கடி வாதப்பிரதிவாதங்களும், ஒரு சில சமயங்களில் வாதம் முற்றிச் சண்டை சச்சரவு களுங்கூட நிகழும்.

" 1918-ம் வருஷம் நவம்பர் மாதம் ஒரு ஞாயிற்றுக் கிழமை சுமார் 3 மணியிருக்கும். சைவப்பிரகாச சபை யில் நானும் நண்பர்களுமாக வழக்கம்போல் திருக்குறள் ஆராய்ச்சி நடத்தக் கூடியிருந்தோம். வந்து சேரவேண்டி யவர்களை எதிர்பார்த்து எதிர்பார்த்துச் சிறிது சலிப்புற் றோம். யாரேனும் வருகிறார்களா என்று வாசற்படியில் நின்று நான் எட்டிப்பார்த்துக் கொண்டிருந்தேன்...... அப்போது வாசல் நடையை அடுத்துள்ள பெரிய தெருவில் ஒருவர் போய்க்கொண்டிருந்தார். சுமார் முப்பத்தைந்து வயதிருக்கலாம்; கம்பீரமான தோற்றம்; நடுத்தரமான உயரம்; வீரபுருஷனுக்குரியதோர் நடை; ஆவலுடன் கூர்ந்து கவனிக்கும் அஞ்சாத பார்வை; புருஷலக்ஷணமான மீசை.

" வீதியில் போய்க்கொண்டிருந்தவர் சைவப்பிரகாச சபை என்று தமிழில் எழுதித் தொங்கவிட்ட பலகை யையும், அங்கே நின்று கொண்டிருந்த ஒரு சிலரையும் பார்த்தார்......திடீரெனச் சபையினுள்ளே புகுந்தார். அங்கே நின்று கொண்டிருந்த என்னை நோக்கித் தாம் யாரென்று தெரியுமா எனக் கேட்டார். பாரதியாராக இருக்கலாமோ என்று சந்தேகித்தேன். ஆனாலும் திருவனந்தபுரத்திற்கு வரக் காரணமில்லையே யென்று நான் நினைத்து, 'தெரியவில்லையே' என்று சிறிது வருத்தத்

துடன் சொன்னேன். தாமே 'சுப்ரமண்ய பாரதி' என்று தெரிவித்தார்.

"எனது நெல்லை நண்பர்களுள் ஸ்ரீ வ. வேதநாயகம் பிள்ளையவர்களும், ஸ்ரீ. சோமசுந்தர பாரதியவர்களும் ஸ்ரீ. பி. ஸ்ரீ. ஆச்சார்யா அவர்களும் என்னிடத்தில் சுப்பிரமண்ய பாரதியின் அபாரமான கவித்வ சக்தியை அடிக்கடி பாராட்டிப் பேசியிருக்கிறார்கள். பாரதியின் உயிர்த்தத்துவம் நிறைந்த பாடல்களை நானும் வாசித்து இன்புற்றிருக்கிறேன். ஆனால் அன்றுதான் அவரை நேரிற் சந்தித்தது.

"இன்னாரென்று தெரிந்ததும் எனக்கு இன்னது செய்வதென்று புரியவில்லை. சிறிது நேரம் தயங்கி நின்றேன்; பிறகு உள்ளே அழைத்துச் சென்று உபசரித்தேன். அங்கே கூடியிருந்தவர்களுக்கு அறிமுகம் செய்வித்தேன்."

பிள்ளையவர்ளுக்கு அவருடைய பாடல்களை நேரிற் பாடிக் கேட்க வேண்டுமென்ற ஆவல் மிகுதியாக இருந்தமையால், அதுதான் தக்க சமயமென்று 'சின்னஞ்சிறு கிளியே' என்ற பாடலைப் பாடும்படி அவரைக் கேட்டுக்கொண்டார். பாரதியாரும் முகத்திலே ஒரு பொலிவு தோன்ற அன்பு ததும்பும் சாரீரத்தில் பாடி அங்கிருந்தோரைப் பரவசமடையச் செய்தார். பின்னர் 'ஊழிக்கூத்து'ப் பாடும்படி இவர் வேண்ட, அதையும் அவர், உலகம் தகர்வது ஊழிமுடிவது எல்லாம் கண்முன் நிகழ்வது போலப் பிறர் உணரும் வகையில் பாடினாராம். பாரதியாரின் சொற்பொழிவு ஒன்று ஏற்பாடு செய்ததில், பாரதியார் ஒப்புக்கொண்ட போதிலும் அவர் அரசாங்க விரோதியென்று கருதி அங்கத்தினர்கள் ஒப்புக் கொள்ளாததால் பிள்ளையின் முயற்சி வீணாயிற்று.

"இதற்கப்புறம் பாரதியைக் காணும் பேறு எனக்கு வாய்க்கவில்லை. ஆனால் அவருடைய திருமுகத்தை என்

கண்கள் மறக்கவில்லை. கம்பீரமும் ஆண்மையும் அன்பும் நிரம்பிய அவருடைய சாரீரத்தை என் செவிகள் மறக்க வில்லை. அவருடைய பாடல்களை என் மனம் என்றேனும் மறக்குமா?'' என்றெல்லாம் உருக்கமாகத் தெரிவித் துள்ளமை பாரதியாரிடம் இவர் வைத்திருந்த பெரு மதிப்பைக் காட்டுகிறது.

## மனோன்மணீய வெளியீடு

பேராசிரியர் பி. சுந்தரம்பிள்ளை மனோன்மணீயம் என்ற சிறந்த தமிழ் நூலை 1891-ம் வருடம் இயற்றி வெளி யிட்டார். இது நாடக நூல்களுள் தலைசிறந்து விளங்கு வது அறிஞர்கள் நன்கறிந்ததே. இந்நூல் அச்சிட்ட சில வருடங்களுக்குள்ளே செலவாகிவிடவே, அதன் இரண்டா வது பதிப்பு ஒன்று வெளிவர வேண்டிய அவசியத்தைத் தமிழ் மக்கள் உணர்ந்தனர். சென்னைச் சர்வகலாசாலை யார் இந்நூலின் சில பகுதிகளைப் பாடமாக வைத்திருந் தமையால், மாணவர்களும் இதன் பிரதிகள் கிடைக்கப் பெறாது வருந்தினர். இந்நிலையில் மனோன்மணீயத்தின் இரண்டாம் பதிப்பு ஒன்று வெளியிடும் ஆர்வம் இவருக்கு இருந்ததை அறிந்த நூலாசிரியரின் மைந்தர் திரு பி. எஸ். நடராஜபிள்ளை நூலைப் பதிப்பிக்க இவருக்கு அநுமதி தந்தனர்.

நாடகாசிரியர் தாமே குறித்திருந்த விளக்கக் குறிப்புக் களோடு, மேலும் அவசியமான இடங்களில் வேறு பல குறிப்புக்களும் எழுதிச் சேர்த்து வையாபுரிப்பிள்ளை 1922-ம் வருடம் மனோன்மணீயத்தின் இரண்டாம் பதிப்பை வெளியிட்டார். கவிமணியும் இவ் வெளியீட் டிற்குத் துணை புரிந்தார். கற்போருக்குப் பயன்படும் படியாக அரும்பத அகராதி ஒன்று பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இதன் மூலநூலாகிய லிட்டன்பிரபு

எழுதிய 'The Secret Way' என்ற ஆங்கிலக் கவிதையையும் இந்நூலிற் காணலாகும்.

'மலபார் குவார்டர்லி ரெவியூ', 'பீபில்ஸ் ஒபீனியன்' என்ற பத்திரிகைகளின் ஆசிரியராக விளங்கிய கே. என். சிவராஜபிள்ளை ஆராய்ச்சி முறையில் எழுதிய ஆங்கில முகவுரையும், நீதிபதி கே. ஜி. சேயர் ஷேக்ஸ்பியர் நாடகங்களுக்கு டாக்டர் மோவ்டன் எழுதியுள்ள ஆராய்ச்சிமுறையைப் பின்பற்றி இந்நூல் குறித்து முன்பு எழுதியிருந்த ஆராய்ச்சியுரையின் ஒரு சிறு பகுதியும் இப்புதிய பதிப்பை அணி செய்தன.

இதுவே பிள்ளை பதிப்பித்த முதல் நூலாகும். சிறந்த பதிப்பாசிரியப் பண்புகள் அமையப் பெற்றவர் இவர் என்பதை முதன் முதலில் தமிழுலகம் அறியலாயிற்று.

## நெல்லையில்: நண்பர்களும் தமிழாராய்ச்சியும்

திருவனந்தை வாழ்க்கை பிள்ளைக்குச் சலிப்பைத் தந்தது. உள்ளம் வேறு ஏதோ ஒன்றை அவாவி நின்றது. பொருள் வருவாயும் குடும்பத்தைப் பாதுகாக்கப் போதிய தாக இல்லை. எனவே, தம் சொந்த ஊரில் வழக்கறிஞர் வேலை பார்க்கத் தீர்மானித்து, 1923-ம் ஆண்டு குடும்பத்துடன் நெல்லை வந்து சேர்ந்தார். கம்ப ராமாயண ஆராய்ச்சி யொன்றே இவர் மனங்கொண்ட பேராவல். அது நிறைவேற இங்குப் போதிய வசதிகள் கிடைத்தன.

"1926 நவம்பர் இறுதியில் நான் தமிழகராதிக்குப் பதிப்பாசிரியராக நியமனம் பெற்றேன். நான் அப்பதவி பெறுவதற்கு முன் திருநெல்வேலியில் வக்கீல் தொழிலில் அமர்ந்திருந்தேன். எனது பொழுதெல்லாம் பெரும்பாலும் தமிழ் நூல்களைக் கற்பதிலும், ஆராய்ச்சி செய்வதிலும், கம்ப ராமாணப் பரிசோதனையிலும் கழிந்தது" என்று தாமே கட்டுரை யொன்றில் குறித்துள்ளார்.

திருநெல்வேலியில் வழக்கறிஞராக இவர் இருந்த காலத்தில், இவருடன் கம்பராமாயண ஆராய்ச்சியில் ஈடு பட்டவர்கள் எம். எஸ். சுப்பையா முதலியார், சக்கர பாணி நம்பியார், ஆதிமூர்த்தியா பிள்ளை, வண்ணார் பேட்டையில் ப. வேதநாயகம் பிள்ளை, டி. கே. சிதம்பர நாத முதலியார், ஆர். அனந்தராமையங்கார், ஏ. வி. சுப்பிர மணிய ஐயர், பிற்காலத்தே திருவாவடுதுறை யாதீனத் தமிழ் வித்வானாய் விளங்கிய சிதம்பர ராமலிங்கம் பிள்ளை, சி. வீரவாகு பிள்ளை முதலியோராவர். இவர்கள் கூடித் தமிழ் இலக்கிய இலக்கண நூல்கள் பற்றிய ஆராய்ச்சி கள் நிகழ்த்தி வந்தார்கள். அவற்றுள் கம்பராமாயண ஆராய்ச்சிதான் முதலிடம் பெற்றது என்பதை எடுத்துக் கூற வேண்டுவதில்லை.

இவர் நண்பர்களுடன் ஆராய்ச்சி நடத்தி வந்த நாட் களில் இவரது பள்ளித் தோழரான முத்தையா பிள்ளை வீரராகவபுரத்தில் புத்தகக் கடை யொன்று வைத்திருந் தார். பிள்ளையும் நண்பர்களும் மாலை நேரங்களில் புத்த கக் கடைப்பக்கம் செல்வது வழக்கம். அந்நேரங்களில் புத்தகக் கடையே ஆராய்ச்சி மேடையாகி விடுவதும் உண்டு. பாரதியார், வ. வே. சு. ஐயர், பி. ஸ்ரீ முதலியவர் களும் இதில் கலந்து கொள்வார்கள். நாளடைவில் புத்த கக் கடை கலைச் சங்கமாயிற்று!

பாரதியார் நெல்லையில் தங்கிய பொழுது பிள்ளை அனந்தையில் வசித்து வந்தமையால் பாரதியாரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு இவருக்குக் கிட்டவில்லை. ஆனால் வ. வே. சு. ஐயருக்கும் இவருக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. கம்பராமாயண ஆராய்ச்சியும் இவரது ஆழ்ந்த தமிழறிவும் ஐயரவர்களைக் கவர்ந்தன.

வ. வே. சு. ஐயர் கம்பன்—பாலகாண்டத்தைப் பதிப் பித்து வந்த காலம். அது. அப்பதிப்புப் பற்றிய சில கருத்துக் களைக் கலந்தறியும் நோக்கத்தோடு, அவர் நெல்லைக்கு

வையாபுரிப்பிள்ளையைப் பார்க்க வருவார். பிள்ளையும் அவர் நடத்திவந்த சேரன்மாதேவிக் குருகுலத்திற்கு அடிக்கடி செல்வதுண்டு. ஐயர் இறுதி நாள்வரை இவரது நெருங்கிய நண்பராக விளங்கினார்.

## நெல்லைக் கழகத்தில் கம்பர் திருநாள்

பிள்ளையும் இவருடன் தமிழாராய்ச்சி நடத்திவந்த நண்பர்களும் நெல்லையில் ஓர் இலக்கியக்கழகம் நிறுவத் துணிந்து 'நெல்லைக் கம்பர் கழகம்' என்ற பெயரால் 1923-ம் ஆண்டு ஒரு ஆராய்ச்சிக் கழகத்தை ஆரம்பித்து வைத்தனர். பெயருக்கேற்ப, கம்பராமாயண ஆராய்ச்சி செய்வதே இக்கழகத்தின் முக்கிய நோக்கம். இக் கழகத்தின் சார்பில் அவ்வருடம் விழா சிறப்பாக நடைபெற ஏற்பாடாகியிருந்தது.

"1923-ம் வருஷத்தில் கம்பர் விழா மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. சக்கரபாணி நம்பியார் விழா இனிது நடைபெறுவதற்கு வேண்டும் பொருள் திரட்டுவதில் பெருமுயற்சி எடுத்து வந்தார்கள். சுப்பையா முதலியார் முதலிய நண்பர்களும் பல வழிகளில் உதவி வந்தனர். இம் முயற்சிகள் ஒரு புறமிருக்க, வேறு சில ருசிகரமான சம்பவங்களும் நிகழ்ந்தன. டிஸ்டிரிக்ட் ரிஜிஸ்ட்ராராக இருந்த சபாபதிப்பிள்ளை விழாவில் 5 நிமிஷங்கள் பேசவேண்டுமென்று உயிர்ப்பிச்சை கேட்பது போல் இரங்கிக்கூறி, பின்பு அரைமணிக்கூறு கம்பன் பாட்டுக்களை இடைவிடாமற் பொழிந்து தள்ளியதை மறக்கவே முடியாது."

என விழா நிகழ்ச்சிகளைப் பற்றிப் பிள்ளை எழுதுகிறார். விழாவிற்குத் தலைமைதாங்கியவர் ஸ்ரீ ரா. ராகவையங்கார். பத்திரிகைவாயிலாக அறிமுகமான இப்பெரியாரை நேரிற்கண்டு அளவளாவும் வாய்ப்பு கம்பன் விழா நடைபெற்றபோது தான் இவருக்குக் கிடைத்தது.

கம்பன் விழாவிலே இவர் 'கம்பன் திருநாள்' என்ற பாவினைக் கட்டுரை யொன்று வாசித்தார். தென்னாடு செய்த அருந்தவத்தினாலும், தமிழன்னை பன்னெடுங் காலமாகத் திரட்டி வைத்துள்ள அரும் புண்ணியத்தின் பெரும் பயனாலும் கம்பர் பெருமான் தோன்றியதையும், கவித்வ சக்தியின் பெருமையினாலும் சடையப்பரது அன்பினாலும் உண்ணும் நீரினும் உயிரினும் இராமனையே நினைந்து, தமது ஆத்மதாகத்தைத் தணிக்கும் பொருட்டு இராமசரிதையைக் கம்பன் பாடிய பெருமையையும் இக் கட்டுரையின் முற்பகுதி விளக்கமாக எடுத்துரைக்கின்றது. பிற்பகுதி 'பங்குனி அத்த நாளில் அரங்கநாதன் திருச்சந்நிதியில் கம்பன் தன் பெருங்காவியத்தை அரங்கேற்றிய சிறப்பை வருணிக்கின்றது. சடையப்ப வள்ளலாரால் அழைக்கப் பெற்ற புலவர்களும் பிரபுக்களும் பள்ளத்துப்பாயும் தண்ணீர் போல நாற்றிசைகளினின்றும் வந்து சூழ, மண்டபத்தின் அகத்தும் புறத்தும் தமிழ் மக்கள் திரண்டுகூட, நடுவே பீடத்தில் கம்பன் எழுந்தருளிய காட்சியை ஓர் அற்புதக் கற்பனைக் காட்சியாகக் காட்டுகிறார் வையாபுரிப்பிள்ளை.

"திருமுகத்தே பேரறிவும், ஆழ்ந்த சாந்தியும், பெருங் கவித்வ சக்தியும் நர்த்தனம் புரிகின்றன; அவரது நயனங்கள் ஆழ்ந்து அகன்று உள்ளமனைத்தையும் ஒருங்கு தோற்றி விளக்குகின்றன; நோக்குவோரை யெல்லாம் வசீகரித்தமைகின்றன; அன்பு அலையெறிந்து படர்கின்றது. அறிவு கூர்ந்து விளங்குவதனையொப்ப அவரது நாசியும் நீண்டு கூர்த்திருக்கின்றது. அவரது உதடுகள் இளநகை அரும்பி விகசிக்கின்றன. அகன்ற மார்பும் திரண்ட புயமும் பேரழகு பயக்கின்றன. அவரது தடக்கைகள் தாள்களைத் தொட்டு நீண்டிருக்கின்றன. அவரது திருமேனி முழுவதும் தெய்வவொளி பரந்து சுடர்கின்றது. இப்புலவர் பெருமானையடுத்து யாரினு

மினிய பேரன்பினராகிய சடையப்ப வள்ளல் வீற்றிருக்கின்றனர்..............அரங்கநாதன் சந்நிதியில் இத்துணையளவாகச் சிறந்த திருக்கூட்டம் என்றும் இருந்ததேயில்லை யெனலாம். யாண்டும் கண்கள்! யாண்டும் செவிகள்! அனைவரும் ஏகாக்ரசித்தராய்க் கம்பர் பெருமானை நோக்கிய வண்ணமாயிருக்கின்றனர்.''

கம்பர் தமது காவியத்தை அரங்கேற்றிய சிறப்பைச் சித்தரித்து படிப்பவர் உள்ளத்தை யெல்லாம் கவர்ந்து விழாவிலே மெய்ம்மறந்து ஈடுபடச் செய்த பேராற்றல் பொருந்திய பாவனைக் கட்டுரை இவருக்கு மேலும் புகழ் தேடித்தந்தது. செந்தமிழ்ப் பத்திரிகையிலும் இக்கட்டுரை வெளிவந்தது.

இவருடன் கலாசாலையில் பயின்றவரும், இவரது தமிழாற்றலை நன்கறிந்தவருமாகிய திரு பி. என். அப்புஸ்வாமி ஐயர் சென்னையிலிருந்து நெல்லைக்கு ஒரு முறை வந்திருந்தபொழுது தாம் நடத்தி வந்த 'தமிழர் நேசன்' என்ற பத்திரிகைக்கு அடிக்கடி கட்டுரைகள் எழுதிக் கொண்டிருக்கும்படி இவரை வற்புறுத்தினர். பிள்ளை கம்பர் திருநாள் பற்றிய பாவனைக் கட்டுரையின் பிரதியொன்றைத் தம் நண்பரிடம் பிரசுரிப்பதற்கெனத் தந்தார். அவரும் அதனை வாசித்து மகிழ்ந்து தம் பத்திரிகையிலும் வெளியிட்டார். பிள்ளையின் தமிழ்த் திறத்தையும் ஆராய்ச்சி வன்மையையும் சென்னையிலுள்ள தமிழன்பர்களும் அறிவதற்கு இக்கட்டுரை காரணமாயிற்று.

# 3. பதிப்பாசிரியரின் ஆராய்ச்சித்திறம்

## தமிழகராதிப் பதிப்பாசிரியர்

சென்னைப் பல்கலைக் கழகம் தமிழ் லெக்ஸிகன் என்ற பெயரால் அகராதி யொன்றை வெளியிடத் தீர்மானித்து ரெவரண்டு ஜே. எஸ். சாண்ட்லரைத் தலைமைப் பதிப்பாசிரியராக நியமித்து அவ்வேலையை ஆரம்பித்து வைத்தது. இது 1913-ல் மதுரையில் தொடக்கமாகி 1915-ல் சென்னையில் தொடர்ந்து நடைபெற்று வந்தது. முதலில் இந்த லெக்ஸிகன் பொறுப்பு அரசாங்கத்தாரிடமிருந்து பின் 1917-ல் பல்கலைக் கழகத்தாரைச் சாரவே இவர்கள் அதுவரை நடைபெற்ற வேலையைப் பரிசீலனை செய்து திருப்திகரமாயில்லை யென்ற முடிவிற்கு வந்தனர். புதிய அகராதிக் கமிட்டி நியமிக்கப்பட்டது. கமிட்டித் தலைவர் சர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் 1919-ல் அகராதி வேலை சரியாக நடைபெறாததால் தாம் தலைமை வகிக்கமுடியாதென்று கூறிப் பதவியிலிருந்து விலகினார். 1921-ல், பதிப்பாசிரியப் பதவியில் இருந்த சாண்ட்லரும் விட்டு நீங்கவே, அதன் பின் 1926-வரை வேறு சிலர் பதிப்பாசிரியப் பொறுப்பேற்றுச் செய்த வேலையும் மிக மந்தமாகவே நடந்துவந்தது. பல்கலைக் கழகம் அகராதிவேண்டாமென்ற அளவுக்கு அதிருப்தியடைந்தது.

இந்த நிலையில் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் கமிட்டித் தலைவராக இருந்தார். அவர் அகராதி வேலைக்குத் தகுந்த ஒருவர் வேண்டுமென்ற கருத்தைத் தம் நண்பர் ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி ஐயரிடம் ஒரு நாள் தெரிவித்தார்.

ஐயரவர்களுக்கு உடனே பிள்ளையவர்களைப் பற்றிய நினைவு எழவே இவர் பெயரை எடுத்துக் கூறியதோடு அமையாது உடனே இவருக்குக் கடிதமூலம் 'உனக்கேற்ற வேலை இங்கிருக்கிறது. ஒப்புக்கொள்ளத் தயங்காதே' எனவும் அறிவுறுத்தினர்.

இப் பதவிக்கு இன்னும் போட்டிகள் இல்லாமலில்லை. இருந்தும் பிள்ளையவர்களின் உண்மைத் திறத்தை அறிந்த ஒரு சிலரின் ஆதரவால் இவரே அப்பதவிக்கு நியமனம் பெற்றார். இதுபற்றி மிக விரிவாகத் தமது அகராதி நினைவுகள் என்ற கட்டுரையில் பிள்ளையவர்கள் எழுதி யுள்ளதிலிருந்து ஒரு சிறுபகுதி இங்குக் குறிப்பிடுவது பொருந்துவதாகும்.

"நான் தமிழாராய்ச்சித் துறைக்கே உரியவன் என்று பள்ளிப்பருவ முதற்கொண்டு என்னை நான் கருதிவிட்ட போதிலும், எனது வாழ்க்கைத் துறையின் முழுப் போக்கும் அவ் ஆராய்ச்சித்துறை அமைந்து விடுமென்று நான் கனவிலும் நம்பியதில்லை. எனக்குரிய துறையில் நான் செல்லுவதற்குக் காரணமாயிருந்த பெ. நா. அப்பு ஸ்வாமி ஐயர், கே.வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர், சி.ஆர். நமச் சிவாய முதலியார் முதலிய பேரன்பர்களுக்கு நான் என் றும் கடமைப்பட்டுள்ளேன்."

பிள்ளையவர்கள் 1926, நவம்பர் 25-ல் பதிப்பாசிரியர் வேலையை ஒப்புக்கொண்ட பொழுது, ஸ்ரீ மு. இராகவை யங்கார்தலைமைப் பண்டிதராகவும், ஸ்ரீ வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார் வடமொழியும் தமிழும் வல்ல பண் டிதராகவும், ஸ்ரீ அ. சிங்காரவேலு முதலியார் சைவசித் தாந்த பண்டிதராகவும், ஸ்ரீ இ. எஸ். வரதராஜையர், ஸ்ரீ சுந்தரமூர்த்தி என்ற இருவரும் பி. ஏ. பட்டம் பெற்ற உதவியாளர்களாகவும் செயலாற்றிவந்தனர். பிள்ளை வேலை ஏற்றதுமே அகராதியின் அமைப்பு முறையை, அச்சு

இயற்றி முடியும்வரை எல்லா நிலைகளையும், நன்குணர்ந்து, அகராதி அலுவலகத்திலுள்ள அனைவருடைய ஒத்துழைப்பையும் பெற்று ஆண்டு ஒன்றுக்கு மூன்று பகுதிகள் வெளியிடத் திட்டமிட்டார். இத்திட்டம் நிறைவேற அல்லும் பகலும் பாடுபட்டார். அகராதி வேலை துரிதமாக நடைபெற்று வரலாயிற்று.

இந்த வேலையில் இடர்ப்பாடுகள் பல இருந்தன. நன்கு பரிசோதித்து வெளியிடப் பெறாத நூல்களிலுள்ள பிழைபட்ட சொற்கள் முன்பே அகராதியில் இடம் பெற்றிருந்தன. அவ்வாறு மேலும் நேராதபடி பார்த்துக் கொள்ள வேண்டிய பெரும் பொறுப்பு, பிள்ளையவர்களுக்கு இருந்தது. தமிழ்ப் பொருள்களைத் தருவதையும் அதிகக் கவனத்துடன் செய்து வந்தார். சொல்வழக்கையும், பொருள் நியதிகளையும் நன்குணர்ந்தாலன்றி இவற்றைப் பிழையின்றித் தரமுடியாது. குறித்த கால எல்லைக்குள் எவ்வளவு திருத்தமாக அகராதியை இயற்ற முடியுமோ அவ்வளவையும் செய்து வந்ததாகத் தாமே குறித்துள்ளார்.

## அகராதி வேலையிற் சில அநுபவங்கள்:

உவின்ஸ்லோ அகராதியை ஜி. யூ. போப் அவர்கள் செய்த ஒரு சில திருத்தங்களுடன் பதிப்பிடுவதே முதலில் அகராதிக் குழுவினர் நோக்கமாக இருந்தது ஆனால் இலக்கிய இலக்கண நூல்கள் பதிப்பிக்கப் பெறுவதற்கு வெகு காலமுந்தியது அவ் அகராதி யாகையால், அந்நூல்களிற் காணப்பெற்ற பண்டைச் சொற்கள் பல அவ் அகராதியில் இல்லை. தமிழ் நாட்டில் வழங்கப் பெறும் சொற்களிலும் அநேகம் அதில் இடம் பெறவில்லை. வேறு பற்பல தொழில்பற்றிய சொற்களும், சாஸ்திரங்களுக்குரிய சங்கேதச் சொற்கள் பலவும் அதில் இல்லை. கல்வெட்டுச் சொற்கள் அவ் அகராதியில் இல்லவே இல்லை.

இம்மாதிரியான பலவேறு குறைகளையும் போக்கு வதற்குப் பல துறைகளிலுமுள்ள நூல்களைப் படித்து, கல்வெட்டுக்களை ஆராய்ந்து, புதுப்பதங்களையும் தொகுக்க வேண்டியதாயிற்று. அகராதி அலுவலகம் இத்துறையில் முனைந்து நின்றதோடு அவ்வவ் இடங்களில் கௌரவ உசாத் துணைவர்களாக, கவிமணி, பி. ஸ்ரீ. போன்ற பேரறிஞர்களை உதவும் படியும் கேட்டுக் கொண்டார்கள். இவ்வாறு பல வகையிலும் உதவிபெற்றுத் தமிழகராதியைத் தொகுக்கும் முயற்சியில் ஈடுபட்டார் வையாபுரிப்பிள்ளை.

தமிழ்அகராதி பதிப்பித்த காலத்தில் தமக்கு ஏற்பட்ட சில அநுபவங்களைப்பற்றி விரிவாகப் பிள்ளையவர்களே எழுதியுள்ளார்:

"ஒரு சில செய்திகள் என் நினைவில் அழுந்திக் கிடக்கின்றன. சைவ சித்தாந்தப் பதங்களைச் சேர்க் கும் பொழுது 'குய்யதராட்டக புவனம்' முதலிய முந் நூற்றுச் சொச்சம் புவனங்களும் வரிசையாகக் கார்டு களில் எழுதப்பட்டன. இவற்றை நான்பார்த்ததும் திடுக் குற்றேன். ஒவ்வொரு சமயத்தினரும் தங்கள் சமயத் தினர்க்கெனக் கற்பித்துக் கொண்ட புவனங்களைச் சேர்ப் பதானல் இப் புவனங்களுக்கே 5 அல்லது 6 அகராதி கள் தேவையாகும். இவற்றை நுட்பமாய் விளக்குதலும் அரிய செயல்; பயனும் சிறிதளவும் இல்லை. இந்தக் கற் பிதங்களுக்குத் தமிழ் லெக்ஸிகனில் இடமில்லை எனக் கூறி நிறுத்தினேன். ஆனால் ஏற்கெனவே சில புவனங் கள் லெக்ஸிகன் ஆட்சிக்குள் அமைந்து விட்டன. வேறு சில பதங்கள் நூற்பதிப்பாளர்கள் தவறுகளை ஆராயாத தால் புதிதாகக் கொள்ளப்பட்டன. சிலப்பதிகாரப் பதிப்பில் வாழ்த்துக் காதையில், 'பாவைமா ராரிக்கும் பாடலே பாடல்' என்று ஓரடி கொடுக்கப்பட்டிருக் கின்றது. இதன் பொருள் 'ஒலித்தல்' எனக் காண்

கின்றது. ஆரித்தல் என்பது தமிழ் மொழிக்கே புதிது. ஏட்டுப் பிரதிகளில் 'ஆரிரக்கும்' என்றே உள்ளது. எனவே 'ஆரித்தல்' என லெக்ஸிகனில் காணும் பதம் தவருனதாகும்......

"லெக்ஸிகன் அலுவலகத்திலேயே எழுத்துக்கள் செவ்வையாய் அமையப் பெருமையால் நேர்ந்த பிழைகளும் உண்டு. ஒருநாள் 'கள்ளாணி' என்ற ஒரு தொடரைத் திருத்தத்திற்கு வந்த அச்சுத் தாளில் கண்டேன். இப்படி ஒரு தொடர் நான் கேள்விப்பட்டதில்லை. என்னை அடுத்திருந்த பண்டிதர்களுக்கும் விளங்காப் புதிராகவே இருந்தது. அதற்கு எழுதியிருக்கும் பொருளை வைத்துக்கொண்டு சுள்ளாணி என இப்பதம் இருக்க வேண்டுமெனத் தீர்மானித்தேன்...... இப்பிழை யெல்லாம் 'சு' என்ற எழுத்தைக் 'க' என்று எழுதிவிட்டதால் நேர்ந்தது. இங்ஙனமே 'உச்சிவேர்' என்ற ஒரு தொடர் புகுந்து விட்டது. இது ஊசி வேர் என்பதனைத் தவருக வாசித்துக் கொண்ட பதமாம்."

அகராதிப் பதிப்பைப் பற்றிப் பலவேறு கிளர்ச்சிகள் எழும்பின. தமிழ்ச் சொற்களுக்கு வடசொல்-மூலம் கற்பிக்கப் பெற்றதாயும், கொச்சைச் சொற்கள் இடம் பெற்றன வென்றும் பலவிதக் கூக்குரல்கள் கிளம்பின.

இவற்றையெல்லாம் அடக்கக்கூடிய திறம் பிள்ளையவர்களுக்கு இருந்தமையால்தான் லெக்ஸிகன் வெற்றிகரமாக வெளிவர முடிந்தது. குறைகூறிய சிலரது ஐயத்தைப் போக்கத் தாமே விளக்கம் பல தந்திருக்கிருர்.

"தமிழ் மொழியின் பூர்வ சரித்திரத்தையும், அது வளர்ந்து வந்திருக்கிற நெறியையும் தற்காலப் போக்கையும் யாராலும் மாற்றமுடியுமா? பலமொழிச் சொற்களின் கலப்பு நமது அறிவு-வளர்ச்சியையும் நாகரிகத்தையும் பண்பாட்டையும் புலப்படுத்துவதல்லவா?...உத்தம

மான அகராதியில் ஒரு மொழியிலுள்ள எல்லாச் சொற்களும் காணப்படுதல் வேண்டும். அகராதி என்பது பொருளை மாத்திரம் விளக்கும் கருவி நூல் என்ற கொள்கை மாறி, இந்த இயல்போடு ஒரு மொழியின் ஆரம்பகாலத்திலிருந்து தற்காலம் வரையுள்ள எல்லாச் சொற்களுக்கும் ஆகரமாகவும் அது விளங்குதல் வேண்டும். கொச்சைச் சொல் முதலியவற்றை நீக்குதல் கூடாது. இவற்றால் விளையும் நன்மைகள் மிகப்பல. ஒரு மொழியின் ஒலிமரபு (Phonetic System) இவற்றில் நன்றாகப் புலப்படும். ஒரு தாய்மொழியினின்றும் கிளைமொழிகள் தோன்றுவதற்கு இவை காரணமாயுள்ளன ''

வையாபுரிப்பிள்ளையின் ஆழ்ந்த சொல்லாராய்ச்சியும், இலக்கண இலக்கிய ஆராய்ச்சியும் மேலும் மேலும் வளப்பம் பெற அகராதிப் பதிப்பாசிரிய வேலை காரணமாயிற்று. லெக்சிகனுக்கு இவர் எழுதியுள்ள முன்னுரை இவரது நிகரற்ற ஆராய்ச்சித் திறனையும் நேர்மையையும் விளக்க வல்லது. பதின்மூன்றும் புறப்பாட்டால் ஆராய்ச்சி வன்மையையும், மனோன்மணீய வெளியீட்டால் பதிப்பாசிரியத் திறமையையும் நாட்டியச் செய்து புகழ் பெற்ற இவருக்கு இவ் அகராதிப் பதிப்பு வேலை தாம் இளம்பருவ முதலே வகுத்துக் கொண்ட வாழ்க்கைத் துறைக்கு நிலைக்களமாக விளங்கியது.

## ஆராய்ச்சிப் பதிப்புக்கள்

அகராதிப் பதிப்பு வேலையோடு பிள்ளை வேறு பல நூல்கள் பதிப்பிடுவதிலும் எண்ணம் கொண்டார். சிறு பருவமுதலே இராமாயணத்தை மிக ஆழமாகப் படித்து வந்ததால் அதனைப் பல பிரதிகளோடும் ஒப்பிட்டுத் திருத்தமுறப் பதிப்பிக்கவேண்டும் என்ற ஆவலும்

பேராவலாக இருந்தது. அகராதிப் பதிப்பிற்காகப் பலவகை ஏடுகளையும் ஆராய வேர்ந்ததால் ஏடுவாசிப்பதில் இவருக்குச் சிறந்த அநுபவம் கிட்டிற்று. கோடை விடுமுறை நாட்களில் நெல்லைக்குச் செல்லுங்கால் ஆங்காங்குள்ள பேரறிஞர்கள் இல்லம் தேடிச் சென்று ஏடுகளைத் திரட்டி வந்தார்.

ஆழ்வார் திருநகரிப் பெரியன் ஸ்ரீநிவாஸையங்கார் தமக்கு இசைந்த இலக்கியப் பணியில் ஈடுபட்டிருந்தார். பிள்ளையவர்களோடு நெருங்கிய நண்பர். ஒரு முறை ஏடு தேடிச் சென்ற பிள்ளை ஆழ்வார் திருநகரியில் பெரியன் வீட்டில் அவரோடு பல ஏடுகளையும் ஒப்பிட்டுப் படித்துக் கொண்டிருந்தார். திடீரென்று வாசிப்பதை நிறுத்திக் கல கலவென்றுசிரித்தார். காரணம்—கவிராயர் ஒருவர் உள்ளே புகுந்து கவிராயர்கள் நடுவில் பரப்பிய ஏடுகளுள் ஒன்றில் கைவைத்து விட்டார்!—அவ்வளவுதான். ஆழ்வார் திருநகரியில் குரங்குகளின் தொல்லை அதிகம்.

விடுமுறை முடிந்து பிள்ளையவர்கள் ஊர் திரும்பும் போது குறைந்தது இரண்டு மூன்று ஏட்டுக் கட்டுக்களாவது உடன் வரும். சில வேளை பிரயாண காலங்களில் நெருக்கம் அதிகமாக இருந்தால் ஏட்டுக் கட்டை மாத்திரம் தம் மடியில் கொண்டுவந்ததும் உண்டு. பிள்ளைவிரும்பித் தேடும் பொருள்கள் இரண்டு—ஏடுகள், புத்தகங்கள். இன்றும் அவர் நூல்நிலையக் களஞ்சியத்தில் இவ்இரு செல்வங்களும் நிரம்பியிருப்பதைக் காணலாம். அரிய கருவூலங்களாக நம் முன்னோர் வைத்துப்போன பெருநிதியாகிய இலக்கிய இலக்கணச் செல்வத்தையெல்லாம் திருத்தமுறப் பதிப்பித்து வருங்காலத் தமிழருக்கு உரிமையாக்கவேண்டுமென்பது பிள்ளையின் பெருவிருப்பம். வசதி நேர்ந்த போதெல்லாம் அதற்குரிய முயற்சிகளை யெல்லாம் மேற் கொள்வாராயினர்.

மயிலையில் தமது நண்பர் பெ. நா. வுடன் கம்ப ராமாயணப் பரிசீலனை முயற்சியில் ஈடுபட்டார். திருப்திகரமாக ஒப்பு நோக்குதல் பாடபேதம் குறித்தல் முதலியன இருவரும் சேர்ந்து செய்து வந்தார்கள். ஆனால் இது தொடர்ந்து நடைபெறாது பாலகாண்டத்தில் 1 முதல் 7 படலங்களை வெளியிடுவதோடு நின்றது.

சில நாள் சென்றபின் பிள்ளை யுத்த காண்டத்தில் 1 முதல் 3 படலங்களைத் தாம் இராமாயணம் எந்த முறையில், எவ்விதச் சிறப்புக்களோடு வெளிவர வேண்டுமென்று கருதினாரோ அந்த முறையில் தாமே பல பிரதிகளையும் ஒப்பிட்டு மாதிரிப் பதிப்பாக வெளியிட்டார். கம்பனைப் பதிப்பிடும் வேலை அதோடு நின்றுவிட்டது.

பேரறிஞர் அனவரத நாயகம் பிள்ளையும் பெ. நா. அவர்களும் பிள்ளை யவர்களும் சேர்ந்து பல நாள் ஆராய்ச்சிகள் செய்து திருமூலர் திருமந்திரத்தை வெளியிட்டார்கள்.

அகராதி வேலையில் வையாபுரிப்பிள்ளை ஈடுபட்டிருந்த நாட்களில் தம் வேலைக்கு அனுகூலமானவையும், அதுகாறும் வெளிவராதவையும், தமிழ் மக்களுக்குப் பெரிதும் பயன்படக்கூடியவையுமான, பல நூல்களையும் நிகண்டுகளையும் வெளிட்டார். 1926-லிருந்து 36 முடியப் பத்து வருடங்களில் இருபத்தொரு நூல்கள் வெளிவந்தன. அவற்றுள் நிகண்டுகள் நான்கு. நாமதீப நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, பொதிகை நிகண்டு, கயாதர நிகண்டு ஆகியவை. தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் இயற்றியுள்ள உரையையும், இளம்பூரணர் இயற்றியுள்ள உரையையும் இவர் வெளியிட்டார்.

பிறநூல்கள் உலா, தூது, கோவை, பள்ளு முதலிய சிறுபிரபந்தங்களும், பூகோள விலாசம், களவியற் காரிகை, தினகர வெண்பா முதலான சிறு நூல்களும் ஆகும். நூல் வெளியீட்டுக் குறிப்பைக் கீழே காணலாம்.

1929 துகில் விடு தூது
1930 நவநீதப் பாட்டியல்
1931 களவியற் காரிகை
,, அரும் பொருள் விளக்க நிகண்டு
1932 குருகூர்ப்பள்ளு
,, உயுத்த காண்டம்—1-3 படலங்கள்
,, திருக்குறுங்குடி அழகிய நம்பியுலா
,, தியாகர வெண்பா
1933 பூகோளவிலாசம்
,, நெல்விடுதூது
,, திருமுருகாற்றுப்படை
,, கம்பராமாயணம்—பாலகாண்டம்—1-7 படலங்கள்
1934 இராஜராஜதேவருலா
,, தொல்காப்பியம்-பொருளதிகாரம்-நச்சினார்க்கினியர் உரை
,, பணவிடு தூது
,, பொதிகை நிகண்டு
,, மதுரைக் கோவை
,, முப்பந்தொட்டியுலா
1935 தொல்காப்பியம்-இளம்பூரணம்
1936 தெய்வச்சிலையார் விறலிவிடு தூது
1939 கயாதர நிகண்டு

இந்த நூல்களை யெல்லாம் வெளியிட்ட காலத்தில் பிள்ளையவர்கள் ஏட்டுப் பிரதிகள் கையெழுத்துப் பிரதிகள் கிடைக்குமிடம் தேடிப் பிடித்து அவற்றைச் சேகரிப் பதைத் தம் முதல் வேலையாக வைத்துக் கொண்டார். ஒரே நூலின் பல பிரதிகளை ஒப்பு நோக்கிப் பரிசோதித்து, சிறந்த பாடம் எனத் தாம் கருதியதை நூலிற்

சேர்த்து, பிறவற்றைப் பாடபேதம் என உடுக்குறியிட்டுக் கீழே தருவது வழக்கம். படிப்போருக்குப் பெரும்பயன் விளைக்கக்கூடிய சொல்லகராதி, அருஞ்சொற் பொருளகராதி, பாட்டு முதற் குறிப்பகராதி முதலியவற்றைப் பிற்சேர்வாக அமைப்பார். நூல் வரலாறு, நூலாசிரியர் வரலாறு முதலியவற்றை விளக்கும் சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று முன்னுரையாக நூலை அணி செய்யும். பிள்ளையவர்களின் தமிழ்ப் புலமையையும் பன்மொழித் திறத்தையும் மிகப் பரந்துபட்ட பலதுறை நூலறிவையும் இம் முன்னுரைகள் விளக்கவல்லன.

பத்துப்பாட்டில் முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப் படைக்கு புதிய உரை ஒன்று தம் நண்பர் பெ. நா. அப்புஸ்வாமி ஐயரின் உதவி பெற்று எழுதி வெளியிட்டார். இந்நூலை வெளியிட்ட சைவ சித்தாந்த சமாஜத்தார் இதன் முன்னுரையில்,

> "தமிழ்ப் பேரகராதியின் பதிப்புத் தலைமைப் புலமை நடாத்து வதிலேயே தமது பொழுது முழுவதையும் கழித்தபோதிலும் ஓய்வுள்ள காலத்திலெல்லாம் தமிழுக்கும் சமயத்திற்கும் ஓவாதே ஒல்லும் வகை அறம் புரிந்து வரும்பெற்றியுடையார்"

எனக் குறித்துள்ளது பிள்ளையின் தமிழ்ப் பெரும் பணியின் பரப்பை ஒருவாறு சுட்டிக்காட்டுவதாகும்.

பதிப்பு வேலைகளோடு வேறு துறைகளிலும் பிள்ளையவர்கள் சிரத்தை காட்டியதுண்டு. வடமொழிக் கழகத்தில் அங்கத்தினராக இருந்து திருவாளர்கள் பதஞ்சலி சாஸ்திரி, வி. நாராயணையர், வை மு. கோபாலகிருஷ்ணமாசாரியார், பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், ஏ. டி. கிருஷ்ணமாச்சாரியார் போன்ற அறிஞர்களோடும் தொடர்பு பெற்றுத் தமது வடமொழியறிவையும் பெருக்கிக் கொண்டார்.

ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதுவதற்கெனவும் சில நேரத்தை ஒதுக்கி வைத்திருந்தார். பிள்ளையவர்கள் பதிப்

பாசிரியராகச் செயலாற்றி வந்த காலத்தில்தான் 'கலைமகள்' பத்திரிகை முதல் முதலாக வெளி வந்தது. அதன் கௌரவப் பதிப்பாசிரியர் பதினொருவருள் பிள்ளையும் ஒருவர். ஸ்ரீ ரா. இராகவையங்காரும் இவரும் பத்திரிகையின் இலக்கியப் பகுதிக்குப் பொறுப்பாளிகளாக இருந்து வந்தார்கள். அந்நாட்களில் பிள்ளையவர்களுடைய பல ஆராய்ச்சிக்கட்டுரைகளைக் 'கலைமகள்' தாங்கி வெளிவந்தது.

இக் கட்டுரைகளின் அமைப்பும் பொருள் விளக்கமும் நேர்மையும் பிள்ளையவர்களின் சொல்லாராய்ச்சித் திறத்தால் ஒரு தனிச்சிறப்புடன் திகழ்ந்தன.

# 4. பேராசிரியரின் இலக்கியத் தொண்டு

## அரசாங்க கௌரவம்

1936-ல் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைக்குத் தலைவர் ஒருவர் தேவையிருந்தது. அப்பதவிக்குப் போட்டிகளும் அதிகமாக இருந்தன. வையாபுரிப்பிள்ளையும் விண்ணப்பம் செய்திருந்தார். தேர்வாளர்களுக்கு இது மிகச் சிக்கலான ஒரு பிரச்சினையாகத்தான் இருந்தது. ஆயினும் இறுதியில் பிள்ளையே அப் பதவிக்குத் தகுதியுடையவர் என அதிகாரிகள் தீர்மானித்தனர். இது இவர்தம் தொண்டு மேலும் செழிக்க வாய்ப்பளிக்கும் ஒரு பீடத்திற்கு அழைத்து வந்து விட்டது. அடுத்த பத்து வருடங்கள் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக விளங்கி ஆராய்ச்சி மன்னர் எனத் தமிழகம் போற்றிப் புகழ்வதற்கான முறையில்இவர் தொண்டாற்றிவந்தார்என்பது பிரசித்தம்.

தமிழாராய்ச்சித் துறையில் இருந்து கொண்டே தமிழகராதியின் அநுபந்தத் தொகுதியாகிய 7-வது தொகுதியையும் 1938-ல் திரு மு. இராகவையங்கார்முதலிய பேரறிஞர்களின் துணை கொண்டு வெளியிட்டு அகராதி வேலையை முற்றுப் பெறச்செய்தார். இவ் வெற்றிகரமான செயலை அரசாங்கமும் பாராட்டி 'ராவ் சாகிப்' என்ற பட்டம் அளித்துக் கௌரவித்தது.

## பன்மொழிப் புலமை

பிள்ளையவர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் பயிற்சி பெற்றிருந்ததோடு மலையாளமும் வடமொழியும் பயின்றி

ருந்தார். ஜெர்மன் பிரஞ்சு இரண்டும் கற்கவேண்டுமென ஏற்கெனவே விரும்பியதுண்டு. ஆயின் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சித் தலைவரான பிறகுதான் இவர் விருப்பம் நிறைவேற வாய்ப்புக் கிடைத்தது. ஜெர்மன் பிரஞ்சு இரண்டையும் முறையாகப் பயிலத் தொடங்கி அம் மொழிகளில் பலவேறு நூல்களையும் வரவழைத்துக் கற்கலானார் பிள்ளையவர்கள். ஆறுமொழிகளில் தேர்ந்த அறிவு பெற்றிருந்தமையால்தான் ஒப்பு நோக்கு முறையில் பல இலக்கண இலக்கியங்களைக் கற்று நேர்மையான மொழியாராய்ச்சித் திறத்தைப் பெருக்கிக் கொள்ள முடிந்தது. எந்த மொழியில் எது படித்தாலும் அது இலக்கிய ஆராய்ச்சிக்கு எவ்வாறு பயன்படும் என்பதொன்றே பெரு நோக்காகக் கொண்டிருந்தார். ஆங்கிலத்திலும் சிறந்த பல பேராசிரியர்களின் நூல்கள் கணக்கற்றவை படித்துவந்தார் என்பது இவரது நாட்குறிப்புச் சுவடியிற் காணக் கிடக்கின்றது.

தமிழகராதிப் பதிப்பாசிரியராக இருந்த காலத்தில், பதிப்பு வேலைக்குத் தேவையாயிருந்த நிகண்டுகளையும் பல சிறு பிரபந்தங்களையும் பதிப்பித்தவர் தமிழ்த்துறைத் தலைவராக நியமனம் பெற்றபின் பதிப்பிக்க எடுத்துக் கொண்டவை புறத்திரட்டும், சங்க இலக்கியமுமாகும். பல பேரறிஞர்களோடு இந்நூல்களை ஆய்ந்து கற்று, ஏட்டுப் பிரதிகள், கையெழுத்துப் பிரதிகள் இவற்றையெல்லாம் பற்பல இடங்களிலிருந்து சேகரித்து அவற்றோடெல்லாம் ஒப்பு நோக்கி வந்தார்.

புறத்திரட்டு என்ற தொகை நூலை முதன் முதல் ஆராய்ந்து வெளியிட்டவர் இவரே. இது பல்கலைக் கழகத்தின் ஆதரவில் வெளிவந்தது. இந்த நூலுக்கு இவர் எழுதியுள்ள மிக விரிவான கால ஆராய்ச்சியும் பிற குறிப்புக்களும் அடங்கிய முன்னுரை அறிஞர்கள் பாராட்டுக்குரிய அருஞ் சிறப்புவாய்ந்தது.

கவிதைச் சுவையை மக்கள் அறிந்து இன்புற வேண்டுமென்ற நோக்கத்தோடு, மேல் நாட்டில் 'பால்கிரேவ்' (Palgrave) என்ற ஆங்கிலப் பேராசிரியர் 1580-லிருந்து 1880 முடியவுள்ள 300 ஆண்டுகளில் வெளிவந்த செய்யுட்களுள்ளே கவிதை நயம் சிறந்து விளங்கும் செய்யுட்களை மட்டும் தொகுத்து 'The Golden Treasury' என்று 1861-ல் வெளியிட்டார். தமிழ் நாட்டிலோ அதுபோன்ற நூல் தொகுக்கப்பெறவில்லை. தமிழர்களும் ஒரு சிலரே கவிதைச் சுவையின்பெருமையை நன்குணர்ந்து நுகரும்தன்மை பெற்றிருந்தனர். கருத்து நயம் வேறு, கலை நயம் வேறு என்பதைப் பிரித்துணர்ந்து சுவைக்கும் இயல்பு பலருக்கும் இல்லாமற்போயிற்று. புறத்திரட்டு கவிதைச் சுவை நிரம்பிய பல செய்யுட்களைக் கொண்டது எனப் புறத்திரட்டுக்குத் தாம் எழுதியுள்ள முன்னுரையில் குறித்திருக்கிறார்.

இம்முன்னுரையில் தொகைநூல்களின் வகைகள், சங்ககாலத் தொகை நூல்கள், சங்ககாலத்திற்குப் பின் 14-ம் நூற்றாண்டு வரை தோன்றிய நீதி, சமயம், தத்துவம் பற்றிய தொகை நூல்கள், அக்காலப் பகுதியில் இலக்கிய வளர்ச்சி, புறத்திரட்டின் தோற்றம் ஆகிய இவையெல்லாம் தொடர்ச்சியாகத் தரப்பட்டுள்ளன. புறத்திரட்டு முப்பாலைப் பின்பற்றியது என்பதும், அறத்துப்பால், பொருட்பால் ஆகிய இரு பிரிவின் பொருளமைதி காரணமாகவே புறத்திரட்டு எனப்பெயர் பெற்றதென்பதும், இம் முன்னுரை தெரிவிக்கின்றது. சில ஏட்டுப் பிரதிகளில் காமத்துப்பால் காணப்படவில்லை யென்றும். புறத்திரட்டுச் சுருக்கத்தில் காமத்துப்பால் முழுவதும் முத்தொள்ளாயிரச் செய்யுட்கள் என்றும் இதில் குறித்திருக்கிறார்.

இந்நூலின் காலம் மிக விரிவாய் இம் முன்னுரையில் ஆராயப்பட்டுள்ளது. இத்தொகை நூல்களில் அடங்கி

யுள்ள செய்யுட்கள் எந்தெந்த நூல்களிலிருந்து தொகுக்கப் பெற்றவை என்பதும் இங்கு அறியக்கிடக்கின்றது.

இம்மாதிரி விரிவான 'சுவையுள்ள' பரந்த அறிவொளி வீசும் முன்னுரைகள் நூலின் சிறப்புடன் பதிப்பாசிரியரின் பெருந் தகுதியையும் நன்கு அறிவுறுத்த வல்லன

புறத்திரட்டை அடுத்து இராமப்பையன் அம்மானை என்ற நயம் பெற்ற வரலாற்றுப் பாடலை பிள்ளை வெளியிட்டார். தமிழ்த் துறைத் தலைவராகவிருந்த காலப் பகுதியில் மேலும் வெளி வந்தவற்றுள் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை சங்க இலக்கியமாகிய எட்டுத் தொகையும், பத்துப்பாட்டும், ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றான சீவகசிந்தாமணியுமாகும். இவை சைவ சித்தாந்த சமாஜத்தின் அடக்கவிலைப் பதிப்பு வெளியீடுகள். சங்க இலக்கியத்தில் புலவர்கள் பெயர்கள் அகரவரிசையில் தரப்பட்டு, அவரவர் இயற்றிய பாடல்களும் அகநானூறு ஐங்குறுநூறு, கலித்தொகை, குறுந்தொகை, நற்றிணை, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, பரிபாடல், புறநானூறு என்ற நூல் முறையில் அமைக்கப்பெற்றுள்ளன. ஒரு புலவர் பாடிய பாடல்களையெல்லாம் ஒருசேரப் படித்தின்புறுதற்குரிய வசதியைத் தருவதும், ஒரு புலவரின் வாக்கின் திறம், செய்யுளின்பெற்றி, பொருட்செறிவு, சரிதச்சான்று இவற்றை, ஆய்ந்தறிய விரும்பும் ஆராய்ச்சியாளருக்குப் பயன் தருவதும் இப்பதிப்பின் நோக்கம். தொகைநூல்களில் ஒவ்வொன்றிலுள்ளும் குறித்த எண்களிலுள்ள பாடல்களை எளிதில் எடுக்கக்கூடிய வசதியும் இதில் உண்டு. சமாஜத்தின் காரியதரிசியும் பிள்ளையவர்களின் சிறந்த நண்பருமாகிய தமிழ் அறிஞர் திரு ம. பாலசுப்பிரமணிய முதலியார் 'எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும்' என்ற நூலின் முகவுரையில் குறித்துள்ளமை அறியத் தக்கது;

"சென்னைப் பல்கலைக் கழகத் தலைமைத் தமிழாசிரியரும், ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதிப்பதில் நிபுணரும், சங்க நூல்களில் முப்பதுவருஷ காலமாகப் பயிற்சியுடையவரும், சமாஜ வெளியீடுகள் பலவற்றிற்குப் பிரதிகளைச் சேகரித்து ஒப்பு நோக்கிப் பலவழிகளிலும் துணைபுரிந்தவரும் எனது நண்பருமாகிய சைவத்திருவாளர் ராவ் சாகிப் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்கள் இவ் வெளியீட்டுக்காக இயற்றிய தொண்டு அளவிடற்பாலதன்று. இப்பதிப்பிற்கு இவர்களே பதிப்பாசிரியர் என்று சொல்லக்கூடிய அளவில் பேருதவி செய்துள்ளார்கள்." சமாஜத்தின் வாயிலாக, திருமந்திரம் திருமுருகாற்றுப் படை என்ற இரு நூல்களையும் கூட்டுப்பதிப்பாகப் பிள்ளையவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.

இன்னும் இக்காலப் பகுதியில் வெளியானவை பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் சிறுபஞ்சமூலம், நான்மணிக் கடிகை, திரிகடுகம், இன்னா நாற்பது, இனியவை நாற்பது, பழமொழி ஆகியவை. இவையனைத்தும் பிள்ளையவர்களின் இடைவிடா உழைப்பின் பயனாக அழகிய முன்னுரை, விளக்க உரைகள், ஆராய்ச்சிக் குறிப்புக்கள், பாட பேதங்கள், செய்யுள் முதற்குறிப்பு, சொல் அகராதி, அருஞ்சொற் பொருள் முதலியன பெற்றுச் சிறந்த முறையில் வெளிவந்தன.

## மயிலைத் தமிழ்ச்சங்கம்

மயிலைத் தமிழ்ச் சங்கம் என்ற ஒரு தமிழ் இலக்கியக் கழகம் மயிலையில், உயர்திரு எம். சுப்பராமையர் இல்லத்தில் செயலாற்றி வந்தது. இதில் பெரும்பங்கு கொண்டு சங்கத்தின் நோக்கங்கள் பலவற்றையும் நிறைவேற்றிய ஒரு சிலருள் வையாபுரிப்பிள்ளையும் ஒருவர். இச்சங்கத்தின் காரியதரிசியாகவும் அங்கத்தினராகவும் தமிழ் வளர்ச்சிக்கு

இவர் பெரிதும் பாடுபட்டார். வெளிவராத நூல்கள் பல வற்றை ஆய்ந்து அச்சிடுவதும் சங்கத்தின் நோக்கமாகை யால், 1943-ல் நவநீதப்பாட்டியல் என்ற இவரது பதிப்பு நூல் வெளிவந்தது. இந்நூல்தான் மயிலைத் தமிழ்ச் சங் கத்தின் முதல் வெளியீடு. இதனை அடுத்து திவ்யப் பிரபந்தம், சிறுபஞ்சமூலம், ஸ்ரீபுராணம் முதலிய நூல் களையும் இவர், தாமே ஒப்பு நோக்கிப் பரிசோதித்து, சங்க ஆதரவிலேயே அடக்க விலைப்பதிப்பாக வெளியிட்டார்.

ஏடு வாசிப்பதற்குப் பொறுமையும் ஊக்கமும் மிகவும் தேவை. படித்துக்கொண்டே வரும் பொழுது சில எழுத்துக்கள் காணப்படா. விடுபட்ட எழுத்துக்கள் இன்னவையாகத்தானிருக்க வேண்டுமென்று நிச்சயிப்பது எளிதல்ல. பிள்ளையைப் போன்ற அநுபவம் மிக்கார்க்கே இது இயலும். எழுத்துக்கள் முழுமையுமே விடாது எழுதப்பெற்றிருந்தாலும், குறிப்பிட்ட சொல் இன்னது எனத் தெளிவது, செய்யுள் அமைப்பு, பொருள் அமைப்பு, முதலியவற்றின் பொருத்தம் ஆய்ந்து நோக்கியே தீர்மானிக்க முடியும் என்பது ஏட்டுச்சுவடிகளின் எழுத் தமைப்பை அறிந்தவர் அறிவர். பிள்ளை ஏடு வாசிப்பதை ஓர் அரிய கலையாகவே பயின்று தனித்திறம் பெற்றிருந் தார்.

## மகாநாட்டுத் தலைமை

1941-ம் ஆண்டு மதுரைச் சேதுபதி உயர்தரப் பாட சாலையில் தமிழ் இலக்கிய மகாநாடு பிள்ளையவர்களின் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. பண்டிதமணி திரு மு. கதிரேசச் செட்டியார் மகாநாட்டைத் திறந்து வைத்தார். சங்ககாலந்தொட்டு சமீப காலம் வரை, தமிழை உயிர்த்தத்துவம் நிரம்பிய மொழியாக்கி அதனை ஊக்குவிந்த புதிய புதிய பல சக்திகளையும், அவைகளுக்கு

உறைவிடமாக விளங்கிய மதுரை மாநகரின் இலக்கிய வாழ்க்கை வரலாற்றையும் மகாநாட்டுத் தலைமையுரையில் விளக்கமுறச் செய்தார் பிள்ளை. இவ் அரிய சொற்பொழிவு இலக்கியச்சிந்தனைகள் என்ற நூலின் இறுதிக் கட்டுரையாக 'மதுரையும் தமிழ் இலக்கியமும்' என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது.

காசியில் 1944–ல் அகில இந்தியக் கீழ்நாட்டுக் கலைஞர் மகாநாடு (All India Oriental Conference) நடை பெற்ற போது இவர் அதன் மொழிப்பிரிவில் 'Word Study and Chronology in Tamil Literature' என்பது பற்றி மிகவிரிந்ததோர் ஆராய்ச்சியுரை ஆங்கிலத்தில் நிகழ்த்தினர்.

இம் மகாநாடு மீண்டும் 1946-ல் நாகபுரியில் கூடிய போது திராவிடப்பிரிவை இவரே தலைமைதாங்கி (Research in Dravidian Languages) 'திராவிடமொழிகளில் ஆராய்ச்சி' என்ற தலைப்பில், மொழியாராய்ச்சி செய்வோரும் மற்ரேரும் பயன் பெறத்தகுந்த சிறந்த தலைமைப்பேருரையை ஆங்கிலத்தில் நிகழ்த்தினர்கள். இவருடைய ஆங்கிலப் புலமையையும் வெளியுலகம் அறிந்து வியந்தது.

1951-ல் இக்கலைஞர் மகாநாடு லக்ஷ்மணபுரியில் நடந்தேறியது. இங்கும் திராவிடப்பிரிவைத் தலைமை தாங்கி நடத்தி வைக்கும் பொறுப்பு இவருக்கே தரப் பட்டது. 'திராவிட மொழியாராய்ச்சி' பற்றித்தொடர்ந்து இங்குத் தலைமையுரை நிகழ்த்தினர். 'திராவிட மொழி களில் ஆராய்ச்சி' என்ற தலைப்பில் இரு மகாநாட்டுரை களும் நூல்வடிவில் ஆங்கிலத்திலும் தமிழிலும் வந் துள்ளன.

இவை தவிர மேலும் பல மகாநாடுகளில் கலந்து கொண்டதாக நாட்குறிப்புச் சுவடியிலிருந்து அறியலாகும். புறநானூற்று மகாநாடு, தமிழ் அன்பர் மகாநாடு ஆகிய வற்றில் இவருக்குப் பெரும் பங்கு இருந்திருக்கிறது.

## ஆங்கிலத்திலும் புலமை

தமிழகராதிக்கு இவர் எழுதியுள்ள "History of Tamil Lexicography" என்ற ஆங்கில முன்னுரையும், புறத்திரட்டு முதலிய வெளியீடுகளுக்கு எழுதிய ஆங்கில முன்னுரைகளும், மகாநாட்டுத் தலைமையுரைகளும், பிள்ளைக்கு ஆங்கிலத்தில் சிறந்த புலமையும் மிகப் பரந்த நூலறிவும் உண்டு என்பதை எடுத்துக்காட்ட வல்லன.

'Word Study and Chronology in Tamil Literature', 'Life in Ancient City of Kavirıpumpattınam' 'Manikkavachakar' என்னும் பல ஆராய்ச்சிக் கட்டுரைகளை ஆங்கிலத்தில் எழுதி அகில இந்திய ரேடியோ நிலயத்தில் பேசியுள்ளார். நூல்வடிவில் 'Research in Dravidian Languages' பற்றியும் பிள்ளை எழுதியிருக்கிறார். அவர் இறுதியாக எழுதிய 'History of Tamil Language and Literature' என்ற ஆங்கில நூல் சமீபத்தில் வெளியாகியுள்ளது. இவையெல்லாம் பிள்ளையவர்களுடைய சிறந்த ஆங்கிலப் புலமைக்குச் சான்றாக விளங்குகின்றன.

## ஆராய்ச்சியின் விளைவு

பல்கலைக் கழகத்தின் தமிழாராய்ச்சித் துறைத் தலைமைப் பதவியேற்றதிலிருந்து இவர் ஆற்றிய அருஞ்செயல்கள் மிகப்பலவாகும். இவரது மேற்பார்வையில் ஆராய்ச்சித் துறைக்கு வந்த பதினொரு மாணவர்க்கும் அவரவர் எடுத்துக்கொண்ட பொருள் பற்றி ஆராய்ச்சி செய்வதற்கான முறைகளை எடுத்துக்கூறிக் கட்டுரை எழுதவும் வழிகாட்டினார்.

பிள்ளையவர்களுடைய தேர்ந்த, பரிபக்குவமடைந்த, பலகால உழைப்பினால் உரமேறிய ஆராய்ச்சித் திறமெல்லாம் ஆராய்ச்சி மன்னரென முடிபுனைவதற்கான

மணி மகுடமாய் உருப்பெறலாயிற்று. அத்திறமெல்லாம் இலக்கியம், இலக்கணம், மொழி, கவிதை, காலம், வரலாறு: இவை பற்றிய நூற்றுக்கணக்கான கட்டுரைகளாக வெளிப்பட்டது. இவ் அரிய கட்டுரைகளைச் செந்தமிழ், கலைமகள், வசந்தம், சக்தி, லோகோபகாரி, ஈழகேசரி, குமரிமலர், பாரததேவி, ஆனந்தவிகடன், சுதேசமித்திரன், சித்தாந்தம், நாட்டியம், அமுதசுரபி, சிந்தனை, சந்திரா, கதிர் முதலிய பத்திரிகைகள் வெளியிட்டு வந்தன. கட்டுரைகள் பல சென்னை, திருச்சி ரேடியோ நிலையங்களில் ஒலிபரப்புவதற்கெனவும் எழுதப்பெற்றன. கல்லூரிகளின் தமிழ்க் கழகங்களுக்கும், அவ்வப்போது தமிழ்க் கூட்டங்களுக்கும் மகாநாடுகளுக்கும், தலைமையுரையாக வெளிவந்த கட்டுரைகளும் மிகப் பல. இவை தவிர பல நூல்களுக்கு முன்னுரையாகவும் கட்டுரைகள் வரைந்ததுண்டு.

1936-லிருந்து 46 வரையுள்ள பத்து வருட காலம் தான் வையாபுரிப்பிள்ளையவர்கள் தம் கருத்தெலாம் செலுத்தி ஆராய்ச்சிக் கட்டுரைகள் நூற்றுக் கணக்காக எழுதி வெளியிட்ட காலம். பதிப்பு வேலையோடு வேலையாக வரலாற்று நூல்கள், இலக்கிய விளக்கங்கள், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் ஆகியவற்றை அடுத்தடுத்து வெளியிட்டார். 'மாணிக்கவாசகர் காலம்', 'மாணிக்கவாசகர் சமயம்', 'பத்துப்பாட்டின் காலநிலை' 'பவணந்தி காலம்', 'வள்ளுவர் காலம்', 'கம்பன் காலம்' ஆகிய கால ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டுத் தமது ஆராய்ச்சித் திறத்தையும், நேர்மையையும், பற்றற்ற நோக்குடன் செய்திகளை நன்கு ஊடுருவிப்பார்த்துக் கருத்துக்களைப் பொருத்தமுற நெறிப்படுத்தும் ஆற்றலையும் உலகறியச் செய்தார்.

# 5. ஆராய்ச்சிப் பேரறிஞர் அரும்பணி

## இலக்கிய மலர்மாலைகள்

*பிள்ளை சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவராகஇருந்து 11-10-46-ல் ஓய்வு பெற்றார். பெயரளவில் ஓய்வே தவிர பலவேறு துறைகளில் அவர் ஈடுபட்டுச் செயலாற்ற வேண்டியிருந்தது. அவ்வப்பொழுது பல பத்திரிகைகளுக்கும் எழுதி வந்த கட்டுரைகளை யெல்லாம் திரட்டி, வகைப்படுத்தி, சிறு தொகுதிகளாக அவற்றை வெளியிட எண்ணினார். அவற்றில் வானொலி நிலையத்தாரால் ஒலிபரப்பப் பெற்ற கட்டுரைகளும் இடம் பெற்றன.*

*தொகுதிகளுக்குத் தனிப் பெயர் தந்து, பொருளின் தொடர்ச்சிக்கு இன்றியமையாதன எனக் கருதிய சில புதுக் கட்டுரைகளையும் எழுதிச் சேர்த்துச் சிறந்த முன்னுரையோடு வெளியிட்டார். இத் தொகுதிகள் வருடத்திற்கொன்றாக வெளிவரலாயின.*

*1947*–ல் **இலக்கியச் சிந்தனை**: *இதன் முதற்கட்டுரை உவில்லியம் ஜே. லாங்க் எழுதிய "ஆங்கில இலக்கியம்" என்ற நூலின் முன்னுரையைத் தழுவி எழுதியது. 'ஆகஸ்டின் பிர்ரெல்' எழுதிய கட்டுரை ஒன்றை அடியொற்றி எழுதியது 'இலக்கியமும் பயனும்' என்ற இரண்டாவது கட்டுரை. இலக்கியத்தின் முதல்தோற்றம் என்ற மூன்றாவதுகட்டுரையும் ஆங்கில நூல்களின் உதவி*

யால் எழுதப் பெற்றுள்ளது. இவற்றை அடுத்து இலக்கியத்தின் தொன்மை, இலக்கியமும் சமூகமும், சங்க இலக்கியங்கள் முதலிய இலக்கியக் கட்டுரைகளும், அகராதி பற்றி மூன்று கட்டுரைகளும் இந்நூலில் அடங்கியுள்ளன. இதன் இரண்டாம் பதிப்பில் கம்பனும் தமிழும் என்ற கட்டுரை நீக்கப்பட்டு ஜைனரும் இலக்கியமும், கூத்து, இசை, தமிழில் நாட்டிய நூல்கள், மதன நூல் வரலாறு, இலக்கியத்தில் மொழிவழக்கு ஆகிய ஐந்து கட்டுரைகள் சேர்க்கப்பட்டுள்ளன. இதில் இருபத்தொரு கட்டுரைகள் இடம்பெறுகின்றன.

*1948*–ல் **தமிழின் மறுமலர்ச்சி**: இத்தொகுதியில் அமைந்துள்ள கட்டுரைகள் பதினைந்தும் பெரும்பாலும் தமிழின் மறுமலர்ச்சி பற்றியவை. மேலும் நம் தாய்மொழி புது வளர்ச்சியுற்று வளம்பெறுமாறு அதைப்போற்றிப் பாதுகாக்க வேண்டிய அவசியமும், பாரதியார் இத்துறையில் ஆற்றியுள்ள தொண்டும், தொடர்ந்து நாம் செய்யக் கூடிய சீர்திருத்தங்களும் இக்கட்டுரைகளில் வற்புறுத்தப் படுகின்றன. எழுத்து, சொல், வசனம், இசை பற்றியும், இன்றையத் தமிழுக்கு அணியெனப் புதுமைக் கவிதை புனைந்து தந்த கவிமணி பற்றியும், சொல்லாராய்ச்சி பற்றியும், காலப்போக்கிற்கு இயைய புதிய இலக்கணம் அவசியம் என்பது பற்றியும் கட்டுரைகள் பிரஸ்தாபிக்கின்றன.

*1948*–ல் **தமிழ்ச்சுடர் மணிகள்**: தொல்காப்பியர், கபிலர், திருவள்ளுவர், மாணிக்கவாசகர், கம்பர், சடையப்பவள்ளல், பவணந்தி முனிவர், புகழேந்தியார், பரிமேலழகர், குமரகுருபரர், சிவப்பிரகாச சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள், மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை, சி.வை. தாமோதரம் பிள்ளை, ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, பி. கனகசபைப்பிள்ளை, டாக்டர் உ. வே. சுவாமிநாதையர்,

ரா. இராகவையங்கார், தேசீய கவி பாரதி, வ. உ. சி., இலக்குமண பிள்ளை, மு. இராகவையங்கார், கவிமணி ஆகிய தமிழகத்துக்கு ஒளிதந்த, இருபத்து மூன்று அறிஞர்களின் வரலாற்றை விளக்குவது. இந்நூலில் தொல்காப்பியர், வள்ளுவர், கம்பர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரின் கால ஆராய்ச்சியும் இடம்பெற்றுள்ளது.

1949–ல் தமிழர் பண்பாடு: பண்பாடு என்ற சொற்பொருள் விளக்கம், அதனோடு தொடர்பு கொண்ட இலக்கியம், அதற்கு அடிப்படையான வாழ்க்கைத் தத்துவம், வாழ்க்கை செப்பமுறுவதற்கான லட்சியத்தை விளக்க வல்ல இராமசரிதம், லட்சியங்களை வெளிப்படுத்தும் கவிதையைத் தந்த கம்பன், அவன் கதாபாத்திரங்கள் அமைத்த மரபு, அன்பு, அழகு, மகளிர் கற்பு, நகைச்சுவை, லட்சியங்கள் விளக்கமெய்த உதவும் சமயக்கொள்கைகள் ஆகியவைபற்றி முறையே விளக்கிச் செல்லும் பதினைந்து கட்டுரைகளும் இதில் இடம்பெறுகின்றன.

1950–ல் இலக்கிய உதயம் I. எகிப்து, பாபிலோனியா பாலஸ்தீனம், பாரசீகம், சீனம் ஆகிய நாடுகளில் இலக்கியம் உதயமான வரலாற்றை விவரிக்கின்ற ஐந்து ஆராய்ச்சிக் கட்டுரைகள்.

1952–ல் இலக்கிய உதயம் II. இந்நூல் பாரதநாட்டில் இலக்கிய உதயத்தை விளக்குகிறது. இதன் முன்னுரையில் ஆசிரியர் "இலக்கியம், வைதிகம், பௌத்தம், ஜைனம் என்ற சமயங்களுக்குரியனவும் ஜோதிடம் கணிதம் முதலிய விஞ்ஞான சாஸ்திரங்களுக்குரியனவுமாகப் பலதிறப்படும். இவற்றுள் இப்போது வெளியிடும் நூல் வைதிகம், பௌத்தம் என்னும் இருபகுதிகளுக்கும் உரியதாகும். இதுவே மிகவிரிவாக அமைந்துவிட்டது. வைதிக இலக்கிய வரலாறு பற்றியும் பௌத்த நூல்களின் வரலாறு பற்றியும் தமிழில் நூல்கள் இல்லை. எனவே இவ்வாறு விரித்

தெழுத நேரிட்டது. ஏனைய பொருள்கள் பற்றிய வரலாறு மூன்றும் பகுதியில் வெளியிடப்படும்'' எனத் தெரிவித்துள்ளார். இந் நூலில் இருபத்தொரு கட்டுரைகள் உள்ளன.

1952-ல் **இலக்கிய தீபம்:** தீபத்தின் சுடர்கள் போல் பதினறு கட்டுரைகள் அமைந்துள்ளன. பத்துப்பாட்டில் உள்ள ஒவ்வொரு பாட்டின் காலம், தொகைநூல்களின் காலம், முத்தொள்ளாயிர நூலின் காலம் முதலியனவும் பிறவும் இப்புத்தகத்தில் ஆராயப்படுகின்றன.

1954-ல் **இலக்கிய மணிமாலை:** இதில் நான்கு தொகுதிகள்; ஒவ்வொரு தொகுதியிலும் பல கட்டுரைகள் கோவையாக அமைந்துள்ளன. முதல் தொகுதியின் கட்டுரைகள் ஐந்தும் **புறத்திரட்டு** என்ற நூலுக்குப் பிள்ளை எழுதிய முன்னுரை. இது கி.பி. 4—அல்லது 5—ம் நூற்றாண்டிலிருந்து செய்யுட் கோவைகள் தோன்றியுள்ள வரலாறுகளையும், புறத்திரட்டு இலக்கிய வளத்தை விளக்குவது பற்றியும் ஆராய்கின்றன. இரண்டாம் தொகுதி கீழ்க்கணக்கு நூல்களைப் பற்றிய ஆராய்ச்சி முடிபு. காலம், தோற்ற முறை இவற்றை ஆறு கட்டுரைகளால் விளக்கிச் செல்கின்றது. மூன்றும் தொகுதியின் இரண்டு கட்டுரைகளும் சிலப்பதிகாரம் மக்களிடையே பரவி வந்த வரலாறும், இதன் கால ஆராய்ச்சிக்குப் பயன்படும் குறிப்புக்களும் பற்றியன. நான்காம் தொகுதி, அரும் பொருள் விளக்க நிகண்டுக்கு பிள்ளை எழுதிய முன்னுரையாகும். இதில் ஐந்து கட்டுரைகள் அடங்கியுள்ளன. நிகண்டுகள் அகராதியாக உருப்பெற்ற வரலாற்றையும், பிற நிகண்டுகள் பற்றியும் விளக்குவன இவை.

1956—ல் **கம்பன் காவியம்:** கம்பனது காவியம், அதைக் கற்கும் நெறிகள், ஆராய்ச்சிப் பதிப்பின் அவசியம், இராமாயணப் பதிப்பு முயற்சிகள், கம்பன், ஆகிய பொருள்கள்

பற்றிய எட்டுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. டி.கே. சி.யின் இராமாயணத்திற்கு இவர் தந்த மதிப்புரையும், அதற்குத் திருவாளர் எ. சி. பால் நாடார் எழுதிய மறுப்புக்கு விடுத்த பதிலுரையும், இவர் மதிப்புரை பற்றிக் கவிமணி கருத்தும், பிறவும் பிற்சேர்வாகச் சேர்ந்துள்ளன.

*1956*–ல் **இலக்கணச் சிந்தனைகள்** : இத் தொகுதிக்குரிய கட்டுரைகள் ஆசிரியரே தொகுத்து அச்சகத்திலும் சேர்த்திருந்தார். ஆனால் இந்நூலுக்கு முன்னுரை எழுதிச் சேர்ப்பதற்குள் இவர் இறைவனடி சேரவே, ஆராய்ச்சி முன்னுரையில்லாமல் இது வெளிவர நேர்ந்தது. **பாணினீயம்** என்ற இலக்கணம் பற்றிய கட்டுரையும், வடமொழி தமிழ் மொழியின் செவிலித் தாய் என வற்புறுத்தும் முறையில் அமைந்த கட்டுரையும், அதனை அடுத்தாற்போல் தொல்காப்பியர் காலத்து மொழி வளர்ச்சி என்ற பொருள் குறித்து அமைக்கப்பெற்ற ஐந்து கட்டுரைகளும், அவைகளையடுத்துச் சிலப்பதிகார இலக்கண வழக்காறுகள் குறித்தும், அண்மை விளி, உறுப்புச் செய்யுள், திராவிட மொழியாராய்ச்சி குறித்தும் தொடரவரும் கட்டுரைகளும், பலவகை இலக்கணங்களின் அவசியம், வரலாற்றிலக்கணம், தத்துவ சாஸ்திரமும் இலக்கணமும் என்ற தலைப்பில் வரும் கட்டுரைகளுமாகப் பத்துக் கட்டுரைகளின் கோவையே இந்நூல்.

*1956*–ல் **சொற்கலை விருந்து**: பிள்ளையவர்கள் தொகுத்த முறையிலேயே இது வெளிவந்தது. இதில் அடங்கியுள்ளவை இதன் பெயரால் விளக்கமுறுவன: சொல்லின் இயல்பு, பேச்சும் மொழியும், சொல்லும் மொழியும், சொல் வளர்ச்சி, சொல்லும் பொருளும் முதலிய சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்.

*1957*–ல் **சொற்களின் சரிதம்** : இதுவும் இவர் தொகுத்ததே. கழகம், களம், கண்வட்டம், பொழுது, முன்னிலைப்

பெயர், தோடு, விருந்து, கந்தருவர், பஞ்சகம், சாதுகை மாந்தர் ஆகிய சொற்களும் சொற்றொடர்களும் பற்றிய சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பத்து இதில் சேர்க்கப் பெற்றுள்ளன.

மேற்குறித்த பன்னிரண்டு தொகுதிகளிலுமாக 192 ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. இவை தவிர மேலும் தொகுப்பதற்குரிய, 'இலக்கிய மண்டபம்' என்ற தலைப்பில் 14-8-'55—லிருந்து இவர் எழுதி வந்த பதினெட்டுக் கட்டுரைகளும், 'அகராதி நினைவுகள்', 'அகராதி வேலையிற் சில அநுபவங்கள்' முதலிய வானொலியில் ஒலி பரப்பப் பெற்ற கட்டுரைகளும் பிறவும் உள்ளன.

சிறுகதைகள் சிலவும், ராஜி என்ற ஓர் நவீனமும், பிள்ளை எழுதியுள்ளார். சிறுகதை மஞ்சரி என்ற இவரது கதைத் தொகுதி ஒன்றும், திராவிடமொழிகளில் ஆராய்ச்சி என்ற சிறு நூலும் முன்னரே வெளிவந்தவை. இலக்கிய மஞ்சரி என்ற பாட நூல் ஒன்று இவரால் தொகுக்கப் பெற்றுள்ளது.

கவிதைகளும் பிள்ளை இயற்றி யிருக்கிறார். இவர் கல்லூரிமாணவராக இருந்த காலத்திலிருந்து கவிதை எழுதுவதை ஒரு பொழுது போக்காகக் கொண்டிருந் தார் என்பது நாட்குறிப்புச் சுவடிகளில் அறியக்கிடக் கிறது. அவற்றுள் சில ஏற்கெனவே பத்திரிகைகளில் பிரசுரமானவை.

என் செல்வங்கள், என்செய்கேன், மெலிவு ஏன்?, விளையுமிடம், என்ன வாழ்க்கை? (William Henry Davis: Leisure), முத்தம் (Shelley: Love's Philosophy), பிரிவு (Walt Whitman: Some times with one I love), பிரிவு (Francis Thompson: Absence), என்ன உறவு? முதலிய கவிதைகள் கையெழுத்துப்பிரதியாக அவர்களது நூல் நிலையத்தில் காணப்படுகின்றன. பல திருமணவாழ்த்துக்களும், ப. ம.

வேணுகோபால நாயுடு அவர்கள் இயற்றிய வடவரங்க ஆற்றுப்படைக்குச் சாற்றுக்கவியும், திரு பரமேஸ்வரப் பணிக்கர் திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத்தின் பிரதி உபதலைவராகப் பதவியேற்ற பொழுது அவர்மேல் வாழ்த்துப் பாடலும் பாடியுள்ளார். தசாவதானம் ஆறுமுகம் பிள்ளை இயற்றிய அண்ணாமலையார் காவியத்திற்குச் சிறப்புப்பாயிரமும் அநேக இரங்கற்பாக்களும் பாடிய செய்தியும் அறியலாகும்.

## கம்பன் நிலயத்தில்

வையாபுரிப்பிள்ளை ஓய்வு பெற்றபின் சென்னையில் குடும்ப வீடு ஒன்று தேவையென எண்ணினார். இவருடைய மாமனார் உயிர் வாழ்ந்த காலத்திலேயே பல முறை இதற்கான முயற்சிகளில் ஈடு பட்டதுண்டு. ஆனால் பயன் பெற வில்லை. இம்மாதிரியான வீண் குடும்பத் தொல்லைகளுக்கெல்லாம் பிள்ளை ஆளாவதில்லை. மாமனார் வேலாயுதம் பிள்ளை மறைந்த பிறகுதான் குடும்பம், வீடு என்று சில நேரத்தை இவற்றிற்காகச் செலவழிக்க நேர்ந்தது.

நண்பர், பெ. நா. அப்புஸ்வாமி ஐயரும் பிள்ளையும் அடையாறுகாந்திநகரில், 1948-ல் Co-operative House Construction Society-யின் மூலமாக வீடு கட்டுவதற்கு ஏற்பாடு செய்தார்கள். காந்திநகர் இரண்டாவது மெயின் ரோடில் 24, 26 இலக்கமுள்ள இரண்டு வீடுகளும் நண்பர் இருவருடையவைகளே.

சென்னையில் வாடகை வீடுகளிலே இருந்து வந்தவர் 1950-ம் வருடம் மே மாதம் தமது சொந்த வீட்டில் குடி புகுந்தார். கம்பனையே கனவிலும் நினைத்து வந்த பிள்ளை தம் புதிய இல்லத்திற்கும் 'கம்பன் நிலயம்' என்றே பெயரிட்டிருந்தார். இங்கு இவருடைய விசாலமான அறையில் சுவர் ஓரமாக அதன் உயரத்திற்குத் தகுந்தபடி பொருத்தப்

பெற்ற இரும்புச்சட்ட அலமாரிகளில் வகைப்படுத்தி அடுக்கிவைத்துள்ள ஆயிரக்கணக்கான புத்தகங்களின் நடுவேதான் ஆராய்ச்சி செய்வதும் ஓய்வெடுத்துக் கொள்வதும் வழக்கமாக இருந்தன. இரவு நேரங்களிலும் வெகுநேரம் படித்துக் கொண்டிருப்பதை, உண்பது உறங்குவதுபோல் இன்றியமையாத தொன்றாகப் பழக்கப் படுத்திக் கொண்டிருந்தார். நோயுற்றிருந்த போதும் இறுதிக்காலம் வரை இதைக் கைவிடாது கடைப்பிடித்து வந்தார். ஒவ்வொரு நாளும் சில மணி நேரம் தான் கண்களுக்கு ஓய்வு கிடைக்கும். திடீரென்று பிள்ளையின் ஆராய்ச்சி அறிவு சுடர்விடவே உறங்கும் நேரத்திலும் எழுந்து உட்கார்ந்து படிக்க ஆரம்பித்து விடுவார். 'உடம்புக்கு ஓய்வு வேண்டும்' என மனைவி மக்கள் பலமுறை வேண்டிக் 'கொள்வார்கள். ஆனால் அந்த வேண்டுகோள் இவர் செவியில் விழுந்தால் தானே! இவர் விழித்துப் படித்துக் கொண்டிருக்கும் நள்ளிரவில் வீட்டில் யாராவது பார்த்து அவரைப் படுத்துக் கொள்ளச் செய்யப் பிரயத்தனப்படுவார்கள். ஆனால் இவர் ஒரே பிடிவாதமாக 'உறக்கம் வரவில்லை. படிக்கவேண்டும்' எனச் சொல்வதோடு, சில புத்தகங்களைக் குறிப்பிட்டு அவற்றைத் தேடியெடுத்து தாம் தெரிவிக்கும் பக்கத்தில் சில பகுதிகளை வாசிக்கச் சொல்வார். படுத்துறங்கும்படி சொல்லச் சென்றவர்கள் தாமும் உடனிருந்து படிக்கவேண்டியதோ, ஒப்பு நோக்க வேண்டியதோ வருமே தவிர இவரைத் திருப்ப இயலாது.

நாட்குறிப்புச் சுவடியில் அன்றாடச் செய்திகளைக் குறித்து வைக்க ஒரு நாள் கூடத் தவறியதே யில்லை. தொடர்ச்சியாக நாற்பது வருஷங்களுக்கு மேலாக இவர் இப்பழக்கத்தை இடைவிடாது மேற்கொண்டிருந்தார். இவர் படித்த ஆயிரக்கணக்கான நூல்களையும் நாட்குறிப்பிலே காணலாகும். எவ்வளவுஊக்கமாகத் தமது நேரத்தையெல்லாம் படிப்பதிலும் எழுதுவதிலும் பேசுவதிலும்

செலவிட்டிருக்கிறார் என்பது தெரியவரும் இக் குறிப்புக் களிலிருந்து சில பகுதிகள் இந்நூலின் இறுதியில் தரப் பட்டுள்ளன.

## காவிய காலச் சொற்பொழிவு

திருவனந்தபுரம் பல்கலைக் கழகத்தின் சார்பாக இவர் தொடர்ந்தாற் போல் சில சொற்பொழிவுகள் நிகழ்த்தும் படி கேட்டுக் கொள்ளப் பட்டார். இவர் அதை ஏற்றுக் கொண்டு 1949-ல் ஜூன் 24 தேதி முதல் 29 வரை 'காவியகாலம்' என்ற, விரிந்த கால ஆராய்ச்சி பற்றிய தொடர்—சொற்பொழிவை ஆறு பிரிவுகளில் நடத்தித் தமது தெளிந்த ஆராய்ச்சி நேர்மையைப் பல அறிஞரும் உணரும் படி செய்தார். கம்பனது இராமகாதையாகிய மகாகாவியப் பிரதிகளில் காணும் ஒரு தனியன் 'எண்ணிய சகாத்த மெண்ணூற்றேழின் மேல்...' என்று குறிப்பதைப் பிறழ உணர்ந்து அவன் காலம் கி. பி. 885 எனக்கொள்ளுதல் பொருந்தாது என்றும், அவ்வாறு கொண்டால் அது மேலும் பல நிகழ்ச்சிகளைப் பொருத்த மற்றதாகச் செய்து விடு மாகையால் பேரெண்ணாகிய ஆயிரத்தின் மேல் எண்ணிய 107 என்று பொருள் கொள்ளுதலே பொருத்த முடையது என்றும் கம்பன் காலம் 12-ம் நூற்றாண்டு என்றும் முறையான, நேர்மையான ஆதாரங்கள் பல காட்டி நிறுவியிருக்கிறார். சொற்பொழிவுகள் கால முறைப்படி இலக்கிய வரலாற்றைப் பாகு படுத்து கின்றன. குறிப்பிட்ட காலப்பகுதியில் தோன்றிய இலக்கி யத்தின் வரலாறு, சரித்திர மனப்பான்மை, விஞ்ஞான நோக்கு, இவற்றை விளக்குகின்றன. தமிழ்க் காவியங் கள் பலவற்றின் கால நிலை, இலக்கியச் சான்றுகளாலும் சரித்திரச் சான்றுகளாலும் ஆராய்ந்து இவற்றில் துணியப் படுகின்றது. பொதுவாகக் காவியங்களின் இயல்பு, சிறப் பியல்பு முதலியனவும், இதுவரை அறியப்படாத பல

நூல்களைப் பற்றிய செய்திகளும் நுட்பமாக ஆராயப்படு கின்றன. பிற்காலத்தில் பெருங்காவியங்கள் தோன்று மைக் குரிய காரணங்களையும் இவர் விளக்கிக் கூறி யுள்ளார். காவிய காலம் என்று நூல் வடிவில் இச்சொற் பொழிவுகள் வெளிவந்துள்ளன.

தொல்காப்பியர், மாணிக்கவாசகர், திருவள்ளுவர் ஆகிய பெரும் புலவர்களின் கால ஆராய்ச்சிகளும், இறு தியில் அவர்கள் காட்டும் முடிபும் முன்னதைப்போல் பெரும்புரட்சி கரமானவை எனப் பலர் எண்ணினர். சிலர் காரசாரமாகப் பத்திரிகைகளில் எழுதினர். ஆனால் பிள்ளை யின் பாரபட்சமற்ற நேர்மையான தெளிந்த உள்ளத் தினின்றும் தோன்றிய கருத்துக்களைத் தகுந்த ஆதாரம் காட்டி மறுத்தவர் இல்லை. ஆதாரமற்ற மறுப்புக்களை இவர் பொருட் படுத்தியதும் இல்லை.

### கம்பன் விழா

காரைக்குடியில் கம்பன் விழாவைப் பெரு முயற்சி யெடுத்து, ஆண்டுதோறும் சிறப்பாக நடத்தி வருபவர் பேர்பெற்ற தேசபக்தரும் பெருந்தமிழருமான சா. கணே சன். பிள்ளை பலமுறை இவ்விழாக்களுக்குத் தலைமை தாங்கி நடத்தி வைத்திருக்கிறார். பல கூட்டங்களில் சொற்பொழி வாற்றியிருக்கிறார். 1950-ல் நடைபெற்ற விழாவில் கம்ப ராமாயணத்திற்கு ஓர் ஆராய்ச்சிப் பதிப்பு அவசியம் என்பதை எடுத்துக் கூறியிருக்கிறார். தக்க பல மொழி களிலும் திறம்பெற்ற புலவர் குழாம் முன்னின்று பொறுப்பேற்று நடத்த வேண்டுமென்பதை வற்புறுத்தி, தமிழ்ச் செல்வர்கள் அதற்கான பொருளுதவி செய்ய முன் வரவேண்டுமென்றும் சொற்பொழிவில் குறிப் பிட்டார்.

1950-ல் திரு சொ. முருகப்பா பதிப்பித்த பால காண்டத்தைத் தலைமை தாங்கி அரங்கேற்றுவித்த போது

கம்பன் காவியத்தைப் பதிப்பிடும் முயற்சியில் பலர் ஈடு பட்டமையைக் குறிப்பிட்டு ஓரளவு திருப்திகரமான பதிப்பைத் திருவாளர் சொ. முருகப்பா வெளியிட்டதைப் பாராட்டிப் பேசினர்.

இவ்வாறு கம்பனைப் பற்றிப் பலகாலும் சிந்தித்தும், ஆராய்ந்தும், படித்தும், பேசியும் இன்புற்ற என் தந்தை யாருக்கு உள்ளத்தில் ஒரு பெருங்குறை இருந்து வந்தது. அதுதான் கம்பராமாயணத்தைச் சிறந்த ஆராய்ச்சிப் பதிப்பாக, பாட பேதங்களை முறைப்படுத்தி, விளக் கங்கள் பல தந்து திருத்தமுறத் தம் வாழ்நாளில் அச் சேற்றிக் காணவேண்டும் என்ற பேரவா.

## இராமாயணப் பதிப்பு முயற்சிகள்

இராமாயணத்தின் சிறந்த பதிப்பை வெளியிட வேண்டுமென்று அதற்கான முன்னேற்பாடுகளையெல்லாம் பிள்ளை அவ்வப்பொழுது செய்து வந்தார். பள்ளிப்பருவ முதல் இவர் உள்ளத்தில் கம்பன் நிலைபெற்று விட்டான். இறுதி மூச்சுவரை கம்பனைப்பற்றியநினைவுதான். கம்பனை உள்ளபடி யறிய இயலாது, கற்க வசதியில்லாது தவிக் கின்றனரே தமிழர்கள் என்ற அங்கலாய்ப்பு அவர் மனத்தில் குடிகொண்டிருந்தது. பலமுறை வெளிப்படை யாகவும் இக் கருத்தை அவர் தெரிவித்ததுண்டு.

இவ் அருங்காவியத்தை வெளியிட எண்ணிச் செய லாற்ற ஆரம்பித்தது இவர் தமிழ்லெக்சிகன் பதிப்பாசிரிய ராக வேலை பார்த்து வந்த காலம். தம் நண்பர் 'பெ. நா.' வும் தாமுமாகக் கம்பராமாயண ஏடுகள் பலவற்றைச் சேகரித்து, பாலகாண்டம் முழுவதையும் ஆராய்ந்து பாட பேதங்களைக் குறித்து முடித்தார்கள். இவ் இரு நண்பர்க ளது முயற்சி 1939-ல் பாலகாண்டம் ஒன்றுமுதல் ஏழுபட

லங்கள் வரை பதிப்பித்து வெளியிட உதவிற்று, இது பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் அவர்களது திருஞான முத்திரைக் கோவை வெளியீடு. பதிப்பு வேலை மேலும் நடைபெற வேறு பல இடையூறுகள் தடை செய்தன. முதல் முயற்சி அதோடு முடிந்தது. இரண்டாம் முறை, பிள்ளையவர்கள் தாமே ஒப்புநோக்கிச் செப்பனிட்டு யுத்தகாண்டத்தின் முதல் மூன்று படலங்களை வெளியிட்டார்கள். அதற்குமேல் பதிப்பு வேலை நடைபெறவில்லை.

1949-ல் தமிழாராய்ச்சித் துறைத் தலைமைப் பதவியிலிருந்து விலகியபின் இவரது கலாசாலை நண்பர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள் கம்பராமாயணத்தைப் பதிப்பிக்கத் திட்டமிட்ட பொழுது, அவ் அரிய செயலைப் பேராசிரியர் ஸ்ரீநிவாசராகவனும், உயர்திரு பி. ஸ்ரீ ஆச்சாரியா அவர்களும், பிள்ளையவர்களும் பொறுப்பேற்று வெளியீட்டைக் கொண்டு வருவதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர். இம்முயற்சியும் வீண் முயற்சியேயாயிற்று. ஆனால் பிள்ளைமட்டும் மேலும் தொடர்ந்து ஏட்டுப்பிரதிகளை ஒப்புநோக்குதல் முதலிய வேலைகளைச் செய்து வந்தார், என்றேனும் ஒருநாள் தம் ஆவல் நிறைவேறும் என்ற நம்பிக்கையோடு. இம் மூன்றும் முயற்சி திருப்திகரமாகப் பயனளித்திருக்கும். ஆனால் தடைப்பட்டது தமிழ் மக்கள் செய்த தவக்குறைதான்.

காரைக்குடி உயர்திருவாளர் சா. கணேசன் அவர்கள் 1950-ல் சென்னைக்கு வந்திருந்த பொழுது பிள்ளையைச் சந்தித்து கம்பனைப் பதிப்பிப்பதுபற்றி அவர்களிடம் பேசி முடிவுகட்டினார்கள். இந்த நாலாவது முயற்சியும் வீணாயிற்று.

1952-ல் (P.E.N. Conference) பதிப்பாளர், நூலாசிரியர், வெளியீட்டாரின் மகாநாடு சிதம்பரத்தில் கூடிய பொழுது

அக்கூட்டத்தில் கலந்து கொண்ட திரு ஆர். கே. சண்முகம் செட்டியாரும் பிள்ளையவர்களும் மறுபடியும் கம்பன் பதிப்பைப் பற்றிப் பேசி அதைப் பதிப்பிக்கத் திட்டமிட்டனர். இத்திட்டமும் பேச்சளவில் நின்றது.

பொதுமக்கள் ஆதரவை நாடியிருப்பதைவிடத் தாமே சொந்தச் செலவில் கம்பனைப் பதிப்பிக்க வேண்டுமென்று முடிவுகட்டி அதற்கான பிரயத்தனங்கள் செய்துவந்தார். ஆனால் அச்சந்தர்ப்பத்தில்தான் அனந்தையில் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத்தலைமைப் பதவி அவரை அழைத்தது.

இறுதிமுறை, பிள்ளையவர்களோடு திருவாளர் வை. கோவிந்தன் கம்பன் வெளியீட்டிற்காக 1952-ல் ஒப்பந்தம்செய்து கொண்டார். ஒப்பந்தம் நிறைவேறாதசெய்தி எல்லோரும் அறிந்ததுதான்.

இவ்வாறு பலமுறை நம்பிக்கையோடு ஆரம்பித்ததும் தொடர்ந்து நடைபெறாததுமான செய்திகளை நாட்குறிப்புச் சுவடிகள் தருகின்றன. இவற்றை மேலும் விளக்கமுற உயர்திரு பி. ஸ்ரீ. ஆச்சார்யா அவர்களது கட்டுரையில் காணலாகும்.

## அனந்தை அழைத்தது!

பலவித ஆராய்ச்சிகளிலே ஈடுபட்டிருந்த பிள்ளையவர்களுக்கு 1951-ல் திருவனந்தபுரம் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியர் திரு மு. இராகவையங்காரிடமிருந்து கடிதம் ஒன்று வந்தது. தாம் பதவியிலிருந்து ஓய்வு பெறப் போவதாகவும் அப்பதவியை இவர் ஏற்றுக் கொள்வது நலமாகும் எனவும் குறித்திருந்தார்.

பிள்ளையவர்கள் மாமனார் செல்வர். அவருடைய ஒரே மகள்தான் சிவகாமி அம்மாள். மாமனார் மறைந்த பின் அவருடைய நில புலங்கள், வீடுகள் முதலானவை

கவனிப்பாரற்று, பலவகைகளிலும் பிள்ளைக்குத் தொல்லை கொடுத்து வந்தன. அனந்தையில் சென்று அவற்றைக் கவனித்துச் சீர்படுத்த வேண்டும் என்ற கருத்து இருந்து வந்தது. ஆகவே அழைப்பை ஏற்றுக்கொள்வதால், தம் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் எனச் சிந்தித்தார் போலும்! நண்பர்களோ, குடும்பத்தாரோ எத்துணை வற்புறுத்திக் கூறியும், இரத்தக் கொதிப்பு முதலிய பலநோய்கள் தலைகாட்டியிருந்த அந்த நிலையிலும் அனந்தை செல்வதென்றே தீர்மானித்தார்.

திருவனந்த புரத்தில் மூன்று ஆண்டுகள் பல்கலைக் கழகத்தின் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராக அமர்ந்திருந்தார்—1951-லிருந்து '54 வரை. இந்தக் குறுகிய காலத்தில் மாமனாரின் சொத்துக்களை அவர் எழுதிவைத்த 'உயில்'படி மனைவி மக்களுக்குப் பாகப்பிரிவினை செய்தார். இதனால் பெரும்பாரம் ஒன்று குறைந்தாற் போன்ற திருப்தி இவருக்கு ஏற்பட்டது.

கவிமணியை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பும் இவருக்குக் கிட்டிற்று. உளம் நெருங்கிய நண்பர்கள்—ஒருவரையொருவர் ஆண்டுக்கொரு முறையே கண்டு களித்து வந்தவர்கள்—இறுதியாக விடைபெற்றுக் கொள்ளும் நேரத்தில் அடிக்கடி சந்தித்து அளவளாவியது இருவருக்கும் ஆறுதல் தந்திருக்க வேண்டும்.

பிள்ளை திருவனந்தபுரம் சென்ற பிறகு உடல் நிலை அதிகமாகப் பாதிக்கப்பட்டது. இரத்தக் கொதிப்பென்னும் கொடிய நோய் இவரை அடிக்கடி துன்புறுத்தி வந்த போதிலும் விடாப்பிடியாகத் தம் அலுவல்களைக் கவனித்து வந்தாரே தவிர உடல்நிலையைச் சற்றும் பொருட்படுத்தவில்லை. அனந்தையில் திரு வீரபத்திரன், திரு பி. எஸ். நடராஜபிள்ளை, திரு வி. ஐ. சுப்பிரமணிய பிள்ளை ஆகிய நண்பர்களோடு இலக்கிய ஆராய்ச்சிகள்

நடத்திவந்தார். டி.கே.சி. அவர்களை நேரிற் கண்டு பேசிப் பலநாளாகி விட்டமையால், ஒருமுறை குற்றாலத்திற்குச் சென்று அவரோடு உரையாடி மகிழ்ந்து அனந்தை திரும்பினார்.

திருவனந்தபுரத்தில், பல்கலைக் கழகத்தின் வெளியீடாக 'உரைமணி மாலை' என்ற கலாசாலை மாணவர்க்கான கட்டுரைத் தொகுதியொன்றைத் தயாரித்து வெளியிட்டார். ஏற்கெனவே வெளிவந்த சில கட்டுரைகளோடு புதிதாக 'டாக்டர் சாமிநாதையர்' என்ற கட்டுரை ஒன்றும் இதில் இடம் பெற்றது. பண்டைத் தமிழர்களின் வாழ்க்கை லட்சியங்களையும், அவற்றைக் கதா பாத்திரங்களின் மூலம் காவியங்கள் வெளிப்படுத்தியுள்ளதையும், இசை, நாடகம் இவற்றின் வரலாறுகளையும் தந்து, இலக்கியத்தை வளப்படுத்தும் மேற்கூறியன தவிர, மேலும் பலதுறைகளிலும் அறிவுவளர்ச்சியுற நூல்நிலயம் அவசியம் என்பது பற்றியும் வரிசையாகக் கட்டுரைகள் கூறிவருகின்றன. மேலும், சொற்கலை குறித்தும், தலைசிறந்து விளங்கிய ஆராய்ச்சிப் பேராசிரியர்சுந்தரம்பிள்ளை, பதிப்பாசிரியப் பெருந்தகை டாக்டர் சுவாமிநாதையர், கவிஞர் பெருந்தகை கவிமணி ஆகிய மூவர் வரலாறுகளும் இந்நூலில் அடங்கியுள்ளன. இத் தொகுதி நூல் மாணவ உலகத்துக்கு இவர் தந்த பரிசு.

திருவனந்தைத் தமிழ்ச் சங்கம் புத்துயிர் பெற, பிள்ளையவர்களைத் தலைவராகவும், திரு பி. எஸ். நடராஜ பிள்ளை, திரு சி. உமைதாணு பிள்ளை ஆகிய இருவரையும் உபதலைவராகவும் கொண்ட புதுக்குழு ஒன்றைஅனந்தைத் தமிழர்கள் அமைத்தனர். 1953-ல் ஏற்றுக்கொண்ட தலைமைப் பொறுப்பைத் தாம் அங்கு இருந்த காலம்வரையில் செவ்வனே நிறைவேற்றினார். சங்கம் மறுமலர்ச்சியுற்றுத் தமிழ்ப்பணி புரியலாயிற்று.

பிள்ளையவர்கள் திருவனந்தபுரத்தில் இருந்தபொழுது தான் டி. கே. சி. யின் இராமாயண அரங்கேற்று விழா குற்றாலத்தில் நடைபெற்றது. விழாவில் தாமும் கலந்து கொண்டார். ஆனால் இப் பதிப்பைப் பற்றி மாறுபட்ட கருத்துக்கள் பல இவருக்கு இருந்தன. 'ஹிந்து' பத்திரிகை இப் புதிய பதிப்பைப் பற்றிய விமர்சனம் ஒன்று எழுதித் தரும்படி இவரைக் கேட்டது. பிள்ளை உள்ளம் நினைத்ததை வெளியிட என்றும் தயங்கியதே இல்லை. உயிருக்குயிரான நண்பர் டி. கே. சி. அவர்கள் செய்திருந்தாலும் குற்றம் குற்றமே என்ற கருத்துடையவர். தாம் குற்றம் குறை எனக் கண்டவற்றைப் பத்திரிகையில் வெளியிட்டார். இவ் விமர்சனம் 1955 பிப்ரவரி 14-ம் நாள் வெளிவந்தது. ஆனால் இரண்டு தினங்களில், 16-ம் தேதி காலை டி. கே. சி. அவர்களின் மரணச் செய்தியை வானொலியில் கேட்டபோது நெஞ்சம் துடிதுடித்தார். வருந்தினார். அநுதாபக் கூட்டங்கள் பல நடத்தினார்—சைவப்பிரகாச சபை முதலிய இடங்களில். குற்றாலம் சென்று நண்பரின் துணைவிக்கும் பேரக் குழந்தைகளுக்கும் தேறுதல் கூறினார். 'அண்மையில் மறைந்த அருந்தமிழர்' என்று டி. கே. சி. யைப் பற்றி வானொலியில் பேசினார். நண்பரின் மறைவு இவருக்கு ஆறாத் துயரளித்தது என்பதை எடுத்துக்கூற வேண்டுவதில்லை.

மூன்று ஆண்டுகள் அனந்தையில் கழித்து, வேலையிலிருந்து விலகி, மீண்டும் சென்னை வருவதற்குத் தீர்மானித்த பொழுது திருவனந்தபுரப் பொதுமக்கள் இவருக்குப் பொன்னாடை போர்த்தி, வெள்ளிப் பேழையில் பிரிவுபசாரப் பத்திரம் வாசித்து அளித்தனர். இவருடைய சார்பற்ற உள்ளத்தையும், நெறிமுறை தவறாத ஆராயும் போக்கையும் வியந்து பாராட்டி 'இன்று கவி பாடித் தங்களைப் போற்றக் கவிமணியில்லை. தங்கள்

பெருமையை இசையில் மீட்டி இங்குப் பாட இசைச் செல்வர் இல்லை. தங்கள் ஆராய்ச்சித் திறனைக் கட்டுரைகளால் சிறப்பிப்பதற்கு இங்கே சிவராஜன் இல்லை. அன்பு கலந்த எங்கள் புன்சொற்களையே பாராட்டுரையாக ஏற்றருள வேண்டும்' எனக் குறிப்பிட்டுப் பல்லாண்டு வாழ்ந்து தமிழ்ப்பணி செய்ய வாழ்த்தினார்கள்.

1953 ஜனவரி 23-ம் நாள் சென்னைக்குத் திரும்பினார் வையாபுரிப்பிள்ளை. நோயின் கொடுமையால் மிகவும் பாதிக்கப்பெற்று, மிகத் தளர்ந்து ஒடுங்கிய நிலையில் காணப்பட்டார். இவரது நண்பர்களும் வீட்டாரும் மிக விழிப்பாக இருந்து உடல் நிலையைக் கவனித்துவந்தனர். திரு. 'பேனு' அவர்களும் அவரது சகோதரரும் வைத்தியத் துறையில் புகழ்பெற்றவருமான டாக்டர் ராமசுப்ரமண்யம் அவர்களும் எடுத்துக்கொண்ட பெருமுயற்சியின் விளைவாக இவர் நாளடைவில் உடல் நலம் முன்போல் பெற்று, மீண்டும் தமிழ்த் தொண்டு செய்ய முற்பட்டார்.

## பொதுப்பணி

பிள்ளையவர்களின் சிந்தையில் தமிழாராய்ச்சி தவிர வேறு எதற்கும் இடமில்லை என்பது மிகத்தெளிவு. ஆயினும் பல்கலைக் கழகத்தார் அவ்வப்போது இவருக்கு வேறு வேலையும் கொடுத்துவந்தனர். பல ஆண்டுகளாகச் சென்னைப் பல்கலைக் கழகத்து பி. ஓ. எல்., பி. ஓ. எல். (ஆனர்ஸ்), எம்.ஏ. முதலிய பட்டத் தேர்வுகளுக்கு, தலைமைத் தேர்வாளராக நியமித்திருந்தார்கள். Ceylon Civil Service பரீட்சையில் தமிழ்ப் பிரிவுக்குத் தேர்வாளராக இருந்ததோடு, Jafna Oriental Society Examination கல்கத்தாப் பல்கலைக் கழகத்து Institute of Engineering, Ceylon University, Bangalore Board of Examiners, மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதத் தேர்வு ஆகிய

பெரும் பொறுப்புள்ள வேலைகளிலும் இவர் ஈடுபட்டு, அவற்றைத் திறம்பட நடத்திப் பெருமைபெற்றார்.

சென்னை நூல்-தேர்வுக் குழுவின் அங்கத்தினராகவும் தலைவராகவும் பல வருடங்கள் இருந்து, பின் தமது வேலைகளுக்கு இடையூறாக அப்பதவி இருந்தமையால், அதிலிருந்து தாமே விலகிக்கொண்டார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், திருவனந்தைப் பல்கலைக் கழகத்திலும் Board of Studies-ல் பணியாற்றியுள்ளார்.

கல்லூரிகளில் இலக்கியக் கழகங்களுக்குத் தலைமை தாங்கிச் சொற்பொழிவாற்றும்படி கேட்டு மாணவர் இவரை அழைத்துப்போவார்கள். யாரிடமும் எதையும் மறுத்துப் பேசுவது இவரது இயல்புக்கு மாறானது.

சென்னை அரசாங்கத்தார் (Technical Terms Committee) கலைச்சொற் குழுவிலும் இவர் அங்கத்தினராக இருந்து செயலாற்றி வந்ததுண்டு.

மேற்குறித்தவையே ஆராய்ச்சி வேலையிலிருந்து இவர் கவனத்தை வேறுவழியில் இழுத்த வேலைகள். எந்த வேலையைச் செய்தாலும் நேர்மைக்கு மாறாக நடந்துகொள்வது என்பது இவரிடத்தில் காணமுடியாது. சில வேளைகளில் இவரது செயல் நண்பர்களுக்கு மனத்தாங்கல் ஏற்படுத்திவிடுவதும் உண்டு. பாடப் புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கும்போது, மாணவ உலகத்துக்குப் பயன்படாது என இவர் தீர்மானித்த நூல்களைப் பாடப் புத்தகமாக ஏற்றுக்கொள்ளமாட்டார். தேர்வு விஷயங்களிலும், கேள்வித்தாள் முதலியன தயாரிக்கும் காலத்திலும் கடமையிலிருந்து சற்றும் பிசகமாட்டார்.

ஆராய்ச்சி வேலைக்கே இறைவன் தமக்கெனப் படைத்த காலம் போதவில்லையென்று இரவையும் பகலாக்கித் தொண்டு செய்து வந்த இவரை சினிமாப்பட Censor

Board-ம் இழுத்தது. அதுவரை சினிமாப்படங்கள் பார்க்க என்றேனும் நண்பர்கள் இழுத்துச் சென்றால் வேண்டா வெறுப்பாக உடன்படுவார்—அவ்வளவுதான்; அரைகுறை மனத்தோடுதான் அதில் கலந்துகொள்வார். Censor வேலை வந்த பிறகு அடிக்கடி சினிமாப் பார்க்கச் சென்றதோடு வீட்டவரையும் அழைத்துப் போகத் தலைப்பட்டார். உழைத்துச் சலித்த உள்ளம் அமைதி நாடியதாலோ, அங்கும் தம் ஆராய்ச்சிக்குப் பயன்படக்கூடியது ஏதேனும் கிடைக்கும் என்ற எண்ணத்தாலோ, எதனால் இந்த மாற்றம் ஏற்பட்டதென அறியக்கூடவில்லை. அனந்தையில் தமிழ்த்துறைத் தலைவராக நியமனம் பெறும்வரை இந்தக் குழுவில் இருந்து வந்தார்.

## இலக்கிய மண்டபம்

என் தந்தையார் திருவனந்தையிலிருந்து வந்த பிறகு ஒரு நாள்கூடப் பூரணநலத்துடன் இருந்தார் என்றுசொல்வதற்கில்லை. படுக்கையில் ஓய்வெடுத்துவந்த நிலையிலும் கட்டுரைகள் எழுதியவண்ணமாகவேயிருந்தார். தாமே எழுதுவதற்குச் சிரமம் இருந்ததால் பிறர் உதவி பெற்று, இவ் இலக்கியப் பணியை மேற்கொண்டு வந்தார்.

தொடர்ச்சியாகக் கட்டுரைகள் எழுதிவர வேண்டுமென்று 'தினமணிக் கதிர்' ஆசிரியர் கேட்டுக் கொண்டதைக் காரணமாகக்கொண்டு, கவனத்தை அதிற் செலுத்திவரலானார். பத்திரிகைக் காரியாலயத்திலிருந்து உதவியாளர் ஒருவர் வந்து இவர் சொல்வதை எழுதிவந்தார். இவ்வாறாகக் கட்டுரைகள் பல வாராவாரம் 'இலக்கிய மண்டபம்' என்ற தனிப்பிரிவின் கீழ், தொடர்ந்து வெளி வந்துகொண்டிருந்தன. 'பண்டைத் தமிழ்நாடும் சமயமும்,' 'அவதாரங்களும் தென்னாட்டுத் தொடர்பும்' முதலிய பல தலைப்புக்களில் வெளி வந்த பதினெட்டு ஆராய்ச்சிக் கட்டுரைகளும் இவரது இறுதிக் கட்டுரைகள்.

## தமிழ் எழுத்தாளர் சங்கப் பாராட்டு

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழன்னைக்குத் தொண்டாற்றி, அவ் இன்பத்திலேயே ஊறித் திளைத்து நின்ற பிள்ளையவர்களைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் பாராட்டவிரும்பியது. 1955-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் மயிலை ரசிகரஞ்சனி சபையில் கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களது தலைமையில் இவ்விழா சிறப்பாக நடைபெற ஏற்பாடாயிற்று. அதே நாளில் பேராசிரியர் மு. இராக வையங்காரையும் பாராட்டச் சங்கம் தீர்மானித்திருந்தது.

பிள்ளையவர்களுடைய உடல்நிலையும் மனநிலையும், வெகுவாகப் பாதிக்கப்பட்டிருந்த காலம். தாம் உயிரென மதித்திருந்த இளைய சகோதரர் சங்கரலிங்கம் பிள்ளை இறைவனடி சேர்ந்து சிலநாட்களே ஆகியிருந்தன. இத் துயரச் செய்தி கேட்டபின் இவரது உடல்நிலை மேலும் கேவலமாயிருந்தது. இருப்பினும் தமிழன்பர்கள் வேண்டு கோளுக்கு இணங்கி எழுத்தாளர் சங்கப் பாராட்டைப் பெறுவதென்றே நிச்சயித்துவிட்டார்.

குறித்த தினத்தன்று மாலை 'கம்பன் காவியம்' என்ற தமது தொகுப்பு நூலை அரங்கேற்றுவதென்று இரவு பகலாகக் கண்விழித்து, அச்சுத் தொழிலாளரையும் ஊக்கப்படுத்திப், பதிப்பு வேலையை விரைந்து முடிக்கச் செய்தார். கம்பனுக்காகவே வாழ்ந்தும், கம்பனை அரங் கேற்றும்நாள் தம் வாழ்நாளில் இல்லை என்பதை அறிந்த பிள்ளையவர்கள், கம்பனையும், கம்பனைக் கற்கும் நெறி களையும், கம்பனைப் பதிப்பிக்கும் தொழில் நுட்பங்களையும் **'கம்பன் காவிய'**த்தின் மூலமாக வெளியிட்டுத் தமிழ் மக்களுக்குத் தம் கடமையை ஒருவாறு நிறைவேற்றினர்.

எழுத்தாளர் சங்கம் கேடயம் வழங்கிப் பிள்ளையவர் களையும் உயர்திரு மு. இராகவையங்கார் அவர்களையும்

கௌரவித்தது. கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் கேடயங்களை வழங்கினர். பிள்ளையவர்களுடைய நெருங்கிய நண்பர்கள் பலர் அன்றைய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, இவருடைய தொண்டின் பெருமை பற்றியும் ஆராய்ச்சி வன்மை பற்றியும் உயர்குணப் பண்பாடு பற்றியும் எடுத்துப் பேசினர்கள். திரு தி. பொ. மீனுட்சிசுந்தரனுர், டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, 'கலைமகள்' ஆசிரியர் கி.வா. ஜகந்நாதன் அவர்கள், திரு பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், திரு ம. பொ. சிவஞான கிராமணியார் ஆகியோர் இதில் கலந்து கொண்டனர்.

## முதலாயிர வெளியீடு

பிள்ளையவர்களுடைய உள்ளத்திற்கும் உடலுக்கும் ஆறுதல் தரக்கூடியது தீவிரமான ஆராய்ச்சி வேலை ஒன்றுதான் என்பதை அறிந்த இவரது நண்பர் 'மர்ரே' ராஜம் அவர்கள் அதற்கொரு தகுந்த உபாயம் கண்டுபிடித்தார். வைணவர் தமக்கே உரியது எனக் கருதி வந்ததும், பண்டிதர் மட்டுமே படித்துவந்ததுமான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தைப் பாமரரும் படித்து இன்புற வேண்டும் என்ற கருத்துடன், பல ஏடுகளைப், பரிசோதித்துப் பொருள் விளங்கச் சந்தி பிரித்து, மலிவுப் பதிப்பாக வெளிக்கொணர வேண்டும் என்ற நோக்கத்துடன், பிள்ளையவர்களை நாடினர். இவரும் அதை உற்சாகத்துடன் ஏற்று, அதற்கான முயற்சிகளில் ஈடுபடலானுர். இவரது புரட்சிகரமான இந்த வேலைக்கு இடையூறுகள் பல இருந்தன. மறுப்புக்கள் காரசாரமாக வெளி வந்தன. இம்மாதிரியான மறுப்புக்களுக்குச் செவிசாய்ப்பதோ, தளர்ச்சியுறுவதோ இவர் இயல்பல்லவே! வேலை தொடர்ந்து நடைபெற்று வந்தது; முதலாயிரமும் வெளி வந்தது. அதனை அடுத்து, நாலாவது ஆயிரமாகிய

திருவாய்மொழியைப் பதிப்பிக்க எடுத்துக்கொண்டு திட்டங்களை யெல்லாம் உருவாக்கினார். இவரது நாட்குறிப்புச் சுவடி 1956-ம்வருடம் பிப்ரவரி 11-ம் தேதி வரையுள்ள குறிப்புக்களைத்தான் காட்டுகிறது. அந்த இறுதி நாளிலே 'திருவாய்மொழி' Suggestions என்று காணப்படுகிறது; ஆனால் அதற்குமேல் என்ன நடந்தது ?

## அறிவுச்சுடர் மறைந்தது

பல நாட்களாகவே இரத்தக் கொதிப்பு நோயினால் துவண்டு, ஹிருதயம் வேலை செய்வதற்குக் கூடச் சில மணி நேரத்திற்கு ஒருமுறை சொட்டு மருந்துகள் உட்கொண்டு, படுக்கையில் இருந்தபடியே, பல வேலைகளையும் செய்து வந்த என் தந்தையாருக்கு 11-ம் தேதி இரவு சுமார் பதினொன்றரை மணிக்குச் சுவாசிக்கச் சிரமம் ஏற்பட்டது. டாக்டர் ராமசுப்ரமண்யம் அவர்கள் வந்து பார்த்து, நெருக்கடி நிலையுணர்ந்து உடனே ஆக்ஸிஜன் சுவாசிக்கக் கொடுத்து, பூரண ஓய்வு வேண்டும் எனக் கண்டிப்பாய்க் கூறிச் சென்றார். மறுநாள் மாலைக்குள் திருப்திகரமான முன்னேற்றம் உடல்நிலையில் காணப்பட்டது. காணப்பட்டதும் கண்ணையிழந்தவன் அதை மீண்டும் பெற்றால் எவ்வாறு இன்பம் எய்துவானோ அது போன்ற பெருமகிழ்ச்சி யடைந்தோம். திரு. பி. ஸ்ரீ., திரு ஸ்ரீநிவாசராகவன், திரு மகரபூஷணம் முதலிய நண்பர்கள் வந்து கண்டு சென்றனர். 'மர்ரே' ராஜம் அவர்களும் 'பேனு' அவர்களும் இந்த நாட்களிலே எடுத்துக் கொண்ட சிரமம் சொல்லில்அடங்காது. டாக்டர் ராமசுப்ரமண்யம் பகலென்றும் இரவென்றும் பாராது அடிக்கடி வந்து கவனித்தார். இரண்டு மூன்று நாட்களில் அநேகமாகப் பூரண நலம் பெற்றுவிட்டார் என்றே எல்லோரும் எண்ணி நம்பிக்கை கொண்டோம். ஆனால், திடீரென்று மூச்சுத் திணறல்

மீண்டும் ஆரம்பித்தது. இவரைக் காப்பாற்றவேண்டிய முயற்சி எவ்வளவோ எடுத்தும் பயனளிக்கவில்லை.

பிப்ரவரி 17-ம் தேதி வெள்ளிக்கிழமை இரவு 11-50க்கு அறிவுச் சுடராக விளங்கிய ஒளி மறைந்தது. இருள் சூழ்ந்தது கம்பன் நிலயத்தில். கம்பனைக் கற்று, கம்பனோடு வாழ்ந்து, கம்பன் நினைவாகவே கம்பன் நிலயத்தில் தம் பூதவுடலை நீத்துப் பெருமான் திருவடி நிழலையடைந்தார் என் தந்தையார். தேவார திருவாசகங்களை நாளும் கேட்டும் பாடியும் ஆரம்பித்த வாழ்க்கைப் பிரயாணம் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களை இடைவிடாது சிந்தித்துப் பாடி மகிழ்ந்து அவற்றோடு ஒன்றி, முடிந்தது. 'ஆராய்ச்சி மன்னர்', 'இலக்கியக் கனவான்', 'ஆராய்ச்சிப் பேரறிஞன்' என்றெல்லாம் பத்திரிகை உலகம்அவரைப் பாராட்டி அஞ்சலி செய்தது.

# 6. ஆராய்ச்சி மன்னரின் மாண்பு

## குடும்ப வாழ்க்கை

பிள்ளையவர்கள் வாழ்க்கைத் துணைவி சிவகாமி அம்மாள் நற்குடிப் பெண்களுக்குரிய பண்பனைத்தும் அமையப் பெற்றவள். இல்லறத்தை ஏற்றுக் கொண்ட சில தினங்களுக்குள்ளாகவே கணவருடைய மேதையையும் தமிழ்க் காதலையும் அவள் நன்குணர்ந்தாள். அந் நாட்களி லிருந்தே இவர் மனம் போல் தமிழ்த்தொண்டு செய்ய விட்டுத் தானே குடும்பக் காரியங்கள் அனைத்தையும் கவ னித்துவந்தாள்.

சென்னையில் வாழ்க்கை நடத்தி வந்தபோது, சில அனுபவங்களைப் பற்றி அம்மாள் தன் குழந்தைகளோடு பேசி மகிழ்வாள்.

"உங்கள் அப்பா ஒரு நாள் என்ன செய்தார்கள் தெரி யுமா? நண்பர் ஒருவரும் தாமுமாகச் சாப்பிட்டுக்கொண் டிருந்தார்கள். நான் உணவு பரிமாறிக் கொண்டிருந் தேன். எதையோ நினைத்துக்கொண்டு சாப்பிடுவது தான் அவர்களுக்குப் பழக்க மாயிற்றே! அன்று அந்தப் புதிய மனிதர் சாப்பிட்டு முடித்து உங்கள் அப்பா எழுந்திருப்பதற்காகக் காத்திருந்தார். திடீரென்று 'சிவ காமி சாதம் போடு' என்று பக்கத்து இலையைச் சுட்டி னார்கள். அந்தமனிதர் எவ்வளவு தடுத்தும் பிடிவாதமாக என்னைச் சாதம் போடும்படி செய்தார்கள். வந்தவரோ திண்டாடிப் போய் விட்டார். உங்கள் அப்பா உபசாரம் செய்கிற அழகு இப்படி! தாம் சாப்பிடும் போதுதான்

குழம்பா, ரசமா,எதைச் சாப்பிட்டோம், எதுவேண்டும், என்று தெரியாமல் சாப்பிடுகிறீர்கள். யாராவது வந்திருக்கும் போதாவது கவனம் வேண்டாமா?" என்று சொல்லுவாள். இதுபோல் பல பல நிகழ்ச்சிகள்.

இவர்களுக்கு மக்களாகத் தோன்றும் பேறு பெற்றவர்கள் நான்கு பெண்களும் மூன்று பிள்ளைகளுமாக எழுவர். இவர்கள் பெயர் வருமாறு: சரோஜினி, தங்கம், மனோன்மணி, பத்மாவதி, சரவணப்பெருமாள், வேலாயுதம், தினகரன். குழந்தைகளிடத்தில் பிள்ளையவர்களுக்கு நிரம்பிய அன்பு உண்டு, என்றாலும் அதை அதிகமாக வெளிக்காட்டுவதில்லை. தாம் செய்யவேண்டிய கடமை ஒன்றைப் பற்றித்தான் அதிகமாகச் சிந்திப்பார். குழந்தைகளும் தாயாரிடம் தமது தேவைகளைக் கேட்டுத் திருப்தி யடைவார்களே தவிர, எடுத்ததற்கெல்லாம் தந்தையாரைத் தொல்லைப் படுத்துவதில்லை. குழந்தைகள் தந்தையாரைக் காண்பதெல்லாம் புத்தகங்களின் நடுவிலோ, நண்பர்கள் நடுவிலோதான். படித்துக் கொண்டிருப்பார்; எழுதிக் கொண்டிருப்பார்; பேசிக்கொண்டிருப்பார்; அல்லது ஏடு பார்த்துக்கொண்டிருப்பார்; குழந்தைகள் நெருங்குவதற்கு, இவர் சும்மா இருந்தால் தானே! எப்போதாவது சாப்பிடும் சமயம், குளிப்பதற்குத் தயாராகும் நேரம் பார்த்துத்தான் இவர் கவனத்தைக் குடும்ப விவகாரங்களில் ஈடுபடுத்த முடியும்.

மனைவி மக்களிடம் பிள்ளையவர்களுக்கு இருந்த அன்பை அளவிட்டுக் கூறமுடியாது. சிவகாமி அம்மாள் நல்லறிவு படைத்தவள். அவளுக்கும் தமிழ்ப்பற்று ஏற்பட நளவெண்பா முதலிய பாடல்களை எப்போதாவது சொல்லித்தந்து மனப்பாடம் செய்விப்பார். சிலமாதங்கள் தொடர்ந்து, இரவு ஒன்பது மணிக்குமேல் பத்து மணிவரை இராமாயணத்திலிருந்து சில பகுதிகளையும் சுவையுள்ள வேறு பல பாடல்களையும் மனைவி மக்களுக்கு எடுத்துச்

சொல்லி விளக்கித் தமிழார்வத்தை அவர்களிடையே தூண்டியதுமுண்டு.

பிள்ளையவர்களுடைய பெண்கள் நால்வருக்கும் வேலாயுதம் பிள்ளை உயிர் வாழ்ந்த காலத்திலேயே திருமணம் செய்து வைத்தார். திருமண நாட்களில் கூட, பிள்ளை தம் இலக்கிய நண்பர் குழாத்துடன் பந்தலின் ஒரு பக்கத்தில் மெய்ம்மறந்து நின்றிருப்பாரே தவிர, எல்லோரையும் வரவேற்று உபசரிக்கும் பொறுப்பையும் மாமனாரிடமே விட்டுவிடுவார். மாமனார் மரணத்திற்குப் பிறகுதான் மைந்தர் மூவருக்கும் திருமணம் நிகழ்ந்தது. பெண் வீட்டில் தான் திருமணம் நடைபெறுவது வழக்கமாகையால் வையாபுரிப் பிள்ளைக்கு அதில் அதிகப் பொறுப்பு இருக்கவில்லை. எப்பொழுதும் போல் தம் ஆராய்ச்சி வேலையில் கவனம் செலுத்தி வந்தார். இவருடைய மாப்பிள்ளைகள் முறையே எஸ். எஸ். இராமசாமிப் பிள்ளை, பி.எஸ்.ஸி., பி.எல்., எஸ். பாடலிங்கம் பிள்ளை பி.ஏ., பி.எல்., சி. நீலகண்டப் பிள்ளை பி.ஏ., எஸ். கிருஷ்ணசாமிப் பிள்ளை பி.எஸ்.ஸி., பி.எல்., ஆகிய நால்வரும் மாமனாரிடம் பெருமதிப்புடையவர்கள். சொத்துக்களைப் பாதுகாப்பது, கோர்ட்டு விவகாரங்களைத் தீர்ப்பது,வேறு குடும்பக் காரியங்களைக் கவனிப்பது முதலியவற்றை இவர்கள் தாமே செய்துவந்ததால், பிள்ளையவர்கள் குடும்ப பாரத்தை அதிகம் உணரவில்லை.

மைந்தர் மூவரையும் நல்ல நிலையில் காணவேண்டும் என்பது என் தந்தையாரின் அவா. அதுவும் அநேகமாக நிறைவேறிற்று என்றுதான் சொல்லவேண்டும். முதல் மைந்தர் வை. சரவணப் பெருமாள் பி.ஏ. பி.இ. அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் Engineering College-ல் விரிவுரையாளராக அமர்ந்து தொழிலாற்றி வருகிறார். இரண்டாவது மைந்தர் வை. வேலாயுதம் எம்.பி. பி.எஸ்., டி.டி.எம். அண்டு எச். (Edin) Yorkshire-ல் County Hospital

Senior House Officer ஆகப் பணியாற்றி வருகிறார். எம்.ஆர்.சி.பி. முடிப்பதற்காக அங்கேயே இருந்துவருகிறார். மூன்றாவது மைந்தர் வை. தினகரன், பி.எஸ்.ஸி.,பி.எல். தொழில்-துறையில் புகுமுன் தந்தையார் இறைவனடி சேரநேர்ந்தது.

சிவகாமிஅம்மாள்நீரிழிவுநோயினால் பாதிக்கப்பட்டுப் பெருந்துயருக்கு ஆளாகிவந்தாள்; கணவர் பிரிவு இவளுக்குப் பேரதிர்ச்சியை உண்டு பண்ணிற்று. கண்ணீர் சோரத் தன் மகளிடம் "அம்மா! சில சமயம் நான் நினைப்பேன்—உன் அப்பாவுக்கு முன் நான் போய்விடவேண்டுமென்று; ஆனால் நினைத்துப் பார்த்தால்—உன் அப்பாவின் இளகிய குழந்தை யுள்ளத்தை நினைத்துப் பார்த்தால்—அவர் போய் நான் துயரனுபவித்ததே நல்லதாயிற்று. இல்லாவிட்டால் என் பிரிவை அவரால் சகித்திருக்கவே முடியாது. நெஞ்சுரம் அவருக்கில்லையடி!" என்று சொல்லி விம்முவாள். பிள்ளையவர்களுடைய குழந்தை யுள்ளத்தை அவளைப் போல்வேறு யார் உணர்ந்திருக்க முடியும்?

அப்பெருங் குணவதி, ஒரு முறை பார்த்துப் பேசியவர்கள் கூடப்பலமுறை நினைத்துப் பாராட்டும் பேச்சுத்திறம் பெற்றவள்-பிறருக்கு உதவி செய்வதில் பேரின்பம் உண்டு எனக் கண்டவள்-பிள்ளையவர்கள் ஆராய்ச்சி மன்னராவதற்கு முதற் காரணமானவள்-கணவரைப் பிரிந்து அதிக நாள் இருக்கவில்லை. இவர் மறைந்த அதே வருடம் டிசம்பர் மாதம் 7-ம் தேதி வெள்ளிக்கிழமை இரவு இறைவன் திருவடி சேர்ந்தாள்.

## இலக்கியத் தோழர்கள்

வையாபுரிப் பிள்ளையும் ஐயரவர்களும்: மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலா நிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரிடம் பிள்ளைக்குப் பெருமதிப்பும் பற்றும் உண்டு.

இவரது ஆராய்ச்சித் திறத்தை அறிந்த ஐயரவர்கள்தாம் இவர் ஆராய்ச்சித் துறைத்தலைவராக நியமனம்பெற உதவி செய்தவர்கள். அவரைப் பற்றி,

"ஐயரவர்கள் 60 ஆண்டுகளாகத் தமிழையே சிந்தித்து வந்தார்கள்; தமிழ் நூல்களையே ஓதி வந்தார்கள், தமிழ் நூல்களையே போதித்து வந்தார்கள்; தமிழ் நூல்களையே பதிப்பித்து வந்தார்கள்; தமிழ் நூல்களையே தேடிப் பெற்றுத் தொகுத்து வந்தார்கள்; இவர்கள் இல்லத்தைத் தமிழ்த் தெய்வத்தின் திருக்கோயில் என்றுதான் சொல்லவேண்டும்...தமிழிலக்கிய சரித்திரத்தின் காலப் பகுதியில் ஐயரவர்கள் தொண்டு புரிந்து வந்த சுமார் 50 ஆண்டுகளையும் 'சுவாமிநாதையர் காலம்' என்று தான் பிற்காலத்தில் வரும் தமிழ்ச் சரித ஆசிரியர்கள் கூறுவர்"

என்று தமிழ்ச்சுடர் மணிகள் என்ற தமது நூலில் குறிப்பிட்டிருக்கிறார். இக் குறிப்பு இவருக்கு ஐயரவர்களிடமிருந்த ஈடுபாட்டை விளக்க வல்லது.

**பிள்ளையவர்களும் தேசபக்தர் வ. உ. சி.யும்:** 1907-ல் பிள்ளை இந்து கலாசாலை மாணவராக இருந்த போது தேசபக்தர் சிதம்பரம்பிள்ளை திருநெல்வேலிக்கு வந்து கீழரதவீதியில் சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினார். அப்பொழுது நாட்டுப் பற்று மிகுந்த மாணவர் பலர் அக்கூட்டத்திற்குச் சென்றிருந்தனர். பிள்ளையும் அதில் கலந்து கொண்டார். வ. உ. சிதம்பரம்பிள்ளையை இங்குதான் இவர் முதல் முதலில் சந்தித்தது. அவர் விஷயங்களைத் தெளிவாக எடுத்துச் சொன்ன முறை இவரை வசீகரித்தது. 1908-ல் போலிக் குற்றங்கள் சாட்டப் பெற்றுச் சிறை சென்றார் தேசபக்தர். இச்செய்தி நெல்லை மாணவரிடையே பெருங்கிளர்ச்சியை விளைத்தது. பள்ளி

செல்ல மறுத்து ஊர்வலத்தில் கலந்து கொண்ட மாணவர்களுள் பிள்ளையவர்களும் ஒருவர்.

வ. உ. சி. அவர்கள் தமிழ்த் தொண்டில் ஈடுபட்ட காலத்தில், நூல்களுக்கு எளிமையான உரைகளிருத்தல் வேண்டும் என்ற கருத்துடைமையினால், தொல்காப்பியத்துக்கு இளம்பூரணருரை எளிதாக இருத்தல் கண்டு, அதனை அச்சிட முயன்றார். பிள்ளையவர்களிடம் தொல்காப்பியப் பொருளதிகார இளம்பூரணருரைப் பிரதியிருப்பது அறிந்து 1913-ல் வ. உ. சி. இவருக்குக் கடிதம் எழுதினார். அந்த நாள் முதல் இருவரும் இலக்கியத் தோழர்களாயினர். 1926-ல் பிள்ளை பதிப்பாசிரிய நியமனம் பெற்ற பிறகும் வ. உ. சி. யவர்கள் சென்னை வரும்போதெல்லாம், திருக்குறள் உரை பற்றியும், பிற இலக்கிய இலக்கண ஆராய்ச்சிகள் பற்றியும் இவரோடு உரையாடி மகிழ்வார். இவரது அமைதியும், தருக்க நெறி பிறழாத பேச்சும், ஆழ்ந்த தமிழுணர்ச்சியும் வ. உ. சி. யவர்களைப் பிணித்து விட்டன. இவரது பதிப்பு வேலைகளுக்கு ஏடு தேடிக் கொடுப்பதில் கண்ணுங் கருத்துமாயிருந்தார் தமிழார்வம் மிக்க தேசபக்தர். வ. உ. சி.யும் பிள்ளையவர்களும் சேர்ந்து தொல்காப்பியப் பொருளதிகார இளம்பூரணருரையைப் பதிப்பித்தார்கள்.

"நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் நெருங்கிய சம்பந்தமுடையன. மொழிப்பற்றிலே தொடங்கி அதிலேயே நான் வாழ்ந்துவருகிறேன். தேசப்பற்று மொழிப் பற்றின் அடுத்தபடியாகத்தான் என் உள்ளத்தில் நிலவுகிறது. நாட்டுப்பற்றில் வ. உ. சி. யவர்கள் முனைந்து நின்று, பிற்காலத்தில் மொழிப்பற்றில் அமைந்து விட்டார்கள்.

"வ. உ. சி. யவர்களை நான் மறக்க முடியாது. அவரது சீரிய குணங்களை நினைக்குந்தோறும் எத்தனை சிறந்த

தமிழ்ப் பெரியாரை நாம் இழந்து விட்டோம் என்ற உணர்ச்சி மேலிட்டெழுகின்றது''

எனப் பெருந்தேசபக்தர் வ. உ. சி. யைப் பற்றித் தாம் எழுதிய கட்டுரையில் எழுதுகின்றார்.

டி. கே. சி யும், பி. ஸ்ரீ யும்: கல்லாத நாளெல்லாம் பிறவாத நாள், கம்பனைப் பேசாத நாளெல்லாம் பயனற்ற நாள் எனக் கம்பனைக் கற்பதற்கும், பேசுவதற்குமே வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டவர்கள் பிள்ளையவர்கள், ரசிகமணி, பி. ஸ்ரீ. ஆகிய மூவர் என்பது பொதுவாகத் தமிழுலகில் நிலவி வரும் கருத்து. இம் மூவரும் தம் இளமைப் பருவம் தொட்டே கம்பராமாயண ஆராய்ச்சியை ஒன்று கலந்தும், தனித்தும் செய்து வந்தனர். மூவரும் நெல்லையிலிருந்த காலத்து இவ்வாராய்ச்சி நடைபெற்று வந்தது. இந்த இலக்கியக் கழகத்தில் பிள்ளை முக்கிய உறுப்பினர்களுள் ஒருவர். ஸ்ரீ. ஆர். பி. சேதுப்பிள்ளை, ஸ்ரீ ஜெ. சக்கரபாணி நம்பியார், ஸ்ரீ எஸ். சுப்பையா முதலியார், ஸ்ரீ அனந்தராமையங்கார் முதலிய பல தமிழன்பர்களும் இதன் அங்கத்தினர்கள்.

பிள்ளையவர்கள் சென்னையில் பதிப்பாசிரியராக 1926-ல் பதவியேற்ற மறுவருடமே 1927-ல் ரசிகமணி சென்னை மேல் சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். 'பி. ஸ்ரீ' யும் சில ஆண்டுகளுக்குப்பின் சென்னை வந்தார். மூவரும் கம்பராமாயண ஆராய்ச்சி தொடர்ந்து நடத்த வாய்ப்பு ஏற்பட்டது. இவர்களுடன் கலந்து கொண்டவர்கள் ராஜாஜியவர்கள், ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், 'கல்கி' முதலியவர்கள்.

ரசிகமணி கம்பனுடைய கவிதா ரசனையைத் தாமும் அனுபவித்துப் பிறருக்கும் அள்ளி அள்ளிக் கொடுப்பதையே லட்சியமாகக் கொண்டவர். அந்த ரசனைக்குத்

தகுந்த கவிதைகள் எனத் தாம் கருதியவற்றை மட்டுமே கம்பன் இயற்றினன் என்று முடிவுகட்டினர். அதோடன்றிப் பாடங்களைத் திருத்தியமைக்கவும் முற்பட்டார். பிள்ளையவர்களால் அவ்வளவு எளிதாக இவற்றையெல்லாம் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இவ் இலக்கிய நண்பர்களிடையே கருத்து வேற்றுமை நிலவிய தெனினும் இருவரும் ஆரா நட்பினர். இரு குடும்பங்களுக்கிடையேயும் நட்புறவு நிலவி வந்தது.

பி. ஸ்ரீ அவர்கள் பிள்ளையவர்களிடம் அன்று பாலப் பருவத்தில் எப்படி உளம் கலந்து பழகி வந்தாரோ அது போல் பிள்ளையின் இறுதிக் காலம் வரை அன்பும் பெரு மதிப்பும் வைத்திருந்தனர். பாலகாண்டத்தை நண்பர் இருவரும் பல நாள் ஆய்ந்து படித்தார்கள். "கம்ப ராமாயணத்தின் சிறந்த ஆராய்ச்சிப் பதிப்பொன்று பிள்ளையவர்கள் வாழ்நாளில் வரவேண்டும்" எனப் பல முறை வெளிப்படையாகச் சொன்னதோடன்றி அதற்காகப் பலமுறை முயற்சி எடுத்துக் கொண்டதும் உண்டு. தெய்வத் திருவுளம் வேறாக இருந்தது. பிள்ளையவர்களுடைய உளம் நெருங்கிய நண்பர் சிலருள் பி. ஸ்ரீ யும் ஒருவர்.

**திருவாளர்கள் க. அ. நீலகண்ட சாஸ்திரியும், வே. சாரநாதையங்காரும்:** சரித்திரப் பெரும் பேராசிரியராய் விளங்கும் திரு நீலகண்ட சாஸ்திரியாரும் காலஞ் சென்ற பேராசிரியர் சாரநாதையங்காரும் பிள்ளையின் பள்ளித் தோழர்கள். வாழ்க்கைத் துறையில் புகுந்த பின்னரும் நெருங்கிய தொடர்பு இவர்களுக்கு இருந்து வந்தது. திரு சாரநாதையங்கார் திருச்சி தேசியக் கல்லூரித் தலைவராக இருந்த நாட்களில் சென்னை வரும்போதெல்லாம் பிள்ளையைக் கண்டு பேசத் தவறியதில்லை. நண்பர் சாரநாதையங்காரின் அகால மரணம் பிள்ளைக்குத் துன்பம்விளைத்தது.

சரித்திரப் பேராசிரியர் திரு நீலகண்ட சாஸ்திரியாருக்கும் பிள்ளையவர்களுக்கும் நெருங்கிய நட்புறவு பள்ளிப் பருவமுதல் இருந்து வந்தது. இவ் இணைபிரியாத் தோழர்கள் இருவரும் பல்கலைக் கழகத்தின் இருவேறு பிரிவுக்குத் தலைவர்களாயினர். தமிழாராய்ச்சியும் வரலாற்று ஆராய்ச்சியும் ஒன்றற் கொன்று ஆதாரமாய் இன்றியமையாததாய் விளங்குவதுபோலத் தமிழ்ப்பேராசிரியரும் சரித்திரப் பேராசிரியரும் இணைந்து வாழ்க்கைத் துறையிலும் வெற்றி பெற்றனர். பிள்ளையவர்களின் நாட்குறிப்புச் சுவடிகள் நண்பர்கள் இருவரும் சேர்ந்து தொல்காப்பியம், தேவாரம், தேவாரத்தில் பௌத்தமதக் கொள்கைகள், தமிழ் இலக்கிய சரிதம், குறள், சங்ககாலம், சேரன் செங்குட்டுவன் காலம், கல்வெட்டுக்கள் முதலிய பல விஷயங்கள் குறித்து ஆராய்ந்தமையைக் குறிக்கின்றன. தந்தையார் மரணப் படுக்கையில் இருந்தபோது என்னிடம் 'நீலகண்டன் என் உடல் நிலையை விசாரித்து எழுதிக்கொண்டிருக்கிறன்; அவனுக்குக் கடிதம் எழுது'' என்று தெரிவித்தார். அதுவே அவர் கடைசிப் பேச்சு: நண்பர்கள் இருவருக்கிடையே நிலவியபேரன்பை விளக்க வேறொன்று தேவையோ ?

**பிள்ளையவர்களும் கவிமணியும்:** அனந்தையில் வக்கீல் தொழில் பார்த்து வந்த காலத்திலிருந்து கவிமணிக்கும் பிள்ளையவர்களுக்கும் நட்புறவு இருந்து வந்தமையும், ஒருவருக்கொருவர் இலக்கிய முயற்சிகளில் துணை நின்றமையும் முன்னரே குறிக்கப்பட்டன. பிள்ளை சென்னையில் பதிப்பாசிரியராக வந்த பிறகு ஒவ்வொரு வருடமும் விடுமுறைக் காலங்களில் கவிமணியைப் பார்க்கச் செல்வதுண்டு. அச்சமயங்களிலெல்லாம் கவிமணியும் தாமும் மணிக்கணக்காக நேரம் போவது தெரியாமல் உரையாடுவார்கள். இலக்கிய ஆராய்ச்சிபற்றியும் குடும்பச் செய்திகள் குறித்தும் கலந்து பேசி இன்புறுவார்கள். கவி

மணி புதிதாகப் புனையும் கவிதைகளில் சிற்சில இடங்களில் இரண்டு வார்த்தைகள் தந்து, அவற்றுள் இடத்திற்கேற்பச் சிறப்பாய் அமைவது எது என்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பைப் பிள்ளைக்கு விட்டுவிடுவார். இவரும் பதிப்பு வேலைகளில் தமக்கு ஐயப்பாடு நேரும் இடத்திலெல்லாம் கவிமணியின் கருத்தையும் அறியவிரும்புவார். இருவரும் உள்ளத்தாலும் உயிராலும் ஒருமையானவர்கள். இருவரும் உயிர் வாழ்ந்த காலத்தில் ஒருவரையொருவர் வெளிப்படையாகப் புகழுரை கூறிக் கொண்டதே யில்லை. வையாபுரிப் பிள்ளையைப் பாராட்டுவது தம்மைப் பாராட்டிக் கொள்வது போலாகும் எனக் கவிமணி கருதுவார்.

'கவிமணியின் கீர்த்தனை' என்ற தொகுதிக்குப் பிள்ளை வழங்கியுள்ள முன்னுரை நட்பென்னும் உள்ளத் துடிப்பு உணர்ச்சி வயப்பட்டுப் பொங்கிப் பிரவகித்து வந்தமை புலப்படுத்துகின்றது.

அனந்தையில் உயிர் நண்பருக்கு இறுதி மரியாதை செலுத்தியதுதான் பிள்ளையவர்களுக்கு அவ்விடத்தில் இருந்த கடைசி வேலை. கவிமணி மறைந்ததிலிருந்து சிற கிழந்த பறவையென உயிர் வாழ்ந்தார். 'கம்பன் காவியம்' என்ற தமது இறுதித்தொகுதி நூலை உயிர்த்துணைவர் கவிமணிக்கு உரிமையாக்கி யுள்ளமை அவ் இருவரது இணைபிரியா நட்புக்குச் சான்றாகும்.

**பிள்ளையவர்களும் 'பேனு'வும் :** திரு பெ. நா. அப்புஸ்வாமி ஐயரவர்கள் இந்துக் கல்லூரியில் இப் பேராசிரியருக்கு அறிமுகமானவர். அந்நாள் முதல் பிள்ளையவர்களுக்கு உண்மைத் தோழராகவும் குடும்ப ஆலோசனையாளராகவும் விளங்கலானார். குடும்பத்தவர் இவர்களைக் கிருஷ்ணார்ஜுனர்கள் எனவும், இருவர் நட்புறவு அறிந்த பிறர் இரட்டையர்கள் எனவும் வைத்துப் பேசும் அள

வுக்கு இவர்கள் தொடர்பு இருந்துவந்தது. மயிலையில் அடுத்தடுத்து வசித்தாற்போலவே நண்பர் இருவரும் அடையாற்றில் இடம்தேடி வீடுகட்டிக் கொண்டனர்.

**பிள்ளையும் பிற இலக்கிய நண்பர்களும்:** பிள்ளையவர்களுடைய இலக்கிய முயற்சிகளுக்கெல்லாம் அவ்வப்போது ஊக்கமளித்து, ஆதரவு காட்டிய பல நண்பர்களைப் பற்றியும் இச்சிறு குறிப்பு நூலில் விளக்கமாகச் சொல்லிப் போவது இயலாத தொன்று.

தமிழ்ப் பேராசிரியர்கள் திருவாளர்கள் மு. இராகவையங்கார், ரா. இராகவையங்கார், திரு வி. க., ஆர். பி. சேதுப்பிள்ளை, ஸ்ரீநிவாசன், அநந்தராமையங்கார், மகரபூஷணமையங்கார், பெரியன் ஸ்ரீநிவாசையங்கார், சைவ சமாஜக் காரியதரிசி பாலசுப்பிரமணிய முதலியார், வெ. ப. சுப்பிரமணிய முதலியார், கா. நமச்சிவாய முதலியார், ஏ. வி. சுப்ரமண்ய ஐயர், ஹரிஹர சாஸ்திரியார், தி. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, துரை அரங்கனார், வேதநாயம் பிள்ளை, நாவலர் சோமசுந்தர பாரதி, டாக்டர் சேஷாத்ரிநாதன், சா. கணேசன் முதலியவர்களும் பேராசிரியரின் நண்பர்கள். வையாபுரிப்பிள்ளையவர்கள் தம் நட்பு எத்தகையது என்பதைப்பற்றித் தாம் குறித்திருப்பது இங்குக் கவனிக்கத் தக்கது.

"எனது நட்பு பிராமணர், அல்லாதார் என்ற ஜாதி வேறுபாடுகளைக் கடந்தது; வடமொழி, தமிழ் என்ற மொழி வேறுபாடுகளைக் கருதாதது; பண்டிதர்கள் ஆங்கிலம் கற்ற தமிழர்கள் என்ற சிறு வரம்புகளை மதியாதது; சைவம், வைஷ்ணவம் முதலிய மதவேறுபாடுகளைக் கனவிலும் மதியாதது; சங்ககாலத்தமிழ், இடைக்காலத்தமிழ், தற்காலத் தமிழ் என்றவற்றில் ஏதேனும் ஒன்றில் அபிமானம் வைத்து அதனையே கற்பது என்ற நியதியைக் கொள்ளாதது; அறிவு வளர்ச்சியும்,

தமிழுணர்வுப் பெருக்கமும், உண்மை நாட்டமும், நடு நிலைமையுமே என்னை ஊக்கி வந்தன''

பேராசிரியரின் நண்பர்கள் இக் கூற்றின் உண்மையை நன்கறிந்தவர்கள்.

**பிள்ளையவர்களின் மாணவர்கள்:** இவரிடம் அவ்வப் போது பாடம் கேட்டவர் பலர் எனினும் முறையே கற்றுத் தெளிந்தவர் இருவர். திருமதி தானு அம்மாள் மூர்த்தி, திருவாளர் மு. சண்முகம் பிள்ளை ஆவர். அம்மையார் சென்னை எதிராஜ்கல்லூரித் தமிழாசிரியையாகத் தொண்டு புரிந்து வருகிறார். திரு சண்முகம் பிள்ளையவர்கள் சென்னைக் கலைக் கல்லூரியில் தொண்டாற்றித் தற்போது கோயம்புத்தூர் அரசாங்கக் கல்லூரியில் வேலை பார்த்து வருகிறார். இவர் பிள்ளையவர்களுடைய இலக்கிய முயற்சிகளுக்கெல்லாம் உடனிருந்து ஒப்புநோக்குதல், பிரதி செய்தல், அச்சுத்தாள்கள் திருத்தம் செய்தல் முதலிய பணிகளைச் செய்து வந்தார்.

**நூல் பிரசுரகர்த்தர்கள்:** ஸ்ரீ பிள்ளை இயற்றிய நூல்களை எல்லாம் மிக்க சிரத்தை எடுத்துக்கொண்டு, தமிழ்ப் புத்தகாலயம் திரு கண. முத்தையாவும், பாரி நிலையம் திரு கே. ஏ. செல்லப்பாவும் அன்புடனும் ஆர்வத்துடனும் சிறந்த முறையில் வெளியிட்டு வருகிறார்கள். பிள்ளையவர்கள் வாழ்நாளிலேயே கட்டுரைத்தொகுதிகள் ஒன்றன் பின் ஒன்ருக வெளிவந்தமை இவ்விருவரது இடைவிடா ஒத்துழைப்பினுல்தான் என்பதை இங்குக் குறிக்க வேண்டும்.

## பேராசிரியர் பண்பு

ஆராய்ச்சி மன்னரெனும் புகழ்ப் பெயருக்குப் பாத்திரமாய் விளங்கிய ஆராய்ச்சிப் பேரறிஞர் வையாபுரிப் பிள்ளையின் ஆராய்ச்சித் திறமை நிகரற்றது என்பதை

அறியாதார் இல்லை. ஆராய்ச்சிக்குரிய ஒவ்வொரு விஷயத்திலும் கருத்து வேறு பாட்டிற்கு இடமுண்டு என்ற பரந்த உணர்ச்சி யுடையவர் இவர். எனவே, மாறுபட்ட கருத்துக்களைப் பொறுமையுடன் ஆராயும் பெருங்குணமும் இவரிடம் இருந்தது.

இவரது கட்டுரைகள் அனைத்திலும் ஆராய்ச்சித் திறம் சிறந்து விளங்குதல் காணலாம். ஒவ்வொன்றிலும் இதுவரை பிறரால் அறியப்படாத ஒரு புதிய முடிவு ஆராய்ந்து நிறுவப்பட்டுள்ளது எனலாம். இவர் முடிவு நிறுவுகின்ற முறையை அறிஞர்கள் போற்றிப் பாராட்டுவதுண்டு. இவரது அறிவினின்றும் காரணங்கள் சுரந்தெழுந்த வண்ணமாய்த் தக்க உருவமெடுத்து வந்து கற்பாரை வசீகரித்து விடும். ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட பொருள்களும் பல திறத்தனவாம்; பலதிறப்பட்ட வாசகர்களும் அநுபவிக்கும்படியாகவே உள்ளன.

பிள்ளையவர்களின் உரைநடைத் திறம் பற்றியும் அறிவது ஏற்புடையதாகும்.

> "உரைநடைக்கு உயிர்நிலையாகவுள்ளது 'தெளிவு' எனப்படும் குணம். இவ் அரிய குணம் இல்லையேல் அது நடைப்பிணம் எழுந்து இயங்க முயலுவது போன்றிருக்கும். உரை நடையில் தெளிவு ஏற்படவேண்டுமாயின் கருத்தும் தெளிவு பெற நிகழவேண்டும். கருத்தின் தெளிவு உரைநடையிற் பிரதிபலிப்பதாகும்" என இவரே எழுதியிருக்கிறார்.

இவருடைய உரைநடை தெளிந்த பரிபக்குவ மடைந்த நடை. ஆடம்பரமற்ற நடை. பண்டை இலக்கியங்களிலும், பிறநூல்களிலும் நன்கு பயின்று மனம் பண்பட்டிருத்தலால் இவரது உரைநடையில் ஓர் அபூர்வமான கனிவும் இனிமையும் வெளிப்படுகின்றன.

பிள்ளையவர்களின் பண்புகள் பற்றியும் இங்கு ஆராய்தல் பொருந்தும். அன்பும் கனிவும் கொண்ட திருவுருவம். அறிவுக்கனலை அள்ளி வீசும் கண்கள்; அருள் கனிந்த முறுவல்; முறையற்ற எதிர்ப்புக்களுக்கு அஞ்சாத நெஞ்சுரம், ஆயின், அதற்குள் பகைவனுக்கும் அருளும் பண்பு; குழந்தை உள்ளம்—இவையனைத்தும் பிள்ளையவர்களைத் தோற்றத்தால் விளக்கவல்லன. பொறுமைக்கு இருப்பிடம். அடக்கம், அன்பு, அமைதி, இவை இளம் பருவ முதல் பிள்ளையவர்களோடு வளர்ந்து வந்த பண்புகள். ஈ, எறும்புகள் கூடத் துன்புறச் சகியாதவர். ஆனால், தம்மைக் குறித்து மனைவி மக்களோ, நண்பர்களோ கவலைப்படும்படி நடந்து கொள்ளக்கூடாது என்பதை மட்டும் எண்ணிப் பார்த்ததே யில்லை. தாம் உடல் வருந்த நேரத்திற்கு உணவருந்தாது, போதிய தூக்கம் இன்றி உழைத்து உழைத்து உடல் நிலையைக் கேவலமாக்கிக் கொண்டார். நண்பரும் வைத்திய நிபுணருமான டாக்டர் ராமசுப்ரமண்யம் அவர்கள் எச்சரிக்கை செய்தாலும் கட்டுப்பட்டு நடக்க முயல்வாரே தவிர அவ்வாறே செய்து முடிக்க இயலாது.

பிள்ளையவர்கள் நாட்குறிப்பு எழுதுவதைத் தம் இளம் பருவமுதலே இடைவிடாது செய்து வந்திருக்கிறார். தமது நேரத்தை யெல்லாம் ஒரு விநாடிகூட வீணாக்காது, இரவையும் பகலாக்கி, பல ஆயிரக்கணக்கான நூல்களைப் படிக்கவும் நூற்றுக்கணக்கான ஆராய்ச்சிக் கட்டுரைகள் வரையவும், இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தவும், ஓய்வெடுத்துக் கொள்ளும் நேரத்தைக் கூடச் சிந்திக்கவும் பயன் படுத்திக் கொண்டிருந்தது நாட்குறிப்புச் சுவடிகளால் அறியலாகும்.

நண்பர்களுக்கோ மற்றவர்களுக்கோ உறவினர்க்கோ கடிதம் எழுதுவதெல்லாம் ஆங்கிலத்தில்தான். நாட்குறிப்

புக்களும் ஆங்கிலத்திலேயே உள்ளன. நூலகத்தில் பெரும்பகுதி ஆங்கில நூல்களே.

தந்தையார் நேர்மை நெறி தவறாத உத்தமர் என்பது நாடறியும். இவர் பல்கலைக் கழகப் பட்டப் பரீட்சைகளுக்குத் தலைமைத் தேர்வாளராக இருந்ததுண்டு. அந்த நாட்களில் பல மாணவர் முடிவு தெரியவும் வேறு பல காரணங்களுக்காகவும் வருவதுண்டு. ஆனால் அது விஷயமாக இவரிடம் ஒன்றுமே நடவாது. அதை நாளடைவில் பலரும் உணர்ந்தனர். நேர்மை ஒன்றே வாழ்க்கையின் வெற்றிக்கு வழியென்பதை அநுபவத்தில் கண்டறிந்தவர்.

குறித்த காரியத்தைக் குறிப்பிட்ட நேரத்தில் செய்து முடிக்க வேண்டுமென்ற கால உணர்ச்சி மிக உண்டு. ஆனால் அதைத் தம் உணவு விஷயத்தில் மட்டும் கவனிப்பதில்லை.

அவசியமின்றி யாருடனும் அதிகம் பேசமாட்டார். தம் மனத்தை உறுத்தும் செய்தியை நண்பர்களுடன் பகிர்ந்து கொள்வதும் இவரது இயல்பன்று. நண்பர்களுக்குள்ளேயே ஒரு சிலரிடம்தான் உள்ளத்தை விட்டுச் சில சொல்வார். அச்சிலரிலும் இன்னின்னாரிடம் இதைத் தான் சொல்லலாம் என்று வேறு முடிவு கட்டிக்கொள்வார். மாணவர்களும் இளம் எழுத்தாளர்களும் இவரிடம் அடிக்கடி கழகங்களில் பேசவோ, முன்னுரைகள் வேண்டியோ வருவதுண்டு. அவர்களை இன்முகத்தோடு வரவேற்றுச் சில நிமிஷநேரமாவது உள்ளங்குளிரப் பேசி அனுப்புவது பிள்ளையவர்களது பண்பாட்டை விளக்குவதாகும்.

1954-ல் ஒரு நாள் திருவாளர் பி.ஏ. தாஸ் என்பவர் பிள்ளையவர்கள் இல்லம் சென்று இவரிடம் ‘கவியும் ரோஜாவும்’ என்ற தமது நூலுக்கு முன்னுரை யொன்று வேண்டுமெனக் கேட்டார். இந்த நிகழ்ச்சிபற்றி திரு தாஸ்

அவர்கள் எழுதியுள்ளதிலிருந்து ஒரு சில இங்கே தருவது பிள்ளையவர்கள் இயல்பை நன்கு விளக்குவதாகும்:

"நாளைக்காலை விமானத்தில் திருவனந்தபுரம் போகிறேன். இன்று இரவே உமது நூலைப் படித்து முடித்து எனது முன்னுரையை எழுதி என் மாப்பிள்ளையிடம் கொடுத்துவிடுகிறேன்' என்றார்கள். கனிவு ததும்பச் சிறிது நேரம் பேசினாலும் மூச்சுத்திணறும் அளவுக்கு அவர்களின் உடல்நலம் மிகவும் குன்றியிருந்தது. அந்தத் தள்ளாத நிலையிலும் அவர்களின் அன்பும், கனிவும், இலக்கிய ஆர்வமும், சிறிதும் களை தட்டவில்லை............மறுநாள் அருமையான தமது முன்னுரையை எழுதி எனக்கு அனுப்பிய பின்பே அவர்கள் திருவனந்தபுரம் புறப்பட்டார்கள்".

பிள்ளையவர்களுடைய பெருந்தன்மையையும் யாருக்கும் எதையும் மறுக்காத உள்ளப்பாங்கையும், சொல்வதைச் செய்து முடிக்கும் உயர்பண்பையும் இது விளக்க வல்ல தன்றோ?

'ஓர் ஆசிரியனது பண்பாடு அவன் இயற்றிய இலக்கியத்தால் புலனும்' என்று கூறிய பிள்ளையவர்களது பண்பாடு அவர் இயற்றியுள்ள இலக்கிய மலர்மாலைகளின் நறுமணத்தினின்று தெளியலாகும். வாழ்நாளில் தமிழ்த் தாய்க்கு அரும்பணி பல புரிந்து தமிழ் மக்கள் 'மன்னன்' எனப் போற்றுதற்குரிய தகுதி பெற்றார். தமிழறிஞர் பலர் 'ஆராய்ச்சி மன்னர்' என்று மணி மகுடம் புனைந்தார்கள். மகுடத்தில் அங்கங்கே இலக்கிய மணிகள் சுடர் விட்டுப் பிரகாசித்தன; ஆனால் நடு நாயக மணி மட்டும் ஒளியிழந்து நின்றது. **கம்பன் காவியப் பதிப்பை** அம்மன்னரிடமிருந்து பெறாத தமிழர் குறைதான் போலும் அது!

# ஒரு நண்பரின் பாராட்டு

## பத்மபூஷண் க. அ. நீலகண்ட சாஸ்திரி

ஸ்ரீ பிள்ளையவர்களைப் பற்றிய என் நினைவுகளை ஒரு கட்டுரையாக எழுதித்தரவேண்டும் என்று அவர்களுடைய அருமைப் புதல்வி ஸ்ரீமதி சரோஜினி என்னைக் கேட்டுக் கொண்டதற்கு இணங்கிச் சில சொற்களைப் பரிவுடன் எழுத முற்படுகிறேன். ஆனால் நாற்பத்தைந்து வருஷங் களுக்கு மேற்பட்டகாலமாக எங்களுக்குள் ஏற்பட்டுள்ள நட்புத் தொடர்புகள் அனைத்தையும் விரிவாக எழுத முடி யாது; எழுதினாலும் அது பிறருக்கு ருசிக்காது. ஆகையால் அவர்களுடைய அரிய நட்பினால் நான் அடைந்த பெரிய லாபத்தை நன்றியுடன் ஒரு சிறிது விளக்கவும், நான் அறிந்தவரை அவருடைய சில குணதிசயங்களைக் குறிக் கவும் விரும்புகிறேன்.

ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களும் நானும் 1907 ல் திருநெல்வேலி ஹிந்து காலேஜில் எப். ஏ.யின் முதல் வருஷத்து வகுப்பில் மாணாக்கர்களாக இருக்கும் போது பழகத்தொடங்கினோம். அதுமுதல் சென்றவருஷம் அவர்கள் காலகதி அடையும்வரை நாங்கள் நண்பர்களாக வாழ்ந்தோம். இது என் பெரும் பாக்கியங்களில் ஒன்றாக நான் கருதுகிறேன். எங்கள் கூட்டத்தில் நெருங்கிப் பழகிய நண்பர்கள் வேறு சிலரும் உண்டு. அவர்கள் ஸ்ரீ பெ நா. அப்புஸ்வாமி, ஸ்ரீ பி. ஸ்ரீ., காலஞ்சென்ற ஸ்ரீ வே. சாரநாதன், ஸ்ரீ கே.ஜி. , சங்கரையர்முதலியோர்ஆவர். வையாபுரிப் பிள்ளை அவர்களுடைய அன்பினால் எனக்குக் கிடைத்த பெருலாபம் தமிழ்ப் பயிற்சி. நான் சென்னைப் பல்கலைக்

கழகத்தில் இந்திய சரித்திர ஆசிரியராக 1929ல் சேர்ந்த போது எனக்குத் தமிழ்ப் பயிற்சி அறவே இல்லாமலில்லை. 1913–1918ல் திருநெல்வேலியில் ஹிந்து காலேஜில் நான் உபாத்தியாயராக இருந்தபோது அங்குத் தமிழாசிரியராக இருந்த ஸ்ரீ சிவராமபிள்ளையவர்கள் எனக்கு வில்லிபாரதம், பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் முதலிய நூல்களை ஒழுங்காகத் தினந்தோறும் பாடஞ்சொல்லி, மிக்க அன்போடு எனக்குத் தமிழிலக்கியத்தின் சிறப்பை ஓரளவு உணர்த்தி வந்தார்கள்; அதற்கு நான் அவர்களுக்குச் செய்த கைம்மாறு எல்லாம் தமிழைச் சிரத்தையுடன் கற்க முயன்றதைத் தவிர வேறொன்றும் இல்லை; வேறொன்றையும் அவர்கள் எதிர்பார்க்கவும் இல்லை.

நான் சென்னையில் வந்து வேலையில் அமர்ந்தது முதல் வையாபுரிப் பிள்ளையும் நானும் ஊரிலிருக்க நேர்ந்த நாள் எல்லாம், நாங்கள் சில மணி நேரமாவது கூடவே இருந்து தமிழ்நூல்களைப் படித்து, அவைகளிலிருந்து எழும் ஆராய்ச்சி விஷயங்களை உற்று நோக்காமல் இருந்ததில்லை. ஆராய்ச்சியின்பொருட்டுத் தவிர, அதன் சுவையின் பொருட்டும் இலக்கியத்தை நாங்கள் படித்து மகிழ்வதும் உண்டு. இதற்கு முக்கியமாகக் கம்பராமாயணமே பெரும்பாலும் உதவிவந்தது. கம்பனுடைய ஆழ்ந்த கருத்துக்களை அவனது பாடல்களைத் தாம் படிக்கும் முறையிலேயே பிள்ளையவர்கள் விளக்கிவிடுவார்கள்; மிகச் சிறந்த பாடல்களை இரண்டு அல்லது மூன்று தடவை மெதுவாக அவர்கள் படிப்பது வழக்கம். வேறு விதமாக உரை கூறுவதாவது, பிரசங்கம் செய்வதாவது அவரது வழக்கம் இல்லை. கம்பன் நூலை நல்லமுறையில் பதிப்பிக்கவேண்டும் என்ற பேரவா அவருக்கு இருந்தபோதிலும், பல காரணங்கள் பற்றி அது நிறைவேறாமல் போயிற்று.

சங்க நூல்களைத் துருவித் துருவி ஆராய்ந்து, அவைகளில் கிடைக்கும் சரித்திர நிகழ்ச்சிகள், சமயக் கொள்கை

கள், அரசாங்க ஸ்தாபனங்கள், சமூக வாழ்க்கையின் பழக்கவழக்கங்கள் முதலியவற்றை இருவரும் கூடவே ஆராய்ந்ததுண்டு. பிள்ளையவர்கள், தமிழில் போல் சரித்திரத்திலும் நல்ல பயிற்சி உள்ளவர்கள். ஆகையால் அவர்களுக்கு இது வெகு எளிதாகவும், இன்பம் தரத்தக்கதாகவும் இருந்தது. மேலும் அவர்கள் பி. எல். பரீக்ஷை தேறிய பின், சில காலம் வக்கீல் தொழிலில் அமர்ந்திருந்ததால், தமக்குக் கிடைக்கும் சான்றுகளை நன்கு நுணுக நோக்கி அவற்றுக்கு ஏற்றவாறே தீர்மானங்களை வகுப்பதும்,கட்டுரைகளை எழுதுவதும், அவர்களுக்கு நற்பழக்கமாக ஆகி விட்டது. நாங்கள் மிகவும் ஒத்துழைத்ததினால், அவர்கள் தமிழிலும் நான் ஆங்கிலத்திலும் வெளியிட்ட கருத்துக்களில் பல ஒத்த பண்பினவாகவே இருக்கும். பல சமயங்களில், எது யாரால் முதலில் குறிக்கப்பட்டது என்று எங்களுக்குத் தெளிவில்லை. நாங்கள் அதைக்குறித்துக் கவலைப்படவில்லை. ஆனால் என்னுடைய நினைவில் அவர்களிடமிருந்து நான் பெற்ற விளக்கங்களே மிகப் பல; அவைகளின் உதவி இல்லாதிருந்தால், தென்னிந்திய சரித்திரத்தில் நான் செய்ய முடிந்த சிறு ஆராய்ச்சியும் கூடக் கைகூடாதிருக்கும் என்றே எண்ணுகிறேன். இலக்கிய நூல்களைத் தவிர, கல் வெட்டுகளையும், செப்பேடுகளையும் சீர்தூக்கி ஆராய்வதிலும் அவர்கள் பேருதவி புரிந்து வந்தார்கள் இப்போது பல சமயங்களில், அவர்களைக் கேட்டு அறிந்துகொள்ள வாய்ப்பு இல்லாமல் போய் விட்டதே என்ற வருத்தம் மேலிடுகிறது.

பிள்ளையவர்களின் தமிழ்க் கல்வியானது பரப்பும் ஆழமும் கொண்டது, கசடற்றது, நுட்பமானது. இச் சிறப்புக்களை நான் அவர்களிடம் கண்டிருக்கிறேன். அதுவும் அன்றி, அவற்றைக்குறித்து எங்கள் காலத்துத் தமிழ்த் தெய்வமாக விளங்கிய ஸ்ரீ மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் அவர்களும் பலமுறை என்னிடம்

எடுத்துக்கூறியதுண்டு. பல பாட பேதங்களிலிருந்து உண்மைப் பாடத்தைப் பொறுக்குவதிலும், கடினமான பாசுரங்களுக்கு உண்மைப் பொருளை விளக்குவதிலும் பிள்ளையவர்களுக்கு ஈடாக யாரையும் எளிதில் கருத முடியாது. அவர்களுடைய இந்தத் திறமை, அவர்களுடைய சிறந்த பதிப்புகளிலிருந்து, யாருக்கும் எளிதில் விளங்கும்.

தமக்குக் கிடைத்த சான்றுகளுக்கு மாறுகவோ, மேற்பட்டனவாகவோ உள்ள கருத்துக்களை அவர்கள் ஆதரிப்பதில்லை. மேல்நாட்டார் கையாண்டு வரும் பாஷா பரிசோதனை முறைகளின்படி அவர்கள் தமிழ் மொழியின் வளர்ச்சியை ஆராய்ந்து, அதற்கேற்ப நூல்களின் கால வரையை வகுத்தார்கள். தக்க காரணம் எதுவும் இன்றிப் பலரும் அபிமானித்து வரும் கருத்துக்களுக்கு முரண்பட்டதாக அவருடைய கூற்று இருந்தது. இதனுல் பிள்ளையவர்களைச் சிலர் குறை கூறவும் துணிந்தனர். அவர்கள் அதைப் பொருட்படுத்தாமல், தாம் கண்ட உண்மையையே எப்பொழுதும் எடுத்துக்கூறி வந்தார்கள். வடமொழித் தொடர்பு ஒன்றுமே இன்றித் தனித்து வளர்ந்தது தமிழ்ப்பாஷை என்று சிலர் துணிந்து கூறுகிருர்கள். இது உண்மையாயின், எல்லா இந்திய பாஷைகளினின்றும் தமிழ் வேறுபட்டதாக முடியும். ஆனுல் இது உண்மையன்று. வடமொழித் தொடர்பு இல்லாத தமிழ் இலக்கியமோ, இலக்கணமோ, ஒன்றும், இதுகாறும் காணக் கிடைக்கவில்லை. இந்த விஷயத்தில் பிள்ளையவர்கள் சில சமயங்களில், வடமொழிக்குத் தமிழை வளர்ப்பதில் உண்மையாக உள்ள பங்கை விட அதிகமாகக்கூடக் கூறி விட்டார்களோ என்று நான் எண்ணியதுண்டு. வடமொழித் தொடர்பே கிடையாது என்று முற்றிலும் மறுப்பவர்களுடைய கொள்கையை மறுப்பதற்காக அவர்கள் சற்றே அழுத்தமாகவும், சற்றே மிகையாகவும் கட்சி கூறியதாக இதைக் கொள்ளவேண்டும்.

பிள்ளையவர்களுடைய தமிழ் நடை மிகவும் உயர்ந்தது. அவர்களுடைய கட்டுரைகள் எல்லாம், கருத்துச் செறிவும் தருக்க முறையும் பொருந்தி, படிப்போர் மனதில் எளிதில் பதியக் கூடியவையான எளிய, தக்க சொற்களால் அமையப்பெற்றன. பிராசம், எதுகை, மோனை, முதலிய சொல்லணிகளைக் கையாளாமல், கருத்துக்களின் மேன்மையாலும் உணர்ச்சியின் மிகுதியாலும் வாசகர்களின் மனத்தைக் கவரும் சொல்வன்மை ஸ்ரீ பிள்ளையவர்களுடையது.

தம்முடைய வாழ்நாள் முழுவதும் தமிழ் மொழிக்குத் தொண்டு புரிந்ததையும், தமது கடைசி நாட்களில் ஆசையோடு தொடங்கிய நாலாயிரப் பதிப்பை நடத்தி வந்ததையும், முதலாயிரத்தை வெளியிட்டதையும், அறிந்த நேயர்கள், அவர்கள் இன்னும் சில காலம் நம்மோடு இருந்து அந்தப் பதிப்பையாவது முடித்திருக்கலாகாதா என்று வருந்தாமலிருக்க மாட்டார்கள்.

# திரு. வையாபுரிப் பிள்ளை அவர்களின் மாண்பு

வே. வேங்கடராஜுலு ரெட்டியார்

பேராசிரியர், திரு. ச. வையாபுரிப் பிள்ளையவர்களை யான் 1917-ஆம் யாண்டிலிருந்து அறிவேன். அவர்கள் தமிழ் நூல்களைப் படித்தலிலும் ஆராய்தலிலும் தமிழை வளர்த்தலிலும் பேரூக்கம் உள்ளவர்கள். திருநெல்வேலி வீரராகவபுரத்தில் ஒரு புஸ்தகக் கடையில் அமர்ந்து தமிழ் நூல்களைப் படித்தலை யான் பல தடவை கண்டிருக்கின்றேன். வண்ணாரப்பேட்டையில் வாழ்ந்த வக்கீல், திரு. வேதநாயகம்பிள்ளை (எம்.ஏ., பி.எல்.) அவர்களோடு சேர்ந்து தொல்காப்பியத்தை ஆராய்வதும் உண்டு.

1918, 1919-ஆம் ஆண்டுகளில் திரு. பிள்ளையவர்கள் தம் நண்பர் திரு. வேதநாயகம் பிள்ளையவர்களின் உதவி கொண்டு தமிழை வளர்த்தற்காகச் சங்கம் ஒன்றை அமைத்தார்கள். ஆராய்ச்சிகள், புதுநூல் அரங்கேற்றம் முதலியவை அதில் நடைபெற்றன. அக்காலத்தில்தான் எனக்கு அவர்களோடு பழகும் பேறு கிடைத்தது. அவர்கள் சென்னையில் இருந்த காலத்தில் 'மயிலைத் தமிழ்ச் சங்கம்' என்று ஒரு சங்கம் அமைத்து, அதில் ஆராய்ச்சியுரை நிகழ்த்தல், பாடங் கற்பித்தல் முதலியவற்றை நடத்தி வந்தார்கள். இவற்றால், தமிழ் வளர்த்தலில் அவர்கட்கிருந்த பேரார்வம் நன்கு அறியப்படும்.

நம் பிள்ளையவர்கள் அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைச் **'செந்தமிழ்ப்'** பத்திரிகையில் எழுதி வந்தார்கள். 'அரும்

பொருள் விளக்க நிகண்டு' முதலியவற்றை அதில் பதிப்பித்தார்கள்.

பின்னர் 1927-ஆம் வருடத்தில் யான் பல்கலைக் கழகத்தில் தமிழாராய்ச்சிப் பகுதியில் நியமிக்கப்பெற்றுச் சென்னைக்கு வந்தபோது, பிள்ளையவர்கள் தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியராயிருந்து ஊக்கத்தோடு அதை நடத்தி வந்தார்கள். அவர்களை இடையிடையே நான் சந்தித்தல் உண்டு.

பிள்ளையவர்கள் லெக்ஸிகன் பதிப்பாசிரியராயிருந்த காலத்தில் சிறு நூல்கள் பலவற்றைப் பதிப்பித்து வெளியிட்டார்கள். கம்பராமாயணத்தை நல்ல முறையில் பதிப்பிக்கக் கருதி, திரு. கா. நமச்சிவாய முதலியாரவர்கள், சோமசுந்தர தேசிகரவர்கள் இவர்களோடு கூடி ஏட்டுச் சுவடிகளைப் பார்த்து ஆராய்ந்தார்கள். அக்காலத்தில் யான் அவர்களோடு அடிக்கடி அளவளாவுதல் உண்டு.

பின்னர் 1936-ல் பல்கலைக் கழகத்தில் தமிழாராய்ச்சித்துறைத் தலைவராக நியமிக்கப் பெற்றார்கள். அவர்கள் அப் பதவியில் இருந்த காலம் முழுவதிலும் என்னிடம் மிக்க அன்பும் அபிமானமும் உடையவர்களாயிருந்தார்கள். சில சமயங்களில் யான் சொல்லுங் கருத்துக்களை மகிழ்வோடு ஏற்றுக்கொண்டார்கள்; சங்க இலக்கியம் முதலியவற்றைப் பதிப்பித்தபோது சில விடங்களில் என் கருத்துக்களை மேற்கொண்டார்கள்.

பிள்ளையவர்கள் தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணருரை முழுவதும் ஆராய்ந்து வெளியிட்டார்கள்; நச்சினார்க்கினியருரையையும் பதிப்பித்தார்கள். பல்கலைக் கழகத்தின் மூலம் வெளியிட்ட நூல்கள் எல்லாம் அரிய ஆராய்ச்சி உரையை உடையன.

ஸ்ரீ பிள்ளையவர்கள் செப்பம் என்னும் அருங்குணம் வாய்ந்தவர்கள். அவர்கள் எஸ். எஸ். எல். ஸி. பாட

புஸ்தகக் கமிட்டியில் இருந்தபோது, குமாரசுவாமியம் என்னும் நூலிலிருந்து சில செய்யுட்களைப் பாட புஸ்த கத்தில் சேர்க்கவேண்டும் என்று ஒருவர் சொல்ல, 'அந்நூலின் ஆசிரியர் எனக்கும் குருவே. ஆயினும் அச் செய்யுட்கள் சுவை உடையன அல்ல. ஆதலின் அவற்றைச் சேர்த்தல் கூடாது' என்று மறுத்து, சேர்க்காமல் விட் டார்கள்.

மற்றொரு முறை, எஸ். எஸ். எல். ஸி. துணைப்பாட புஸ்தகமாக ஒரு புஸ்தகத்தை வைக்குமாறு தமக்கு வேண்டிய நண்பரொருவர் வற்புறுத்தியபோது, அப் புஸ் தகம் பிழை உடையதாயிருத்தலின் வைக்க இயலாது என்று பிள்ளையவர்கள் உறுதியாகச் சொல்லிவிட்டார்கள். இவ்வாறே எப்போதும் நேர்மை உடையவர்களாயிருந்ததை யான் அறிவேன்.

திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள் தாங்கள் ஆராய்ந் தறிந்த உண்மைகளை மறைக்காமல் வெளியிடும் உரன் உள்ளவர்கள். அவர்கள் கருத்துக்களுட் பெரும்பாலன மேற்கொள்ளுதற்கு உரியவையே நடு நிலை நின்று உண்மை அறியும் அறிஞர்கள் பிள்ளையவர்களைப் பாராட்டிப் போற்றுவர் என்பதில் ஐயம் இல்லை.

# பேராசிரியரின் நயத்தக்க நாகரிகம்

திரு. சா. கணேசன்

காரைக்குடியில் ஒரு கூட்டத்தில் தலைமை வகித்தார் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. அன்று கூட்டத்திற்குப் பல நல்லறிஞர்கள் வந்திருந்தனர். நல்ல கூட்டம். இலக்கியச்சுவை தேரும் ரசிகர்கள், ஆண்களும் பெண்களுமாக நிரம்பியிருந்தனர். கூட்டமோ தமிழறிஞர் ஒருவரைப் பாராட்டுவதற்காகக் கூட்டப்பெற்றது. பேரறிஞர் பலர் பாராட்டிப்பேசினர். அப்படிப் பாராட்டிப் பேசிய அறிஞர்களுள் ஒருவர் தமிழே உயிர் என வாழ்பவர். அவர் பழம் பாடல்களைத் திருத்துவது பற்றித் தமது கருத்தை மிகவும் அழுத்தமாகக் கூறினர். "பொருள் தடுமாறும் இடங்களில் ஏட்டில் கண்ட பாடமே சரி என்று கொண்டு அவதிப்பட வேண்டாம்; தக்கதெனக் கருதும் சொற்களை இட்டுத் தெளிவேற்படச் செய்வதே முறை" என்று கூறித் தமது கருத்திற்கு எடுத்துக் காட்டாக நந்திக்கலம்பகத்தில் காணும்,

> மாட்டாதே இத்தனை நாள் மால்நந்தி வான்வரைத் தோள்
> பாட்டாதே மல்லையர் கோன் பரியானைப் பருச்சுவடு
> காட்டாதே கைதைப் பொழில் உலவும் காவிரிநீர்
> ஆட்டாதே வைத்து என்னை ஆயிரமும் செய்தீரே!

என்ற பாடலை எடுத்து விளக்கினர். "இரண்டாவது அடியில் முதற்சீர் 'பாட்டாதே' என்றிருக்கிறது. பொருள் சிறக்கவில்லை; அதைச் செவியிற் சுவையுணரும் செந்தமிழ்ச் செல்வர் ஒருவர் 'பூட்டாதே' என்று ஒரு சிறிய திருத்தம்

செய்தார்; அத்திருத்தத்தால் அப்பாடலுக்கே பொலிவு ஏற்பட்டு விட்டது; எவனே ஒரு முட்டாள் "ஏடு எழுதியவன் 'பாட்டாதே' என்று எழுதிவிட்டால் அதையே சரி எனக்கொண்டு பொருள் காண வளைத்துச் சுற்றி வர வேண்டுமா, என்ன ?" என்று கூறிப் பாடலைத் திருத்துவது சரியே என்ற தம் கருத்தைக் கொஞ்சம் காரசாரமாகவே புலப்படுத்தினர்.

முடிவில், தலைமை தாங்கிய பேராசிரியர் தமது கருத்துரையை வழங்கினர். 'பாட்டாதே' என்ற சொல் நூல்களில் மிகவும் அருமையாகத்தான் பயிலப்பட்டு வந்திருக்கிறது என்றாலும் மரபுப் பிழையோ அன்றி பொருள் தடுமாற்றமோ ஏற்படவில்லை. 'பாடாதே' என்ற சொல் எதுகை நோக்கி வல்லெழுத்தாம் 'டகரம்' மிகுத்துப் 'பாட்டாதே' என்று பயிலப் பெற்றிருக்கிறது; அவ்வளவுதான். எனவே அதைத் திருத்துவதைச் சரி என்று தாம் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதாகத் தமது கருத்தை மிக்க அமைதியாக, ஆனல் அழுத்தமாக வெளிப்படுத்தினர்.

பின்னர் யாவரும் தங்கியிருந்த வீட்டிற்கு வந்து சேர்ந்ததும், "அப்பர் பெருமான் அருளிய ஆரும் திருமுறையில் 'ஆட்டுவித்தால்' என்ற தொடக்கத்தைக் கொண்ட திருத்தாண்டகத்தில்-மூன்றாவது அடியில் — 'பாட்டுவித்தால் ஆர் ஒருவர் பாடாதாரே ?' என வருவதை எடுத்துக் காட்டி, 'பாட்டுவித்தால்' என்று பிரயோகம் செய்யும் அப்பரடிகளும் ஒரு முட்டாள்தான ? அப்படியானல், நாம் எல்லோரும் முட்டாள் கூட்டத்தையேதான் சேரவேண்டும்" என்று அமைதியாக, அழுத்தம்-திருத்தமாக, எவர் மனமும் புண்படாமல் தெளிவுபடுத்தினர்.

சூழ்ந்திருந்த அன்பர் எல்லாரும் பேராசிரியரின் அறிவாற்றலையும் விட, அவர்களின் நிறைகுடம் அனைய, அசை

விலாத் தெளிவையும் நயத்தக்க நாகரிகத்தையுமே எண்ணி எண்ணி இன்புற்றார்கள்.

## பேராசிரியரின் நாட்டன்பு

*1942-ஏப்ரல் மாதம். சென்னையில் உட்லாண்டு ஹோட்டலில் ஒரு பாராட்டு விருந்து. தனி நபர் சத்தியாக்கிரகம் செய்து சிறை சென்று வீடு பெற்று வரும் திரு சா. கணேசனுக்கு அது. அரசியல், மொழி, கலை ஆகிய துறைகளில் அவருடன் தொடர்புடைய யாவருக்கும் அழைப்புகள் போயிருக்கின்றன. அங்ஙனம் அழைக்கப் பெற்றவர்களுள் பேராசிரியர் வையாபுரியாரும் ஒருவர். இவரோ, சென்னை பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக —அரசாங்க ஊழியராக— இருப்பவர். எனவே இவர்கட்கு விருந்தளிப்போர் டெலிபோன் வாயிலாக 'எச்சரிக்கை' விடுத்தார்கள்.*

*"தாங்களோ அரசாங்க ஊழியர்; பாராட்டோ ஆட்சியை எதிர்த்துப் போராடும் தேசபக்தர் ஒருவருக்கு; இதில் நீங்கள் கலந்து கொள்வது உங்கள் பதவிக்கு ஏற்புடைத்தாக மாட்டாது; எனவே எங்கள் கடமை உங்களை எச்சரிப்பது; நீங்கள் வராமலிருந்தால் நாங்கள் குறைப்பட மாட்டோம்."*

*விருந்தளிப்போர் விடுத்த எச்சரிக்கைக்குப் பேராசிரியர் விடை இது தான்:*

*"தன்மையை நன்குணர்கிறேன். தங்கள் கடமையை நிறைவேற்றியதற்கு மிக்க நன்றி; தேச பக்திக்குத் தமிழ்ப்பணி முரணானது அன்று என்பது மட்டுமில்லை, ஆனால், நாட்டன்பே மொழியன்பை வளர்ப்பதாகும்; எனவே நான் வரத்தான் போகிறேன்; அதுவும் விருந்*

துண்ண மட்டுமில்லை—பாராட்டில் கலந்து கொள்ள வுமே.''

அப்படியே சென்றார்: விருந்தருந்தினார்; பாராட்டிப் பேசினார்; புகைப் படத்தில் முன்வரிசையில் அமர்ந்து மிருந்தார். படமும் செய்தியும் எல்லாப் பத்திரிகைகளி லும் வெளியாயின. பேராசிரியரின் நாட்டன்பும், உள் ளத்துறுதியும் அன்று தெள்ளிதிற் புலனாக அன்பர்கள் யாவரும் ஒரே வியப்புக் கடலிலும், இன்பவாரிதியிலும் மிதந்தார்கள் என்பதைச் சொல்லவா வேண்டும்?

# ஐம்பது ஆண்டுகளாக

## பெ. நா. அப்புஸ்வாமி

*[தனது தந்தை வையாபுரியைப் பற்றி இந்த நூலிலே நானும் சில குறிப்புக்களைத் தரவேண்டும் என்று சரோஜினி சொன்ன போது, நான் முதலில் சிறிது தயங்கினேன். வையாபுரியைப் பற்றி நான் எழுதுவதாயிருந்தால், ஒதுங்கி நின்று, ஒரு நடு நிலையில் இருந்து கொண்டு, ஓர் அயலானைப் போல் எழுத இயலாது என்பது எனக்குத் தெரியும். அவனைப் பற்றி என்னுடைய நினைவுகளையும அனுபவங் களையும் எழுதினால், அவை ஓரளவு என்னுடைய வாழ்க் கையின் பகுதியாகவே முடிந்துவிடலாம் என்னும் அச்சமே என்னை இப்படித் தயங்கச் செய்தது.]*

வையாபுரியை நான் முதன்முதலில் எப்பொழுது சந்தித்தேன் என்பது, எவ்வளவு நினைத்துப் பார்த்தும், இப்போது என் நினைவுக்கு வரவில்லை. ஐம்பது ஆண்டு களுக்கு முற்பட்ட காலத்தில், நாங்கள் திருநெல்வேலியி லுள்ள இந்து கலாசாலையின் உயர்தரப் பள்ளியில் ஒரே வகுப்பின் வெவ்வேறு பிரிவுகளில் படித்துக்கொண்டிருந் தோம். மெட்ரிகுலேஷன் வகுப்புக்கு வந்து சேர்ந்த பிறகும், அநேகமாக அப்படித்தான். ஆனால், விங்க்ளெர் என்னும் துரை நடத்திய ஆங்கிலப் பாட வகுப்பில் மட்டும் எல்லாப் பிரிவுகளிலும் உள்ள மாணவர்கள் அனைவரும் ஒருங்கு கூடவேண்டும் என்று ஏற்பாடு அங்கே செய்யப் பட்டிருந்தது அப்பொழுதுதான் நான் அவனை முதலில் சற்றே நெருங்கிச் சந்தித்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

நான் வடமொழியை இரண்டாவது மொழியாகத் தேர்ந்தெடுத்திருந்தேன்: வையாபுரி தமிழ் மொழியை.

அப்போது அங்குத் தமிழாசிரியராயிருந்த சிவராம பிள்ளை யின் அருமை மாணவன் என்று அவனைப் பலரும் குறிப் பிட்டது நினைவிருக்கிறது. அந்தக் காலத்தில் அந்தக் கலாசாலையில் அப்போது உள்ள விளையாட்டுக்கள் டென் னிஸ், கால்-பந்து என்பவை இரண்டு மட்டும்தான் உண்டு. அவ் இரண்டிலும் எனக்குப் பற்று அதிகம். வையாபுரிக்கு டென்னிஸில் பற்றே இல்லை; கால்—பந்து மைதானத்தில் சிலவேளைகளில் இறங்கிப் பந்தை உதைக்க முயன்றதாக நினைவு; அதுவும் கூட நிச்சயம் இல்லை.

மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் நாங்கள் இருவரும் ஒரே ஆண்டில் தேறினோம். ஆனால் அப்போது என்னுடைய தகப்பனார் சென்னைக்கு மாற்றப்படவே, நான் சென்னை யில் பிரஸிடென்ஸி கலாசாலையில் எப். ஏ.யில் சேர்ந்து, ஆறு மாதம் படித்தேன். பிறகு, அவரை மீண்டும் திருநெல்வேலிக்கு மாற்றிவிட்டார்கள். மறுபடியும் நான் இந்து கலாசாலை மாணவனாக ஆகிவிட்டேன். அந்த ஆண்டி லும் வையாபுரியும் நானும் அதிகம் நெருங்கிப் பழகத் தொடங்கவில்லை. படிப்பில் உயர்ந்தவர்களைக் கண்டால் எனக்கு அப்போதும் பிரியம் அதிகம். வே. சாரநாதன், க. அ. நீலகண்டன், கே. ஜி. சங்கரன், முதலியோரும் எங்களோடு அங்கு ஒரே வகுப்பில் படித்தவர்கள். இவர் கள் மூவரும், என்னைப்போல், வடமொழிப் பகுதியைச் சேர்ந்தவர்கள். ஆதலால் இவர்களோடு நெருங்கிப் பழக எனக்கு அதிக வாய்ப்புக்கள் இருந்தன. வையாபுரியோடு நெருங்கிப் பழக அதிகச் சந்தர்ப்பம் இல்லை; சற்று எட்ட இருந்தே பழக முடிந்தது. இது 1907ம் வருஷத்துச் செய்தி.

அவ்வருஷக் கடைசியில், திருநெல்வேலியில், மத சம் பந்தமான விஷயம் ஒன்றைக் குறிப்பிட்டு, மாணவர் களுக்கு இடையே ஒரு தமிழ்க் கட்டுரைப் போட்டிப்

பரீக்ஷை நடந்தது. தமிழ் மாணவர்கள் பலர் போட்டி யிட்டார்கள். அதில் என்னையும் கலந்துகொள்ளும்படி ஆசிரியர்கள் வற்புறுத்தவே, நானும் பரீக்ஷயில் கலந்து கொண்டேன். வையாபுரி, பி. ஸ்ரீ., கா. சுப்பிரமணிய பிள்ளை ஆகியோர் பரிசு பெற்றனர். எனக்குப் பரிசு கிடைக்கவில்லை. ஆனால் அதைப் பற்றி எனக்கு வருத்தமே இல்லை. ஏனென்றால், அதுதான் நான் முதன் முதலாக எழுதிய தமிழ்க் கட்டுரை. பரீக்ஷாதிகாரியாக இருந்த சிவராம பிள்ளை என்னுடைய கட்டுரையை நான்காவதாக மதிப்பதாகச் சொல்லி, என்னிடம் அன்போடு பேசியதை என்னால் ஒரு நாளும் மறக்கமுடியாது. என்னைப் பிற் காலத்தில் தமிழ்த் துறையில் இறங்கத் தைரியம் அளித்த காரணங்களில் அவர் கூறிய ஊக்கமொழியும் ஒன்று.

அடுத்த வருஷம் நாங்கள் முன்னிலும் சற்றே நெருங் கிப் பழக நேர்ந்தது. என்னுடைய நண்பர்களில் ஒருவரான வீ. சேஷுதிபதி என்பவர் வையாபுரியின் நெருங்கிய நண்பர்களில் ஒருவராக இருந்ததே இதற்குக் காரணம். அவ் இருவருக்கும் பல ஒற்றுமைகள் இருந்தன. இருவரும் மற்றவர்களோடு அதிகம் பேசாதிருந்தது அவற்றுள் ஒன்று. அவ் இருவரும் ஒருவருக்கொருவர் ஒரு நாளில் மொத்தம் எத்தனை வார்த்தைகள் பேசிக்கொள்வார்கள் என்று எங்களில் சிலர் கணக்கிட முயன்றது உண்டு.

இதன் பிறகு, நான் பி. ஏ. படிப்புக்குச் சென்னை யிலுள்ள பிரஸிடென்ஸி கல்லூரிக்குச் சென்றுவிட்டேன். எப். ஏ. பரீக்ஷை தேறிய பிறகு, வையாபுரி கிறிஸ்தவக் கல்லூரியில் சேர்ந்தபடியால், நாங்கள் அனேகமாகச் சென்னையில் அப்போது சந்தித்ததே இல்லை என்றே சொல்லவேண்டும். சில வருஷங்கள் இவ்வாறு சென்றன. இடை இடையே எப்பொழுதாவது, விடுமுறை நாட்களில் திருநெல்வேலியில் ஒருவரை யொருவர் பிற நண்பர்

களுடைய வீட்டில் சந்தித்ததைத் தவிர, மற்றப்படி நெருங்கிச் சந்தித்துப் பழகவில்லை.

சிறிது காலத்துக்குப் பிறகு, வையாபுரி திருநெல்வேலியில் வக்கீல் தொழிலில் அமர்ந்தபோது, விடுமுறை நாட்களில், அவனையும், சேதுப்பிள்ளை, சக்கரபாணி நம்பியார், முதலிய நண்பர்களையும் கோர்ட்டைச் சேர்ந்த வக்கீல் அறையின் தாழ்வாரத்தில் நான் அடிக்கடி சந்திப்பது உண்டு. டி. கே. சி. அப்போது வண்ணார் பேட்டையில் இருந்தார்.

அப்போது நான் வழுக்கும் காலைத் தமிழ்த்துறையில் வைத்தாய் விட்டது. என்னுடைய சிறிய தகப்பனார், அ. மாதவையர் விரும்பியதாலும், அவர் துணை செய்ததாலும், தமிழ் நூல்கள் சிலவற்றைச் சற்றே படித்து வந்தேன். விஞ்ஞான விஷயங்களைப் பற்றித் 'தமிழர் நேசன்' என்னும் பத்திரிகையில் எழுதி வந்தேன். இதைத் தொடங்கியது 1917-ம் வருஷத்தில். அப்போது தமிழில் எனக்கு உண்டான புது ஆர்வம் என்னை ஆட்டிவைத்தது. அந்தப் பத்திரிகையைப் பலரும் ஆதரிக்கவேண்டும் என்றும், ஆங்கிலம் கற்றுணர்ந்தவர்கள் பலரும் அறிவியல் விஷயங்களைப் பற்றி எழுதுவதைத் தங்கள் கடமையாகக் கொள்ளவேண்டும் என்றும், தாங்கள் அயல் மொழியின் மூலமாய்ப் பெற்றுள்ள அறிவைப் பயன் படுத்தி அவ் அறிவைப் பிறருக்குப் புகட்டவேண்டும் என்றும், அனைவரும் ஒன்று சேர்ந்து தமிழ் மொழியை வளம் பெறச் செய்யவேண்டும் என்றும், நான் தீவிரமாக எண்ணினேன். இந்தப் பேரவா என் மனத்தில் குடிகொண்டது. ஆகவே, வேலை பொழுது ஒன்றையும் கவனியாமல், நான் நண்பர்கள் அனைவரிடமும் என் கருத்தை ஓயாமல் வற்புறுத்திச் சொல்லிவந்த காரணத்தால், என் நண்பர்கள் பலர் என்னைக் கண்டு விலகி ஓடியதுண்டு. அப்படி ஓடாதவர்களுள் வையாபுரி ஒருவன்.

அந்த நாட்களில் அவன் அந்தப் பத்திரிகைக்கு யாதொரு விஷயதானமும் செய்யவில்லை. ஆயினும் என்னைக் காட்டிலும் அவனுக்குத் தமிழில் ஈடுபாடு அதிகம் இருந்தது. நான் வீட்டில் மட்டும்தான் தமிழில் ஈடுபட்டு வந்தேன்; அவனோ அனேகமாக எப்பொழுதும். திருநெல்வேலியிலே வையாபுரி வக்கீல் தொழிலை நடத்தி வந்தபோது, கோர்ட்டில் வேலை இல்லாத ஒழிவு நேரத்தில் பயனற்ற பேச்சுப் பேசி வீண்பொழுது போக்குவதில்லை. அவனும், அவனைப்போல் தமிழ் இலக்கியத்தில் ஈடுபட்ட ஒரு சில வக்கீல் நண்பர்களும், கோர்ட்டைச் சார்ந்த வக்கீல் சங்கத்து அறையின் வெளிப் புறத்துத் தாழ்வாரத்தின் ஓர் ஓரத்திலே இருந்து கம்பன் முதலிய கவிகளின் இலக்கியங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார்கள். நானும் சில வேளைகளில் அவர்கள் பேசுவதைக் கேட்டு மகிழ்ந்தது உண்டு.

இப்படி நடந்து வருங்காலத்தில், எங்களுடைய பழைய நண்பர்களாகிய சாரநாதனும் நீலகண்டனும் திருநெல்வேலி இந்து கலாசாலையில் பேராசிரியர்களாயிருந்ததும், அவர்களும், பி. ஸ்ரீயும் வையாபுரியோடு பழகி வந்ததும் எங்களுடைய பழைய நட்பு வளருவதற்கு ஒரு காரணமாக இருந்தது.

அந்தக் காலத்தில் 'செந்தமிழ்' முதலிய பத்திரிகைகளுக்கு ஆராய்ச்சி விஷயங்களைக் குறித்து, வையாபுரி எழுதியதுண்டு. அவற்றுள் மிகவும் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கது புறநானூற்றில் பதின்மூன்றும் பாட்டை ஒட்டிய விவாதத்தில் கலந்து கொண்டு, மதுரையிலிருந்து வெளிவந்த 'செந்தமிழில்' அவன் வெளியிட்ட கட்டுரை. ஆதிக்காலத்தில் எழுதிய அந்தக் கட்டுரையிலும் கூட, விவாத விஷயங்களை முறைப்படுத்தித் தெளிவாக எடுத்துக் கூறி, அவற்றுக்குத் துணையாக உள்ள விஷயங்களையும்

எதிரிடையாக உள்ள விஷயங்களையும், பக்ஷபாதமின்றி, ஆராய்ச்சி மன நிலையோடு, சீர்தூக்கிப் பார்த்து, தக்க ஆதாரங்களைக் கொண்டு, ஒரு சீரிய முடிவை எடுத்துக் காட்டும் அவனது சிறந்த ஆராய்ச்சி முறையை நன்கு காணலாம். பண்டைத் தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும், வடமொழியிலும், அவனுக்குள்ள கல்வியும் பயிற்சியும் அதில் நன்றாகத் துலங்குகின்றன. அவனுக்குக் கற்பனை மனநிலையும் விசேஷமாக இருந்தது என்பதற்கு அவன் அக் காலத்தில் எழுதிய 'வள்ளுவர் திருநாள்' என்னும் கட்டுரை சான்றாகும்.

வக்கீல் தொழிலில் ஒருவரோடு ஒருவர் போராடி, தம் தம் கட்சியைப் பலமாக எடுத்துக் கூறி, போட்டியிட்டு விவாதிப்பதே வெற்றிக்கு மார்க்கம் என்று சொல்லுவதுண்டு. முதல் கோர்ட்டுக்கள் சம்பந்தப்பட்ட அளவிலாவது இது பெரும்பாலும் உண்மை. இயற்கையாக, அமைதியும், கூச்சமும், ஒதுங்கி விலகும் சுபாவமும், உடைய வையாபுரி போட்டி மிகுந்த அந்தத் தொழிலில் உன்னத நிலையை அடையாதது ஓர் வியப்பு அன்று. ஆயினும் படாடோபம் இன்றி நடத்திய குடும்ப வாழ்க்கைக்கு வேண்டிய வருவாய் அவனுக்குத் தன் தொழிலிலிருந்து கிடைத்து வந்தது.

இப்படி இருக்கும்போது, சென்னையில் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் நடந்துவந்த 'தமிழ் அகராதி' வேலை பல இடையூறுகளால் தடைப்பட்டு, ஆமை வேகத்திலும் குறைவான வேகத்தோடு ஊர்ந்து பின்னேறி வந்தது. பலரும் அதைக் குறை கூறி வந்தார்கள். சென்னையில் வக்கீல் தொழிலில் எனக்குத் தலைவராகவும், சிறந்த வக்கீல்களுள் ஒருவருமான, ஸ்ரீ கே. வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அப்போது பல்கலைக் கழகத்தின் ஸின்டிகேட் உறுப்பினராக இருந்தார். அவரது நிர்வாகத் திறமையையும், நேர்மையையும், விரைவாகவும் ஒழுங்காகவும்

அரிய காரியங்களை நடத்தும் சக்தியையும், நன்கு உணர்ந்த பல்கலைக் கழக நிர்வாக அங்கத்தினர்கள் 'தமிழ் அகராதி' வேலையை மேற் பார்த்து நடத்திவைக்கும் பொறுப்பை அவரிடம் ஒப்புவித்தார்கள். அவருடைய கை பட்ட உடனேயே அகராதியின் செயல்குழுவில் சில மாறுதல்கள் உண்டாயின. அதுவரை அகராதிக்கு ஆசிரியராக இருந்து வந்தவர் விலகிக்கொண்டார். தமிழிலும், ஆங்கிலத்திலும், வடமொழியிலும், பயிற்சியுடைய அறிவாளி ஒருவர் அந்தப் பதவிக்குத் தேவையாயிருந்தது. வையாபுரியின் திறமைகளை நான் நன்கு அறிந்திருந்தபடியால், இந்த வேலைக்கு ஏற்றவன் அவனே என்று எனக்குப் பட்டது. இதைப் பற்றிக் கிருஷ்ணஸ்வாமி அய்யரிடம் தெரிவித்து விட்டு, என்னால் இயன்ற மட்டிலும் வையாபுரியோடு மன்றாடி, தன்னுடைய முழுப் பாசத்தோடும் நேசித்து வந்த தன்னுடைய ஊரையும், அரைகுறை மனத்தோடு தான் அதுவரை பயின்று வந்த வக்கீல் தொழிலையும் கைவிட்டு, தன் முழு மனத்தையும் கவர்ந்த தமிழ்த் துறையிலேயே முற்றும் ஈடுபட்டு இறங்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். பல விஷயங்களையும் சிந்தித்துப் பார்த்து, அவன் முதலில் தயங்கிய போதிலும், கடைசியில் என் வற்புறுத்தலுக்கு இணங்கி, அந்தப் பதவிக்கு மனுச் செய்துகொண்டான். அவனுடைய கட்டுரைகளின் மூலமாக அவனுடைய ஆராய்ச்சித் திறமையை அறிந்த நிர்வாகிகள் அந்தப் பதவிக்கு அவனைத் தேர்ந்தெடுத்தார்கள்.

இதனால் அவன் சென்னைக்கு வந்து, 'தமிழ் அகராதி' வேலையை ஒப்புக்கொண்டான். எவ்வளவு கருத்தோடும், பொறுப்போடும், விரைவாகவும், திருத்தமாகவும், அவன் அந்த வேலையை நடத்திவந்தான் என்பது தமிழ் உலகம் நன்கறிந்த விஷயம். ஆனால் அந்தத் தொழிலைத் தக்கவாறு நடத்துவதற்கு அவன் தன்னை எப்படிப் பக்குவப் படுத்திக் கொண்டான் என்பது பலருக்குத் தெரிந்திருக்காது.

அகராதி வேலை சொற்களை ஒட்டியது. தமிழ்ச் சொற்களை ஒட்டிய நூல்கள் பழங்காலத்தில் பல இயற்றப் பட்டுள்ளன. அவைகளுக்கு நிகண்டுகள் என்று பெயர். அப்படிப்பட்ட நிகண்டுகளை எல்லாம் முறையாகப் படித்து, அவற்றின் பல பிரதிகளை ஒப்பு நோக்கி, அவற்றில் அடங்கிய சொற்களின் திருத்தமான வடிவங்களையும் பொருள்களையும் அறிந்துகொள்வது தனது முதல் கடமை என்று உணர்ந்து, அவ்வாறு செய்து, அந் நூல்களில் சிலவற்றைத் தமிழ் அகராதியின் ஆதார நூல் தொகுதி யாக அவன் வெளியிட்டது ஒரு புறம். மிக நெடுங்கால மாகத் தமிழோடு மிகவும் நெருங்கிய தொடர்புடையதாக இருந்து வந்திருக்கும் வடமொழியில் தனக்கு இருந்த கல்வியை, இந்தக் காரியத்தின் நிமித்தம், இன்னும் வளம் பெறச் செய்வது அவசியம் என்று உணர்ந்து, அதைக் கருத்தோடு கற்று வந்தது மற்றொரு புறம். உலகத்திலே உள்ள மக்கள் அனைவரும் பெரும்பான்மையும் அடிப் படையில் ஒத்த உணர்ச்சிகளை உடையவர்கள். மனதில் எழும் அவ் உணர்ச்சிகளை வெளியிடும் கருவிகளே, வாகனங்களே, சொற்கள் எனப்படுபவை. பல மொழி களில் உள்ள சொற்களையும் அவற்றின் இலக்கணங்களை யும் கற்பது தமிழ் மொழியின் இலக்கணத்தையும் தமிழ்ச் சொற்களின் வடிவம், பொருள் முதலியவற்றையும் நன்கு அறிந்துகொள்ள உதவியாக இருக்கும் என்று வையாபுரி கருதினான். ஆகையால், ஜெர்மன், பிரெஞ்சு, முதலிய பாஷைகளை ஓரளவு கற்றுக்கொண்டான். சொற்களையும் இலக்கணங்களையும் பற்றி ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக் கும் எத்தனையோ சிறந்த நூல்களை மிகவும் நுணுக்க மாகப் படித்தான். இங்கே கிடைக்காத நூல்களை அயல் நாட்டிலிருந்து விலைக்கு வாங்கி, தன்னுடைய சொந்த நூல் நிலையத்தில் சேர்த்துக்கொண்டான். ஒருவன் ஒரு முயற்சியில் ஈடுபட்டால், தன்னுடைய முழு முயற்சி

யையும் அவன் அதில் பயன் படுத்துவதே ஒழுங்கான முறை என்பது அவனுடைய கொள்கை. அவனுடைய புலமைக்கும், அவனுடைய நூல்களில் காணப்படும் நேர்மைக்கும், செவ்விய நடு-நிலைமைக்கும், செவ்வனே தீர்ந்த வேலைத் திறனுக்கும், இதுவே காரணம்.

மேற்கூறியபடி வையாபுரி சென்னைக்கு வந்த பிறகு எங்களுடைய நட்பு மிகவும் நெருங்கி வளர்ந்தது. நாங்கள் இருவரும், பல விஷயங்களில் ஓருயிரும் ஈருடலுமாக இருந்தோம் என்று சொன்னால் அது மிகையாகாது. என்னுடைய விஞ்ஞானக் கட்டுரைகள், கதைகள், பேச்சுக்கள், எல்லாவற்றையும் அவனிடம் படித்துக் காட்டித் திருத்தம் செய்து கொள்வதும், அவனிடமிருந்து இலக்கிய விஷயங்கள் பலவற்றைத் தெரிந்துகொள்வதும் அக்காலத்தில் நான் பெற்ற நன்மைகளில் சில. கடிதப் போக்கு வரவின் மூலம் நான் தேசிகவிநாயகம் பிள்ளையோடு பழகி வந்தேன். அவர் ஒருமுறை சென்னைக்கு வந்து வையாபுரியோடு சுமார் ஒரு மாதம் போல் தங்கினர். அப்போது அவரை எனக்கு நேரில் வையாபுரி அறிமுகம் செய்வித்து நண்பராக்கியதும் அவன் எனக்குச் செய்த நன்மைகளில் ஒன்று.

தமிழ்த் துறையில் பல பகுதிகளில் நாங்கள் இருவரும் ஒத்துழைத்த பாக்கியம் எனக்குக் கிடைத்தது. சைவ சித்தாந்த மாக சமாஜத்தின் விருப்பத்திற்கிணங்க, 'திருமந்திரம்' என்னும் நூலை ஸ்ரீ அனவரதவிநாயகம் பிள்ளையோடு கூட நாங்கள் இருவருமாக ஆராய்ந்து வெளியிட உதவியது அம் முயற்சிகளுள் ஒன்று. திருமுருகாற்றுப் படையை வசனமாக வெளியிட்டது மற்றொன்று. சென்னையில் அப்போது நிறுவப்பட்ட 'கலைமகள்' பத்திரிகையைத் தொடங்கி ஆசிரியர்களாக நடத்திவருவதிலும், தமிழ் அன்பர் மகாநாட்டை நடத்தி வைப்பதிலும், மகா

மகோபாத்தியாய ஸ்வாமிநாதய்யருடைய எண்பத்தோராவது பிறந்த விழாவிலும், புத்தகாலயப் பிரசார சங்கத்தின் வேலைகள் சிலவற்றிலும், நாங்கள் இருவருமாக ஒத்துழைத்து வந்தோம்.

சில வருஷகாலம், அனேகமாக ஒவ்வொரு நாள் இரவிலும், சித்திரக் குளத்தில் என் வீட்டில், சுமார் இரண்டு மணி நேரம்போல் கம்பராமாயணத்தை ஏட்டுப் பிரதிகளோடு ஒப்பு நோக்கி, பாட பேதங்களைக் குறித்து வந்தோம். இப்படிப் பாலகாண்டத்தில் சுமார் பன்னிரண்டு ஏடுகளாவது பார்த்திருப்போம் என நினைக்கிறேன். அயோத்தியா காண்டத்திலும் சில ஏடுகளைப் பார்த்தோம். ஏட்டைப் படிப்பது அவனுடைய வேலை, பாட பேதங்களைக் குறிப்பது என்னுடைய வேலை என்று வேலையைப் பகிர்ந்து கொண்டோம். இப்படிப் படிக்கும்போது, அவன் முதலில் சற்றே இராகத்தோடு நீட்டிப் படித்து வந்தான். இது எனக்குப் பிடிக்கவில்லை. அவன் பாடிய ராகம் நன்றாக இல்லை என்றாவது, அவன் பாடும் முறை நன்றாக இல்லை என்றாவது நான் சொல்லுவதாக நினைக்கலாகாது. நான் சொல்லிய ஆக்ஷேபனைகள் மூன்று. நான் கண்ணும் கருத்துமாக, பேனாவும், கையுமாக கஷ்டப்பட்டு, கூர்ந்து கவனித்து, பாட பேதங்களைக் குறித்து வரும்போது, அவன் கம்பன் கவிதையைச் சந்தோஷமாகச் சுவைத்துப் பாடி அனுபவித்தது எனக்குப் பொறுக்கவில்லை. அதுதான் முதல் ஆக்ஷேபனைக்குக் காரணம். பாட்டாகச் சொற்களை நீட்டும்போது, முடிவில் வரும் எழுத்தானது ம், ர், ல், ள், ன், இவற்றுள் எது என்று தெரிந்து கொள்வது மிகவும் சிரமமாக இருந்தது இரண்டாவது காரணம். பாட்டாகப் பாடினால் சற்றே நேரம் அதிகமாயிற்று என்பது மூன்றாவது காரணம். என்னுடைய ஆக்ஷேபனைகளை அவன் ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று. பிறகு எங்கள் வேலை திருத்தமாகவும், வேகமாகவும், நடந்தது.

இந்தக் காலத்தில்தான் டி. கே. சி. சென்னையில் அற நிலையப் பாதுகாப்பு போர்டில் கமிஷனராக நியமிக்கப் பட்டார். அப்போது சித்திரக் குளத்தில் என் வீட்டில் சுமார் நான்கு வருஷத்துக்கு மேலாக ஒவ்வொரு வாரமும் சனி அல்லது ஞாயிறன்று தமிழன்பர்கள் சிலர் வந்து கூடு வார்கள். பகலில் சுமார் ஒன்றரை அல்லது இரண்டு மணிக்குக் கூட்டம் தொடங்கும். இரவில் எட்டு அல்லது ஒன்பது மணியோடு முடிவடையும். அந்தக் கூட்டத்தில் பெரும்பான்மையும் டி. கே. சி. யின் பேச்சேகேட்கும். அது தான் நாங்கள் திட்டமிட்ட ஏற்பாடு. இடையிடையே வையாபுரியின் விளக்கங்களும், குறிப்புக்களும், ஆதாரங் களும், மறுப்புகளும் குறுக்கிடும். தமிழ் இலக்கியத்திற் கிடையே வட மொழி இலக்கியமும், சங்கீதம் முதலிய பிற விஷயங்களும் சிற்சில விவாதங்களும் எழுவதுண்டு. கண் டதும் காதல் என்பது உண்மையா? என்பது அவ் விவாதங் களுள் ஒன்று. க அ. நீலகண்ட சாஸ்திரி, கல்கி, துமி லன், தேவன், கி. வா. ஜகந்நாத ஐயர், டி எல். வெங்கட் ராம ஐயர், ஆர். வி. சாஸ்திரி தம்பதிகள், வி. வி. ஸ்ரீனிவாச அய்யங்கார், எஸ். ஜி. ஸ்ரீனிவாச்சாசாரி (கொனஷ்டை) நாரதர் ஸ்ரீனிவாச ராவ், ஏ. என். சிவராமன், பேராசிரியர் கே.ஸ்வாமிநாதன், வ. ரா., ப. ரா., டி. எஸ். சொக்கலிங்கம், கே. ஸ்ரீனிவாசன் (மணிக்கொடி), சங்கு சுப்பிரமணியம், கே. சந்திரசேகரன், கே. சாவித்திரிஅம்மாள், டாக்டர் ஸி. மீனுட்சி முதலியோர் அங்கு முறையாக வருவார்கள். அவ் வப்போது மகா வித்வான் ரா. இராகவய்யங்கார், மு. இராகவய்யங்கார், பி. ஸ்ரீ., வே. சாரநாதன் முதலி யோரும் கலந்து கொள்வதுண்டு. இன்னும் சில அறிஞர் களும் அவ் வப்போது வருவார்கள்.

அந்தக் காலத்திலே வ. உ. சி. யின் பதிப்பு எனப்படும் தொல்காப்பியப் பதிப்பை வையாபுரி பதிப்பித்து வந்தான். அப்போது அவனோடு உடனிருந்து பதிப்பிக்கும் பொறுப்

பில் ஒரு சிறு பகுதி எனக்குக் கிடைத்தது. தொல்காப்பியத்திலுள்ள சொற்கள் இயற்கையாகவே பாமரர்களுக்கு எளிதில் விளங்காதவை. அவற்றோடு, பிரதி செய்வோரின் பிழைகளும், அச்சுக் கோப்போரின் பிழைகளும், ஒன்றாகச் சேர்ந்துகொண்டன. ஆகவே சொற்களின் திருத்தமான வடிவத்தைக் கண்டுபிடிப்பது மிகவும் சிரமமான வேலையாக ஆகிவிட்டது. அப்போது வையாபுரியின் மிக்க பொறுமையும், முயற்சியும், நுட்பமான கவனமும், திருத்தமான ஆராய்ச்சியும், கூரிய பரந்த அறிவும், எனக்கு மிக நன்றாகப் புலனாயின. இத்தகைய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது என் அதிர்ஷ்டங்களில் ஒன்று.

பண்டை நூல்களை வெளியிடும் வேலை ஒருபுறம் இருக்க மிக விரைவாக முன்னேறிவரும் உலகப்போக்குக்கு ஏற்ற வளப்பமுடைய மொழியாகத் தமிழை ஆக்குவது கடமை என்று எங்களுக்குத் தோன்றிற்று. அதன்பொருட்டுப் பல வகையான முயற்சிகளைப் பற்றிக் கனவு கண்டோம். அப்படி நாங்கள் இருவருமாகக் கண்ட கனவுகள் பல. சிறந்த பிறமொழிக் கவிதைகளைத் தமிழ் மொழியிலே, கவிதை வடிவத்திலே கொணரவேண்டும் என்பது அக் கனவுகளில் ஒன்று. இவ் வேலைக்குத் தகுதியுடையவன் வையாபுரி என்று அவனிடம் இவ்வேலை ஒப்புவிக்கப்பட்டது. தமிழ் இலக்கியத்திலிருந்து சில சிறந்த பகுதிகளையாவது ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கவேண்டும் என்பது என் ஆசை. அந்தப் பொறுப்பை வையாபுரி என்னிடம் விட்டு விட்டான். பேராசிரியர் கே. ஸ்வாமிநாதன், என்னுடைய உறவினன் வே. நாராயணன், வையாபுரி, நான், ஆகிய நால்வரும் இம் முயற்சிகளில் ஈடுபட்டோம்.

தமிழ் இலக்கியத்தின் தொன்மை பெருமைகளை உலகம் அறியவேண்டும் என்னும் நோக்கத்தோடு தமிழ் வரலாறு ஒன்றை ஆங்கிலத்தில் இயற்ற வேண்டும் என்பது எங்களுடைய கனவுகளில் மற்றொன்று. இந்தக்

கனவுக்கு பீ. இ. என். என்னும் சங்கத்தைத் திறம்பட நடத்திவரும் மதாம் வாடியா ஊக்கம் அளித்தார். அத் தகைய வரலாறு ஒன்றை வையாபுரி எழுதுவது என்றும் அதில் சேர்க்கப்படவேண்டிய செய்யுட் பகுதியின் மொழி பெயர்ப்பை நான் செய்வது என்றும் வேலைத் திட்டத்தைப் பகிர்ந்து கொண்டோம். ஓரளவு அவன் சில குறிப்புக்களை எழுதிய போதிலும், ஒரு சில செய்யுட்களை நான் மொழி பெயர்த்த போதிலும், எங்களுடைய கனவு நெடுநாளாக நனவாகாமலே இருந்துவந்தது.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் அகராதித் தலைமை ஆசிரியராகப் பதவி வகித்து வந்த வையாபுரி அந்த வேலை முற்றுப் பெற்றதும், அதே கழகத்தின் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராக நியமிக்கப் பெற்றான். பிறகு உரிய வயது நிரம்பிய காரணத்தால், அந்தப் பல்கலைக் கழகத்து வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்டான். இனி எங் களுடைய கனவுகளை நனவாக்கும் வாய்ப்புக் கிடைத்து விட்டது என்று நான் எண்ணி, ஆகாயக் கோட்டை கட்டினேன். நாங்கள் இருவரும் சென்னை, காந்திநகரில், ஒரே தெருவில், கிட்ட உள்ள வீடுகளை எடுத்துக்கொண் டோம். ஆனால், என்னுடைய எண்ணத்துக்கு இடை யூறாக, திருவனந்தபுரத்தில் ஆராய்ச்சித் துறையில் சேவை புரிய வேண்டும் என்று வையாபுரிக்கு அழைப்பு வந்தது. அதை ஒப்புக்கொள்ளவேண்டாம் என்று நான் எவ் வளவோ சொல்லியும், பிற காரணங்களை முன்னிட்டு, அவன் அந்த உத்தியோகத்தை ஒப்புக்கொண்டான். அங்கு புரிந்த தொண்டு எவ்வளவு சிறந்ததாயிருந்தாலும், தமிழின் பெருமையை உலகுக்கு அறிவிப்பதும், தன்னு டைய ஆயுட் காலம் முழுவதும் தான் ஊறித் திளைத்த கம்பராமாயணத்தின் ஒருசிறந்த பதிப்பை வெளியிடுவதும் அதைக் காட்டிலும் சிறந்த வேலைகள் என்று நான் எண்ணினேன்.

திருவனந்தபுரத்தில் அவன் மூன்று வருஷ காலம் இருந்தான். பிறகு, சென்னைக்குத் திரும்பி வந்தபோது அவனுடைய உடல்நிலை அச்சத்துக்கிடமான அளவில் வளர்ந்து போய்விட்டது. சென்னை எழுத்தாளர் சங்கம் அவனுக்குக் கேடயம் அளித்துக் கௌரவித்த சில மணி நேரம், மேடையில் உட்கார்ந்திருந்தது கூட அவனுக்கு அளவுக்கு மிஞ்சிய, தாங்கொணாச் சிரமத்தைக் கொடுத்து விட்டது. நல்ல வேளையாக, சிறந்த வைத்தியரின் துணையால் உடல் சற்றே தேறி, அவன் வேறு சில வேலைகளில் சிறிது சிறிதாக ஈடுபட முடிந்தது. ஆயினும், முன்போல் ஊன்றிப் பாடுபட்டு நெடுநேரம் வேலை செய்ய முடியவில்லை. வேலையை மேலெழுந்த வாரியாகச் செய்வதோ அவனுடைய இயற்கைக்கு விரோதம். வேலையை ஊன்றிப் பார்த்தால் விரைவில் களைப்பு. இப்படியாகச் சில காலம் சென்றது.

பழங் காலத்திலே கடலின் வெள்ளப் பெருக்கால் தமிழ் இலக்கியத்தின் பெரும் பகுதி அழிந்துபோய் விட்டது என்பது தமிழ் நாட்டில் வழங்கும் கர்ண பரம்பரைச் செய்தி. இது உண்மை என்று சாதிப்பவர்கள் பலர்; அன்று என்று மறுப்பவர்களும் பலர். இதன் உண்மை எவ்வாறு இருந்தபோதிலும், ஓராண்டுக்கு முன் காந்திநகரை அடுத்த கால்வாயின் கரையிலே மூட்டிய ஈமத் தீயிலே, வையாபுரியின் பூத உடலோடு அவன்கண்ட கனவுகள் யாவும் அழிந்து போயின என்பதும், சிறந்த தமிழ்ச் சங்க இலக்கிய மூலப் பதிப்பும், சிறந்த கம்ப ராமாயண முழுப் பதிப்பும், சிறந்த தமிழ் இலக்கிய வரலாறும், கண்ணீர் நிறைந்து மறைத்த என் கண்களின் முன்னே, என் மனம் வெதும்ப, சாம்பரும் புகையுமாக, அன்று மறைந்து போயின என்பதும் உண்மை.

அவன் கடைசியாகச் செய்த பெருந்தொண்டைக் குறிப்பிடவேண்டும். தமிழ்ப் படிப்பு அதிகம் இல்லாதவர்

களாயும், தமிழ் நூல்களைப் படிக்கவேண்டும் என்ற ஆசை மிகுதியாக உள்ளவர்களாயும், இருக்கும் பாமர மக்களுக்குத் தமிழ்க் கவிதையைப் படிப்பதில் இடையூறாக இருப்பவை இரண்டு. பல சொற்களை ஒன்றாக உருக்கி வார்த்து, அவைகளின் வடிவத்தை மாற்றி, வேற்றுரு வோடு தோன்றச் செய்யும் 'சந்தி' என்பது ஒன்று. ஒரே சொல்லை இருகூறாகவோ,பல கூறுகளாகவோ துண்டித்து, உருத் தெரியாதபடி வெட்டிப் பகுக்கும் 'சீர் பிரித்தல்' என்பது மற்றொன்று. எதிரிடைத் தன்மை வாய்ந்த இவ் இரண்டு சிக்கல்களிலிருந்தும் தமிழ்க் கவிதையை விடு வித்து, அதில் வழங்கும் சொற்களின் வடிவம் தெரியுமாறு சொற்களைப் பிரித்து அச்சிட்டால், பாமர மக்களும் தாமாகவே பொருள் தெரிந்து கொள்ளுவதற்கு அது உதவியாக இருக்கும். ஆனால் இது ஒரு புதிய முறை. தமிழில் சந்தேகத்துக்கு இடமே இல்லாதபடி அளவற்ற பற்றும், தமிழ் மொழியில் அளப்பரிய புலமையும் உள்ள ஒருவனே இத்தகைய செயலைத் தொடங்கிவைத்து நடத்த முடியும். இந்தக் காரியத்தை வையாபுரி தொடங்கிய செயல் வேதப் பொருளைத் தமிழில் எளிதாக விளக்கிக் கூறிய அறிவாளிகளின் செயலோடும், தெய்வத்தின் திருக் கோயில்களைப் பலருக்கும் திறந்து விட்ட கருணைச் செய லோடும் ஒப்பிடத் தகுந்தது. பேரறிஞர்களான வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியாரும், வே. வேங்கடராஜுலு ரெட்டியாரும், இந்தச் செயலை ஆதரித்தது தமிழ் மக்களின் நல்ல காலம் என்றே நான் நினைக்கிறேன். வையாபுரி துணிவாக வகுத்துக் காட்டிய முறைப்படி 'முதலாயிரம்'. வெளியாயிற்று. அதை அடுத்து மற்ற 'மூன்று ஆயிரங் களும்', பின்னர்த் 'திருவாசகமும்' வெளிவந்துள்ளன. தன்னுடைய பூர்த்தியாகாக் கனவுகளால் வருந்தும் அவ னுடைய ஆத்துமா இவற்றை எல்லாம் கண்டு சாந்தி அடையும் என்பது உறுதி.

வையாபுரியின் குணசீலங்களைப் பற்றிச் சில வார்த்தைகளாவது சொல்லவேண்டும் அவனுடைய நட்புக்கு உரிய பாத்திரமாக இருந்த நான் அவனது நட்பின் தரத்தை மிக நன்ருக அறிவேன். அளவு கடந்த அன்பு, அமைதி, யாவரையும் அன்போடு வரவேற்கும் குளிர்ந்த மனப் பான்மை. நோயுற்று, உடல் தளர்ந்து, மூச்சுத் திணறும் வேளையிலும், தன்னைக் காண வந்தவர்களை அவன் புன் சிரிப்போடு மனம் குளிர வரவேற்றதை மீண்டும் மீண்டும் கண்ணுற்ற நான் இதை எப்படிச் சொல்லாமல் இருக்க முடியும்? பிறனுடைய துன்ப வேளையில் ஆறுதல் அளிக்கும் நண்பன் அவன். 'உனக்கு யார் மீதாவது அடங்காத கோபம் வந்தால், வையாபுரியிடம் சொல். அவன் உன் மனத்தைத் தேற்றுவான். நீ ஆத்திரத்தில் சொன்ன எந்தச் சொல்லும் அவனோடு ஒடுங்கிவிடும். அவன் வாயிலிருந்து பிறர் அறிய வெளிவராது' என்று க. அ. நீலகண்டன் சொன்னது முற்றும் உண்மை. ஆராய்ச்சித் துறையில் போலவே, வாழ்க்கையிலும், அடக்கம், பொறுமை, நேர்மை, தூய்மை, புறங்கூருமை, சத்தியம், உழைப்பு முதலிய குணங்கள் அவனிடம் சிறந்து விளங்கின. அவனோடு பழகிய காலம் முழுவதும், அவனை மனத்தில் பாராட்டி, வாயால் நேரில் குறைகூறிவந்தேன். இப்பொழுது சொல்லாலும் அவனை மனமாரப் பாராட்டுகிறேன்.

# நேர்மையான ஆராய்ச்சி நெறி

## கி. வா. ஜகந்நாதன்

தமிழ் பழமையானது, பலகாலமாக வளர்ந்துவரும் இலக்கியச் செல்வமுடையது, இதன்பெருமை வேறு எந்த மொழிக்கும் இல்லை என்று மேடையின்மேல் பேசினால் கேட்பவர்களுக்கு ஊக்கம் உண்டாகும். கை தட்டுவார்கள். அவர்களுக்குத் தமிழில் பேரன்பு இருப்பதனால் அப்படிச் செய்வார்கள். ஆனால் அயல் மொழிக் காரர் ஒருவரிடம் அப்படிச் சொன்னால் அவர் எளிதில் ஒப்புக்கொள்ள மாட்டார். "அதெல்லாம் வெறும் கதை" என்று ஒரே வார்த்தையில் தூக்கி எறிந்து விடுவார். அவரும் தமிழ் பழைய மொழிதான், பெருமை யுடையதுதான் என்று ஒப்புக்கொள்ள வேண்டுமானால் தக்க ஆதாரங்களோடு அறிவுக்குப் பொருத்தமான காரணங்களைச் சொல்லி நிறுவவேண்டும். இப்படிச் செய்வதை விஞ்ஞான ரீதி (Scientific method) என்று மேல் நாட்டினர் சொல்வார்கள்.

இத்தகைய நேர்மையான ஆராய்ச்சியினால் நிறுவப் பெறும் உண்மைகளை யாரிடமும் தைரியமாகச் சொல்ல லாம். பகைவனாக இருந்தாலும் உண்மையை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். தமிழ் ஆராய்ச்சியை இந்த 'விஞ்ஞான முறை'யில் செய்யப் புகுந்தவர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். விருப்பு, வெறுப்பு இல்லாமல், இதைச் சொன்னால் பெருமை குறைந்துவிடுமே என்று எண்ணாமல் உள்ளதை உள்ளபடி ஆராய்வதற்கு ஒரு வகைத் துறவு மனப்பான்மை வேண்டும். ஸ்ரீ எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களுக்கு இத்தகைய மனப்பான்மை

இருந்தது. எதையும் பொதுப்படையாகச் சொல்லாமல் திட்டமாகச் சொல்லவேண்டும். சொல்ல வகையில்லாவிட்டால் இங்கே தெளிவு உண்டாகவில்லை என்று சொல்ல வேண்டும். வையாபுரிப்பிள்ளையவர்கள் வெளியிட்ட சில கருத்துக்களைத் தமிழர்களில் சிலர் விரும்பவில்லை; சிலர் வெறுத்தார்கள். அது உணர்ச்சியின் விளைவு. ஆராய்ச்சிக்கும் உணர்ச்சிக்கும் ஒட்டுறவில்லை. ஒருவருடைய ஆராய்ச்சி உண்மையாகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை; பிழையாகவும் இருக்கலாம். ஆனால் அந்தப் பிழையை எடுத்துக்காட்ட அவரைவிட நன்றாக ஆராய்ச்சி செய்ய வேண்டும். விருப்பு வெறுப்புக் காரணமாக இது பிழை என்று தீர்ப்புக் கூறுவது அறிவின் அடையாளமாகாது.

சில விஷயங்களில் பிள்ளையவர்கள் ஒருசார் உண்மைகளை மாத்திரம் வைத்துக்கொண்டு ஒரு கருத்தை எழுதியிருக்கலாம். அதைக் காரணம்காட்டி மறுக்க யாருக்கும் உரிமை உண்டு. அப்படிச் செய்யாமல் அவருடைய தமிழ்ப் பற்றைப்பற்றியே ஐயுறும் தமிழன்பர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு உள்ள தமிழன்பில் ஸ்ரீ வையாபுரிப்பிள்ளையவர்களின் தமிழன்பு எள்ளளவும் குறைந்ததன்று என்பது நிச்சயம்.

அடக்கமான இயல்பு, தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ள நாணுதல், எப்போதும் படித்துக்கொண்டிருத்தல் ஆகிய நல்லியல்புகள் பிள்ளையவர்களிடம் இருந்தன. உடல் நலிவு ஏற்பட்டிருந்தபோதுகூடப் புத்தகம் படிப்பதையும் குறிப்புக்கள் எழுதுவதையும் அவர் விடவில்லை.

கம்ப ராமாயணத்தை நல்ல வகையில் பதிப்பிக்க வேண்டுமென்பது அவருடைய ஆசை. பல ஏடுகளைச் சேகரித்துவைத்திருந்தார். இறைவன் திருவருள் அதற்குத் துணை நிற்கவில்லை.

பிள்ளையவர்களுடைய பதிப்பின் சிறப்புக்குப் புறத்திரட்டைச் சிறந்த உதாரணமாகக் கூறலாம். அதற்கு

அவர் எழுதிய ஆராய்ச்சி முன்னுரையும் தமிழ்ப் பேரகராதிக்கு அவர் எழுதியுள்ள விரிவான முகவுரையும் அவருடைய ஆராய்ச்சித் திறமையைப் புலப்படுத்தும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைப் பதிப்பிக்கவேண்டும் என்பது அவர் ஆசை. இரண்டு நூல்களை மாத்திரம் அவரால் பதிப்பிக்க முடிந்தது.

அவருடைய பேச்சைவிட எழுத்துத்தான் உறுதியானது. சம்பாஷணையிலும்சரி, மேடைப் பேச்சிலும்சரி வையாபுரிப்பிள்ளையவர்களை உணர்ந்துகொள்ள முடியாது. அவருடைய எழுத்துத்தான் அவர் மதிப்பை எடுத்துக்காட்டியது. தமிழன்புக்கு மற்றொருபேர் வடமொழி வெறுப்பு என்பதைச் சிலர் தம் பேச்சிலும் எழுத்திலும் காட்டுகிற காலம் இது. இந்தக் காலத்தில் வடமொழியிலும் நாம் அறிவன உண்டு என்று தைரியமாக எழுதத் தெரிந்தவர் அவர்.

வையாபுரிப்பிள்ளையவர்கள் கண்ட முடிவுகள் அனைத்தும் அப்படியே ஏற்றுக்கொள்வதற்கு உரியன என்று சொல்லவேண்டிய அவசியம் இல்லை. ஆனால் அவர் மேற்கொண்ட ஆராய்ச்சி முறை நேர்மையானது ; தக்க வகையில் அமைந்தது ; அவருடைய தமிழன்புக்கு எடுத்துக்காட்டாக இருப்பது ; அவருடைய புலமையின் ஆழத்தைக் காட்டுவது என்று சொல்வதில் யாருக்கும் தடை இராது. உண்மைக்கு மதிப்புவைக்கும் இயல்பு மிகுதியாகும்போது அவருடைய ஆராய்ச்சிக்கும் மதிப்பு மிகுதியாகும்.

# தமிழ் ஆராய்ச்சியில் ‘விஞ்ஞானமுறை’ கண்டவர்

## தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

திரு. வையாபுரிப்பிள்ளை அவர்கள் தமிழின்பத்தில் பிற துறைகளை மறந்தவர். சொன்னதையே சொல்லும் கிளிப்பிள்ளை வாழ்வு வாழாது உண்மை காண முயல் வதனையே பொழுதுபோக்காகக் கொண்டு வாழ்ந்தவர். என்ன நோய்! என்ன தொல்லை! என்ன ஏச்சு! என்ன எதிர்ப்பு! ஆனால் கருமமே கண்ணானபோது இவை தோன்றுமா?

அகராதியுலகில் நுழைந்தார். வாணள் முழுவதும் மாணவராக நின்று அறிவுத்தினவு எடுத்துத் திரிவாருக்கே கலைமகள் புகழ்மகளாகக் காட்சி அளிப்பாள். அந்தக் கடவுட் காட்சியைக் கண்டவர் வையாபுரியார். தமி ழகராதி தந்த பெருமை அவரையே சாரும். விஞ்ஞானப் போக்கு என்பது தொடுவானத்தை நோக்கிச் செல்லும் முடிவிலாப் பயணம் முடிந்த முடிபு என்பது அங்கு இல்லை. நேற்று நியூடன் கண்டது இன்று ஐன்ஸ்டைன் காட்சியில் பொய்யாகும்-பொய்யாவதில்லை. மேலும் அருகு சென்று காணும்போது வேறாக விளங்கும்; பருப்பொருட் காட்சி நுண்பொருட் காட்சியாகும். எனவே தமிழகராதி முடிந்த முடிபாகாது. தமிழ் செத்தாலன்றோ தமிழகராதி முடிந்த படலம் பாடலாம்.

ஆக்ஸ்போர்ட் ஆங்கில அகராதி அறிவுலக விந்தை. அதுபோலத் தமிழகராதி வளரக்கூடிய காலம் எதிர் காலமே ஆம். வரலாற்று முறைப்படி சொற்களைத் தமி ழகராதி அமைக்கவில்லை. தமிழ் நூல்களின் கால

எல்லைகள் குழம்பிய நிலையில் "இந்தக் காலத்தில் இந்தச் சொல் இந்தப் பொருளில் வழங்கியது" என எப்படி எடுத்துக்காட்ட முடியும்? இதனை அறிந்தே வையாபுரியார் கால ஆராய்ச்சியில் ஈடுபட்டார். இங்கும் அவர் கண்ட முறை ஒன்று என்றும் வாழும். அவர்கண்ட முடிபுகள் மாறலாம்; சில வழிகாட்டும் கல்களாக அமையலாம். இந்தக் கண்கொண்டே அவர் முயற்சியின் முடிவான பயனை அறுதியிட்டு அளந்து கூறவேண்டும். தாம் காணும் முடிபினை எல்லோரும் ஒப்புக்கொள்ளும்படி அவர் எழுதிவிடவில்லை என்று கூறலாம். ஆனால் தூங்கிய அறிவைத் தட்டி எழுப்பி ஆராய்ச்சியுலகில் திரியும்படி அவர் செய்துவிட்டார் என்பதனை எவரும் மறுக்க முடியாது.

நூல்களில் வரும் சொற்கள் எழுதிய புலவர் எழுதிய படியே நமக்கு வந்தாலன்றோ வரலாற்று முறையில் தமிழ் அகராதி அமைதல்கூடும். அதனால் நூல்களைப் பதிப்பிப்பதில் ஈடுபட்டார் அவர். சங்கப் பாக்கள் புலவர் வரிசையில் வழங்க வழிசெய்தவர் வையாபுரியாரே ஆவர். சங்க நூலில் இருந்து மனோன்மணியம் வரையுள்ள நூல்களில் எதனையும் ஒதுக்கித்தள்ளவில்லை. இனிக்காத நிகண்டுகளும் அவருக்கு இனித்தன. உயிர்நூற் புலவனுக்கு மனிதனும் ஒன்றே மண்புழுவும் ஒன்றே.

இந்த ஆராய்ச்சி சிலபல சொற்களின் வரலாற்று ஆராய்ச்சியாக மலர்ந்தது. தொல்காப்பியத் தமிழினைத் தொல்காப்பியர் பேசியபடியே இன்றும் பேசுகிறோம் என்று நம்பியவர்கள் திடுக்கிட்டார்கள். சில சொற்களின் மாறிவரும் வடிவங்கள் கொண்டே காலத்தை அறுதியிடக்கூடும் என்று இவர் காட்டினார். இது முதன் முயற்சியே ஆம். புதிய உலகில் காலெடுத்து வைத்து நுழைவதனையே இங்குக் காண்கிறோம். ஆதலின் இங்கும் முடிந்த முடிபென்பது இல்லை.

காலத்தோடு ஒருவகையில் தொடர்புகொண்டது இலக்கிய ஆராய்ச்சி. பிற மொழிகளில் இந்தத் துறை வளர்ந்துள்ளது கண்டு "இந்தப் பெருமை தமிழுக்கு இல்லையே" என ஏங்கினார். பிறநாட்டு இலக்கிய வளர்ச்சியை எழுதினார்; அந்த ஆராய்ச்சித் துறைகளை விளக்கினார். "இலக்கிய ஆராய்ச்சி ஒன்றுதான் இலக்கியத்தை அனுபவிக்கும் சிறந்த முறையா?" என்று கேட்டுப் பயன் இல்லை. தமிழ் பிறமொழிபோல விளங்குவததைத் தமிழர் அனைவரும் கண்டு மகிழ வேண்டும் என்றெழுந்த அவரது தமிழன்பினையே நாம் வாழ்த்தவேண்டும்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராக விளங்கினார். ஆதலின் இந்தப் பல வகை ஆராய்ச்சிகளை ஒற்றுமைப்படுத்திக் கண்டார். "என்ன என்ன செய்யவேண்டும்" எனத் திட்டமிட்டார். அந்தக் கனவு என்று நனவாகுமோ? அறியோம். ஆனால் அன்றே தமிழ் வாழும் நாள் என்பது அறிவோம்.

சில சூழ்நிலை அவருக்கு இடர் செய்தது. நன்மை போல மயக்கியவை சில, தீமைபோல மயக்கியவை பல. இந்த உண்மையை அறியாது மனம் புழுங்கினார். அவர் எழுத்தில் அங்கே அங்கே இந்த மன எரிவு புகைவததைக் காணலாம். தமிழுலகம் அவர் எழுத்தினை விரும்பி வரவேற்கிறது என்று நான் எடுத்துக் கூறியததை அவர் முதலில் நம்பவில்லை. தமிழ் எல்லை மாநாடு அறிஞர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார் தலைமையிற் கூடியதற்கு அவரை அழைத்துச் சென்றேன். மேடையில் அவர் வந்தபோது பெருத்ததோர் ஆரவார வரவேற்பு கண்டு நான் கூறியததை சிறிது நம்பத் தொடங்கினார். ஆனால் நலிவும் நமனும் அவரை வாழவிடவில்லை. நமனார் அவரை விட்டுவையாமற் போனாலும் நாம் அவரை விட்டு விடப்போவதில்லை. நல்ல நண்பர் சென்ற வழியில் நாமும் செல்வோமாக.

# கம்பனைக்காண வழிகாட்டுபவர்

## ( பி. ஸ்ரீ )

'பதப்பொருளை அறிதலால் அது கைகூடாது. இலக்கணக் குறிப்புக்கள் தெரிதலால், அது தெரிந்ததாக மாட்டாது, விருத்தியுரையை உரைத்துக் கொள்ளுதலால், அது விளங்கிவிட மாட்டாது. முன்னூல்களிலுள்ள ஒப்புமைப் பகுதிகளை நுட்பமாக ஆராய்ந்து கொள்ளுதலால், அது நுகரப்பெற்றதாகாது' என்று திரு. வையாபுரிப்பிள்ளை என் கம்ப சித்திரக் கட்டுரைகளின் முதலாவது (பாலகாண்டத்) தொகுதிக்குத் தாம் 1940-ம் ஆண்டில் எழுதிய முன்னுரையில் குறிப்பிட்டார். 'அது' என்று நான்கு தடவை இந்த ஆராய்ச்சிப் பேரறிஞர் குறிப்பிடுவதுதான் எது? 'கம்பனது கவிதைகளை நெறிப்பட ஆராய்ந்தறிந்து இன்புறு'வதுதான் என்று இவர் வாக்கிலேயே அதைக் குறிப்பிட விரும்புகிறேன். கம்பனை அறிந்து இன்புறுவதற்கு வழிகாட்டும் பதிப்பின் தேவையை ஸ்ரீ வையாபுரிப்பிள்ளை நீண்ட காலமாக நன்குணர்ந்திருந்தார் என்பதை நான் அறிவேன்.

எத்தனையோ கம்பராமாயணப் பதிப்புக்கள் வெளி வந்தன. எனினும் புதியமுறையில் ஓர் ஆராய்ச்சிப் பதிப்பு இன்றியமையாதது என்ற தம் கருத்தை இவர் தம் இலக்கிய நண்பர்களிடம் அடிக்கடி வெளியிட்டு வியகரித்துவந்தார். 'அவன் (கம்பன்) இயற்றிய இராமாவதாரம்வால்மீகி முனிவரின் இராமாயணத்தோடு ஒத்தபெருமையுடையது' என்ற தம் கருத்தை வெளியிட்டு, 'பல இடங்களில் அம்முனிவரை விடச் சிறந்த கவித்துவம் கம்பனிடத்தில் காணப்படுகிறது என்பர் வ. வே. சு. ஐயர்' என்று, கம்பனை மறுபடியும்

இந்த நூற்றாண்டில் கண்டுபிடித்துக் காட்டிய பன்மொழிப் புலவரின் தேர்ந்த அபிப்பிராயத்தையும் எடுத்துக்காட்டி, இத்தகைய அரிய பேரிலக்கியத்திற்குத் தக்க பதிப்பு இல்லாத பெருங்குறையைக் 'கம்பன்; ஆராய்ச்சிப் பதிப்பு' என்ற தமது பொருள் பொதிந்த கட்டுரையின் முகப்பிலே சுட்டிக் காட்டுகிறார்.

'திருவள்ளுவர் திருநாள்' என்ற தமது கட்டுரையினிடையே சங்கப்புலவர்களை 'ஒருங்கு கூடிச் சிற்றொளி நல்கிய சிறு நட்சத்திரங்கள்' என்றும், சிலம்புச் செல்வம் தந்த கவிப்பெருஞ் செல்வரை ஒரு 'பெருநட்சத்திரம்' என்றும், ஆழ்வார்-நாயன்மார்களைத் 'தண்ணிய அருளோடு மிளிரும்' நட்சத்திரங்கள் என்றும், சிந்தாமணி ஆசிரியரைச் 'செவ்விய நல்லொளி' என்றும், சேக்கிழார் பெருமானை 'விடிவெள்ளி' என்றும் கூறித் திருவள்ளுவரைத் 'தெய்வ ஒளியாகிய திங்கள்' என்று போற்றியுள்ளார். அதே வாக்கில், அதே வாய்ப்பில் 'விண்ணையும் மண்ணையும் தன்னிடமாகக் கொண்டு தன்து பேரொளிப் பெருவெள்ளத்தால் இரு பேருலகையும் ஜோதி ஸ்வரூபமாக்கிய கம்பர் என்னும் கவிகுலபாஸ்கரனை'யும் குறிப்பிடுகிறார். இத்தனிப்பெருங் கவிஞனுக்குத் தமது பதிப்பாசிரியப் பண்பும் ஆராய்ச்சித் திறனும் முதிர்ந்த நிலையில் பயன்பட வேண்டும் என்பது இவர் கனவு.

கம்பனுக்கு ஒரு நல்ல பதிப்பும் இல்லையே என்ற குறையை ஒருவாறு போக்க முயன்று ஓரளவு வெற்றி பெற்றவர்கள் சுன்னாகம் குமாரசுவாமிப்பிள்ளையும் கனக சுந்தரம்பிள்ளையுமே யாவர். இவர்கள் 'பதிப்பித்த பால காண்டம் ஒன்றே சுத்தப் பதிப்பாக வெளிவந்திருக்கிறது. ஆனால், இதுவும் ஆராய்ச்சிப் பதிப்பன்று' என்பர் திரு. வையாபுரிப்பிள்ளை. எனினும்,

அத்தகைய சுத்தப் பதிப்பாக வேறு காண்டங்களும் வெளிவராதது வருந்தத் தக்கதே. அந்த நிலையையும் இது வரை வெளிவந்துள்ள வேறு பதிப்புக்கள் எட்டவில்லை என்பதைக் கம்பராமாயண ஆராய்ச்சியாளர்கள் நன் கறிவர்.

தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும், மலையாளம் ஈழம் முதலிய பிரதேசங்களிலும் கிடைக்கும் கம்ப ராமாயண ஏட்டுப்பிரதிகளை ஆராய்ந்து உண்மைப்பாடத்தை வரைய றுத்துப் பாடவேறுபாடுகள் முதலியவற்றையும் ஆராய்ச்சி யாளர்களுக்குப் பயன்படுமாறு தரும் முயற்சிதான் ஆராய்ச்சிப் பதிப்பு முயற்சியாகும் என்று திரு. வையா புரிப் பிள்ளை கூறுவதில் கருத்துவேற்றுமை இருக்கவே முடியாது. இத்தகைய செவ்விய முறையைப் பின்பற்றாத தனால்தான்,

> தருகை நீண்ட தயரதன் தான்தரும்
> இருகை வேழத் திராகவன் தன்கதை
> திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
> குருகை நாதன் குரைகழல் காப்பதே

என்பது போன்ற கவிகளும் கம்பன் வாக்காகப் புத்தகங் களில் இடம் பெற்றிருக்கின்றன.

‘ நான் பரிசோதித்த 23 ஏட்டுப் பிரதிகள் ஒன்றிலே னும் இச் செய்யுள் தனியனிற்கூடக் காணப்பெறவில்லை. மழவை மகாலிங்கையர் கி. பி. 1,845-ல் வெளியிட்ட பால காண்டப் பகுதியிலும், காஞ்சீபுரம் சபாபதி முதலியார், கோமளபுரம் ராஜகோபாலப்பிள்ளை இவ்விருவரது உதவி யையும் பெற்று, கிருஷ்ணசுவாமிமுதலியார் கி. பி. 1,861-ல் வெளியிட்ட பாலகாண்ட உரைப்பதிப்பிலும் இச்செய் யுள் காணப்பெறவில்லை. எனவே, ஏட்டுப் பிரதிகள் பல வற்றிலும்,—அனைத்திலும் என்றுகூடச் சொல்லலாம்— முதன முதலில் வெளிவந்த அச்சுப்பிரதிகள் பலவற்றிலும்

காணப்பெறாத இந்தச் செய்யுள் சமீபகாலத்தில் அச்சு ஏற்றியவர்களோ, பிறரோ எழுதிச் சேர்த்தது என்றே துணியத் தக்கது' என்று இந்த ஆராய்ச்சிப் பேரறிஞர் குறிப்பிடும் காப்புச் செய்யுள் டாக்டர். சாமிநாதையர் பெயர்த் தொடர்புடன் வெளிவந்திருக்கும் கலாக்ஷேத்திரப் பதிப்பிலும் கம்பன் வாக்காகக் காட்டப்பெற்றிருக்கிறது!

கம்பன் கவிதையுடன் சொற்பப் பழக்கம் உள்ள ரஸிகர்களும்கூட 'இது கம்பன் வாக்கன்று' என்று கண்டு பிடித்திருக்கக் கூடுமே! இந்தச் செய்யுளும் சில ஏட்டுப் பிரதிகளில் காணப்படுகிறதே யென்றால், அந்தப் பிரதிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற் பகுதியில் எழுதப்பெற்றவை யென்றே ஊகிக்கலாம். இத்தகைய ஏடுகளைப் பரிசோதித்து மதிப்பிட்ட பின்பே எந்த அளவிற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதை நிச்சயிக்க முடியும்.

கம்பன் சமரச நோக்குடன் இராமாவதாரத்தை இயற்றிய போதிலும் ஆழ்வார்களின் கொள்கையை ஒட்டித் தன் 'ராமபக்தி—மதத்தை' உருவாக்கிக்கொண்டு அங்கும் இங்கும் பாடல்கள் அமைத்திருக்கிறான் என்ப தில் ஐயமில்லை. இதற்கு அகச் சான்றுகள் உண்டு. அந்தப் பாடல்களில் கம்பன் கவி முத்திரையைக் காண லாம். ஏற்கெனவே காட்டிய நம்மாழ்வார் காப்போ சமயப் பிரசாரத்தில் கருத்துக்கொண்ட சாதாரணப் புலவனும் பாடக் கூடியதுதானே.

> என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
> நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
> சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
> தன்திரு நாமத்தைத் தானும் சார்த்தியே

என்ற திருமண்காப்புப் பாட்டும் பிரச்சார நோக்குடன் செருகப் பெற்றதுதான். 'இச் செய்யுள் பழைய பிரதி

களில் காணப்பெறவில்லை. சுன்னாகம் குமாரசுவாமிப் பிள்ளையின் பதிப்பில் இச் செய்யுள் கொடுக்கப்படவே யில்லை' என்பர் திரு. வையாபுரிப்பிள்ளை. எனினும் இந்தப் பாட்டும் பதவுரை விளக்கவுரைகளுடன் தமிழ்ப் பெரும் புலவர்களின் பதிப்புக்களிலும் இடம் பெற்றிருக் கிறது. இத்தகைய பாட்டு ஒன்றைச் சுந்தர காண்டத்தி லும் காண்கிறோம்.

இவைபோன்ற தனிச் செய்யுட்கள் மட்டுமா ஆராய்ச் சிப் பதிப்பில் விலக்கத்தக்கவை? விசுவாமித்திரர் வரலாறு கூறும் 56 செய்யுட்கள் மிகமிகப் பழைய பிரதியாகிய அம்புலப்புழைப் பிரதியில் (இப்போது திருவிதாங்கூர் அரண்மனை நூல் நிலையத்தில் உள்ளது) காணப்பட வில்லை யென்பதை ஸ்ரீ வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகிறார். சுந்தர காண்டத்தில் வானரர்கள் மதுவனம் அழித்ததாக வரும் செய்யுட்களும் ஆழ்வார்திருநகரி ஏட்டுப் பிரதி களில் இல்லை. 'சிறந்தவை என்று கொள்ளத்தக்க சுவடி களில்' இப்பாடல்கள் இல்லை யென்பதைக் கலாக்ஷேத்திர வெளியீடாகிய சுந்தரகாண்டப் பதிப்பும் ஒப்புக்கொண்டி ருக்கிறது. எனினும், அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பில் இப்பகுதி கம்பன் வாக்காகவே அச்சிடப்பட்டி ருக்கிறது.

'மதுவனச் செய்தியைக் கூறும் இப் பாடல்களின் நடையும் இந்நூல் நடைக்கு ஏற்ற சிறப்பினதாக இல்லை. ஆதலால் இப்பதிப்பில் அவை விடப்பெற்றன' என்பது கலாக்ஷேத்திர வெளியீடு தெரிவிக்கும் செய்தி. ஆனால் இத்தகைய செய்யுட்கள்,

> தேவ பாடையின் இக்கதை செய்தவர்
> மூவர் ஆனவர் தம்முளும் முந்திய
> நாவி னார்உரை யின்படி நான்தமிழ்ப்
> பாவி னால்இது ணர்த்திய பண்பரோ

என்ற பாயிரச் செய்யுட் கருத்திற்கிணங்கவே கம்ப ராமாயணத்தில் இடம் பெற்றிருக்கின்றன. இந்தச் செய்யுளும் செருகு கவிதான் என்பது திரு. வையாபுரிப்பிள்ளையின் கருத்து. 'வால்மீகி ராமாயணத்திலுள்ள கதைப் பகுதிகள் தமிழ்ப் பெருநூலில் காணப்படாதிருத்தல் தக்கதன்று' என்று கருதியவர்களே அப்பகுதிகளையும் தமிழ்ச் செய்யுள் வடிவில் புகுத்தி அவற்றுக்கு ஆதாரமாகத் 'தேவ பாடையின்' என்று தொடங்கும் இச்செய்யுளையும் புகுத்தியிருக்கவேண்டும் என்பது நமது ஆராய்ச்சி அறிஞரின் ஊகம். பல்கலைக் கழகப்பதிப்பிலோ, வேறு பதிப்புக்களிலோ இத்தகைய பிரசினைகள் குறித்துக் 'கவல்கின்றார் ஒருவரைக் காணேன் !'

இடைச் செருகல்கள் தவிர, கம்பன் பாடிய பாடல்களிலேயே எத்தனை பிழைகள், சிதைவுகள் !

> நரவ லோம்வலம் என்றுயிர் தாங்கிய
> மரமெ லாம்கடல் வீழ்தலும், வண்டெலாம்
> கரவி லாளர் விழக்களை கண்ணிலா
> இரவ லாளரின் எங்கும் இரிந்தவால

என்ற பாட்டு,

> நாவ லோவலம் என்றது தாங்கிய
> மாவெ லாம்கடல் வீழ்தலும், வண்டெலாம்
> காவ லாளர் விழக்களை கண்ணிலா
> ஏவ லாளரின் எங்கும் திரிந்தவால

என்று சிதைந்துபோயிருக்கிறது என்பது திரு. வையாபுரிப் பிள்ளையின் கருத்து.

'இப்பாடத்தை வைத்துக்கொண்டு தமக்குத் தோற்றியவாறு பொருள் எழுதினரும் உளர்' என்பர் திரு வையாபுரிப் பிள்ளை. உண்மை வடிவம் கண்டதும் கம்பன் கவிதைக்குப் பெரும்பாலும் பொருள் இனிது விளங்கி விடும். ஆனால் அதற்குப் பொறுமை வேண்டாமா?—

ஏட்டுப் பிரதிகளைச் சோதித்துப் பார்ப்பதற்கு ஆற்றலும் அவகாசமும் வேண்டுமல்லவா ?

ஆற்றலும் அவகாசமும் பெற்றிருந்தவர்களும் இத் துறையில் சரியாக நடந்து கொள்ளவில்லையென்பது திரு. வையாபுரிப் பிள்ளையின் மனவேதனை. ஸ்ரீ கோபால கிருஷ்ணமாச்சாரியார் என்ற பிரசித்தமான உரையாசிரியரும் சரியான பாடத்தைப்பாடபேதமாகவே குறித்துவைத்தார். இது குறித்துப் பிள்ளை கூறுவது கூர்ந்து நோக்கத்தக்கது: 'இது முற்றும் திருப்தியாக இல்லாத இடங்களில் பழைய பாடங்களையே வைத்துக்கொள்ள வேண்டுமென்ற கொள்கையை உணர்த்துகிறது. இக்கொள்கை எனக்கும் உடன்பாடே. ஆனால், குறிப்பிட்ட இந்த இடத்தில் ஆசாரியார் கொண்டது வேண்டாததோர் ஐயப்பாடே. இவ்வாறு தவறாக வாசித்துக்கொண்டு பாடங்களை அமைத்தல் மிகமிகப் பெரியதொரு குறைபாடு அல்லவா?... இக்குறைபாடுகளெல்லாம் நீங்கிய ஆராய்ச்சிப் பதிப்பு வெளிவந்தாலன்றி, கம்பனை உண்மையில் உணர முடியுமா ?'

இதே கட்டுரையில் நமது ஆராய்ச்சிப் பேரறிஞர் ஒவ்வொருவகைக் குறைபாட்டிற்கும் உதாரணம் காட்டியிருக்கிறார். குறைபாடுகளுக்குக் காரணங்களையும் ஆராய்ந்திருக்கிறார். உதாரணமாகத் திருவவதாரப் படலத்திலுள்ள ராமஜாதகப் பாடல்கள் பிரசங்கிகளால் கதை கேட்கும் பொதுமக்களைத் திருப்தி செய்வதற்காகச் சேர்க்கப் பெற்றிருக்க வேண்டும் என்று ஊகஞ்செய்திருக்கிறார். இது கம்பனுடைய செய்யுள் நடையை மாத்திரம் உள்ளத்திற்கொண்டு செய்திருக்கும் ஊகம் அன்று. 'இந்த இரண்டு கவிகள் சில பிரதிகளிற் காணப்படுகின்றன. அவை பழைய ஏடுகளில் இல்லை' என்று சுன்னாகம் குமாரசுவாமிப் பிள்ளை பதிப்பிலுள்ள

குறிப்பையும் எடுத்துக்காட்டுகிறார். இதனால் முக்கியமாக ஈழநாட்டுப் பிரதிகளில் ராமஜாதகப் பாடல்கள் இல்லை யென்று தெரியவருகிறது.

இந்த அளவிலும் திருப்தி அடைகிறவர் அல்லர் இந்த ஆராய்ச்சிப் பேரறிஞர். நாட்டின் பகுதிகளிலிருந்து தாம் அரும்பாடுபட்டுத் தேடிவைத்திருக்கும் ஏடுகளை யெல்லாம் சோதித்து, 'என்னிடம் உள்ளவற்றில் பெரும் பான்மைப் பிரதிகளில் இச் செய்யுட்கள் இல்லை' என்று தமது குறிப்பையும் எழுதிவைத்திருக்கிறார்.

இந்த ஆராய்ச்சி அறிஞர் எந்த முடிவையும் அவசர மாகச் செய்துவிடுவதில்லை; தமது விருப்பு வெறுப்புக் களைக் கொண்டு முடிவு செய்வதேயில்லை. இதற்கு ஓர் உதாரணமாக 'நாகபாசப் படல'த்தில்

யார்இவ் அதிரேக
மாயை அறிவார்?

என்று முடியும் (251–261) செய்யுட்களைக் குறித்த இவர் கருத்தைச் சுட்டிக்காட்டலாம். 'இப்பகுதி நான் பார்வை யிட்ட ஒரு பழம் பிரதியில் காணப்படவில்லை. இது இடைச் செருகல் என்பது எளிதிற் புலனாகக்கூடியது' என்று எழுதிவிட்டு, மேலும் தொடர்ந்து தம் கருத்தை வெளியிடுவதைப் பாருங்கள்: 'பிரதிகள் அனைத்தையும் நாம் ஆராய்வோமானால் இம்முடிபே பெறப்படும் என்று நாம் கொள்ளலாம். ஆனால், அவ்வாறு ஆராயும்வரை சந்தேகம் என்ற நிலையில் இவற்றை வைத்துக்கொள்ள வேண்டுமேயன்றி உறுதியாகத் தள்ளிவிட முடியாது.'

ஆராய்ச்சியில் எவ்வளவு நேர்மையான நெறி இது! இத்தகைய செம்மைப் பெருநெறி பிடித்து ஒழுகிய இந்த அறிஞருக்கு மதப்பற்றால் ஏற்படும் மயக்கம் இடையூறாக ஏற்படுவதேயில்லை. வைணவ சமயத்தைச் சார்ந்தவர்கள் மதாபிமானத்தால் இடைச்செருகல் செய்திருப்பதுபோல்

'சைவ சமயத்தைச் சார்ந்தவர்களும் இராமாயணத்தில் ஈடுபட்டவர்களாகவேயிருந்தனர். இவர்களும் தங்கள் கொள்கைக்கு ஏற்றவாறு இராமாயணச் செய்யுட்களைத் திருத்திய இடங்கள் ஒரு சில உள்ளன' என்று இவர் கூறுவதைக் கேளுங்கள்.

இதுவரை இராமாயணத்தைப் பதிப்பித்த பெரும் புலவர்கள்கூட இடைச்செருகல்களையும் குறைபாடுகளையும் ஏன் நீக்கவில்லை என்பதற்கும் இந்த ஆராய்ச்சியறிஞர் காரணங்களை ஆராய்ந்து கூறியுள்ளார். 'ஆராய்ச்சிப் பதிப்பு' என்ற கருத்தே அண்மையில் தோன்றியது தான் என்ற உண்மையை இவர் தைரியமாக ஒப்புக்கொள்கிறார். 'ஆங்கில நூல்களையும் ஆங்கில நூற்பதிப்புக்களையும் நோக்கியவர்களே இதன் அருமையை உணர்வார்கள். இம்முறை ஒன்றே கம்பனது இராமாயணத்தை உண்மையாக நமக்குக் காட்டவல்லது' என்று எவ்வளவு உறுதியாகத் தம் கருத்தை வெளியிடுகிறார்! ஆராய்ச்சிப் பெருநெறியில் மொழிப்பற்றும் மதப்பற்று இனப்பற்றுகளைப்போல் இடையூறாகக் கூடும் என்பதையும் இவரைப்போல் உணர்ந்திருந்த வேறு எவரையும் நான் கண்டதில்லை.

ஏட்டுப் பிரதிகளில் கம்பராமாயணப் பாடல்கள் என்று எழுதிவைத்திருக்கும் செய்யுட்களையெல்லாம் சேர்த்துப் பதிப்பிக்கும் முறை ஒன்றையே நம்மவர் அறிந்திருக்கிறார்கள் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே இந்த முறைதான் வழக்கத்தில் இருந்தது. நாற்பது ஏட்டுச் சுவடிகளை ஒப்புநோக்கி, அவற்றில் காணப்பட்ட மிகைச் செய்யுட்களையெல்லாம் சேர்த்து அந்த நாளில் (சுமார் 230 ஆண்டுகளுக்கு முன்) ஆழ்வார்திருநகரியில் எழுதப்பட்ட பிரதி ஒன்று கலாக்ஷேத்திரத்தைச் சார்ந்த டாக்டர்

சாமிநாதையர் நூல் நிலையத்தில் இருக்கிறது. 'இப்பிரதி முதலியவற்றில் இடைச் செருகல்கள் பலபல புகுந்திருக்க வேண்டும்' என்று திரு. வையாபுரி கூறுவது எவ்வளவு பொருத்தமானது! ஸாராம்சத்தில் அந்த முறையைத்தான் பல்கலைக் கழகத்தாரும் பிறரும் இன்றும் பின்பற்றி வருகிறார்கள்.

எல்லா ஏடுகளிலும் உள்ள எல்லாப் பாடல்களையும் சேர்த்துப் பதிப்பித்தால், அது ஆராய்ச்சிப்பதிப்பு ஆகுமா? ஆனால், தமிழகத்தின் பல ஊர்களிலும் கிடைக்கும் சுவடிகளுடன் வேறு பிரதேச சுவடிகளையும் ஒருசேரத் தொகுத்துவைப்பது ஆராய்ச்சிப் பதிப்பிற்கு இன்றியமையாத அடிப்படை முயற்சியாகும் என்பது தெளிவு. இதை அவசரமாகச் செய்யமுடியாது.

'ஆங்கில இலக்கியத்தில் பெரும் பயிற்சியுடையவரும் தமிழ் நாட்டுப் பெருமக்களுள் முன்னணியில் நிற்பவருமாகிய நண்பர் ஒருவரோடு இராமாயணப் பதிப்பு விஷயமாய் ஒருமுறை பேச நேர்ந்தது. அப்பொழுது அவர் ஆராய்ச்சிப் பதிப்பு வெளியிடுதலைக் காட்டிலும், பொது மக்களுக்குப் பயன்படும்படியான நல்ல பதிப்பொன்று வெளிவருதலே மிக முக்கியமானது என்ற கருத்துப்பட மொழிந்தனர்' என்று பிள்ளை தமது 'ஆராய்ச்சிப் பதிப்'பு'க் கட்டுரையில் கூறிவிட்டு, 'இக்கருத்து, தமிழ்நாட்டினர் ஆராய்ச்சிப் பதிப்பினை எங்ஙிலையில் கொண்டுள்ளனர் என்பதனை விளக்குகிறது' என்றும் கூறியுள்ளார்.

இவர் குறிப்பிடும் நண்பர் வேறுயாருமில்லை, இவரது நீண்டகாலப் பேரன்பர்களில் ஒருவரும், ஒருசாலை மாணவரும் தமது சொந்தப்பணத்தைச் செலவிட்டாவது கம்பராமாயணத்திற்கு ஒரு நல்ல பதிப்பைக் கொண்டுவர வேண்டும் என்ற பெருவிருப்பம் கொண்டிருந்தவருமாகிய டாக்டர். ஆர். கே. சண்முகம் செட்டியாரே யாவர் என்

பதைப் பரசியமாக்குவதில் தவறொன்றுமில்லை. அந்தப் பிரமுகர் கம்பராமாயணப் பதிப்பைக் குறித்து என்னிடத்திலும் தம் கருத்துக்களை வெளியிட்டுச் சிற்சில ஆரம்ப முயற்சிகளையும் மேற்கொண்டதுண்டு. அவரது கருத்திற்கு இணங்கத் தொடங்கப் பெற்றதுதான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் ' கம்பராமாயணப் பதிப்புவேலை.

'நண்பர் கருதும் பொதுமக்களுக்குரிய பதிப்பு ஆராய்ச்சிப் பதிப்பினை ஆதாரமாகக் கொண்டல்லவா தோன்றுதல் வேண்டும்?' என்பது இந்த ஆராய்ச்சியறிஞரின் கேள்வி. குதிரைக்குமுன் வண்டியை வைத்து ஓட்டும் முயற்சிதான் ஆராய்ச்சிப் பதிப்பிற்கு முன் பொதுமக்களுக்கு உரிய 'ஒரு நல்ல திருந்திய ஆதார பூர்வமான பதிப்பை' வெளிவரச்செய்வதும்? இந்த நிலையை ஒருவாறு உணர்ந்துதான் பல்கலைக் கழகத்தார் ஏட்டுச் சுவடிகளைச் சேகரிக்கத் தொடங்கினார்கள். ஆனால் பிரதேச பிரதிகள் பலவும் இன்னும் முறையாகச் சேர்க்கப் படவில்லை. காலத்தால் மிகப்பழமையான சுவடிகள், பெரிதும் பயன்படுவன என்ற கருத்துடன் கிடைத்த சுவடிகளைத் தொகுத்து வகைப்படுத்தி வைத்திருப்பதாகவும் தெரியவில்லை. மேலைநாட்டுப் பதிப்பாளர்கள் மேற்கொண்டுள்ள நவீன முறைகளையும் பல்கலைக் கழகத்தார் பயன்படுத்திக் கொண்டதாகத் தெரியவில்லை.

மூலபாடத்தை நிச்சயிப்பதற்குப் பொருத்தமான நியதிகளை மேற்கொள்வதும் அவசியமாகும். 'கம்பர் கவியின் உண்மையுருக் காண்டற்கு, அவர் எடுத்து ஆளும் சொற்களும், தொடர்களும், கருத்தும், பொருளும் ஆகியவற்றின் அமைதியையும், கவியின் நடையமைதியையும் அவருடைய கலையறிவும் உலகியலறிவும் சமயக் கொள்கையும் அவர் காலத்திலும் அதற்கு முன்பும் வழங்கிய மரபுகளும் வழக்காறுகளும் ஆகிய குறிப்புகளையும் அறிந்து கொள்ளு

தல் இன்றியமையாததாகும்' என்று அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் சுந்தர காண்ட முதற்பகுதிக்குத் தாம் எழுதியுள்ள பதிப்புரையில் கூறியுள்ளார். ஆனால் இத்தகைய நியதிகளைக் கடைப்பிடித்தே இப்பதிப்பில் மூலபாடங்கள் துணியப் பட்டுள்ளன என்று முடிவு கட்டுவதற்கு இடமில்லை.

இயன்றவரையில் இத்தகைய நியதிகளைக் கடைப்பிடித்திருந்தால், அநுமன் சீதாபிராட்டியைக் காண்பதை வருணிக்கும் கம்பன் பாட்டு,

விரிமழைக் குலங்கிழித்
தொளிரு மின்னெனக்
கருநிறத் தரக்கியர்
குழுவிற் கண்டனன்,

குருநிறத் தொருதனிக்
கொண்ட லூறியான்
இருநிறத் துற்றஎற்
கியைந்த காந்தத்தை !

என்ற வடிவில் அமைத்திருக்க முடியுமா ?

'இருநிறத்து—பெரிய மார்பின் கண். உற்ற—பொருந்திய. எற்கு—ஒளிக்கு. காந்தம்—ஒருவகை மணி' என்றெல்லாம் உரையும் வரையப்பட்டுள்ளது. சுந்தர காண்டத்தின், இம் முதற்பகுதியில் 'மூந்நூற்றுக்குக் குறையாத பாடல்களுக்குத் திருந்திய பாடங்களும் புதிய உரையும் அமைந்திருத்தலை அறிஞர்கள் காணலாம்' என்று பதிப்புரை தெரிவிக்கிறது. இந்தப் பாட்டிலும் திருந்திய பாடமே அமைந்திருப்பதாக ஊகிக்கக் கூடுமல்லவா ?

ஆனால், செய்யுளின் பிற்பாதி முற்பாதிபோல் அவ்வளவு தெளிவாயிருக்கிறதா என்பதை நாம் முதன் முதல் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

இரு நிறத்(து) உற்றஎற்(கு)
இயைந்த காந்தத்தை

என்ற நடையமைதி இச் செய்யுளுக்குப் பொருந்துவது தானா? இக்கவிதையின் இசையமைதிக்கு இசைந்திருக்கிறதா இந்த இறுதி அடி? பொருளை நோக்கும்போது 'எற்கு இயைந்த காந்தத்தை' என்று இருப்பது அனுமன் காட்சிக்குச் சிறப்புடையதாகுமா? 'எற்கு' என்பதற்கு 'எனக்கு' என்றும் பொருள் இருப்பதால் பக்தர் நெஞ்சு புண்படவும் கூடுமே!

ஏறக்குறையச் சரியான பாடம் கலாக்ஷேத்திரப் பதிப்பில் காணப்படுகிறது :

விரிமழைக் குலங்கிழித்
தொளிரு மின்னெனக்
கருநிறத் தரக்கியர்
குழுவிற் கண்டனன்

குருநிறத் தொருதனிக்
கொண்ட லாமெனத்
திருவுறப் பொலியுமோர்
செல்வன் தேவியை.

பிற்பாதியின் சிதைந்த வடிவைத்தான் பல்கலைக் கழகப் பதிப்பில் காண்கிறோம்; பெரும்பாலும் திருந்திய மூல பாடத்தைக் கலாக்ஷேத்திரப் பதிப்பில் காண்கிறோம். 'திருவுற' என்பது மட்டும் 'திருவுரு' என்று ஸ்ரீ வையாபுரிப் பிள்ளை குறித்துவைத்திருக்கும் திருந்திய பாடத்தில் காணப்படுகிறது. இந்த முக்கியமான செய்யுளுக்குச் சரியான பாடத்தை முதன் முதல் கண்டு பிடித்துக் கூறியவர் திரு வையாபுரிப் பிள்ளையே யாவர் என்பதை இவரது இலக்கிய நண்பர்கள் அறிவார்கள்.

இச் செய்யுளின் திருந்திய பாடம் பல்கலைக் கழகத்தாரின் ஏட்டுச் சுவடிகளிலும் காணப்படுகிறது என்

பதைப் 'பாடவேறுபாடு' என்ற பகுதியில் கண்டுகொள்ள லாம். எனவே கவியின் உண்மையுருக் காண்ப தற்குப் பதிப்பாசிரியர் தம் பதிப்புரையில் குறிப்பிடும் நியதி சரியாகக் கடைப்பிடிக்கப் பெறவில்லை யென்றே கருதவேண்டியிருக்கிறது. இப்படிப் பல உதாரணங் களைக் காட்டிக்கொண்டேபோனால் கட்டுரை நீண்டு கொண்டே போகும் என்று அஞ்சுகிறேன்.

ஆராய்ச்சிப் பதிப்பிலே 'செய்யுட்களை ஓசை கெடாத படி சந்தி பிரித்தலும், பொருள் விளக்கத்திற்கு வேண்டும் குறியீடுகளை அமைத்தலும்......நாம் கையாளவேண்டும் முறைகளில் சிலவாகும்' என்பர் திரு. வையாபுரிப் பிள்ளை. கலாக்ஷேத்திரப் பதிப்பில் இந்த நியதி கையா ளப்படவில்லை. பல்கலைக் கழகப் பதிப்பிலே ஒவ்வொரு செய்யுளையும் சந்தி பிரியாமலும் சந்தி பிரித்தும் இருமுறை அச்சிட்டிருக்கிறார்கள். இது அவசியமில்லாத காரியம் தான்.

'மிக இன்றியமையாததான குறிப்புரையும் அடிக் குறிப் பாகச் சேர்த்தல் நலமாம்' என்பது பிள்ளையின் கருத்து. கலாக்ஷேத்திரப் பதிப்பிலே பதவுரையும் காணப்படுகிறது. பல்கலைக் கழகப் பதிப்பிலோ 'பழைய உரைகள் உள ; ஆகவே புத்துரை வரைதல் வேண்டா' என்ற கருத்துடன் அருஞ் சொற்களுக்குப் பொருளும், கடினமான பகுதி களுக்குப் பதவுரை கருத்துரைகளும் எழுதப்பட்டிருக் கின்றன. சொல் – தொடர் முதலியவற்றை அடைவு படுத்தி முன்கூட்டியே அகராதி தயார் செய்துகொள்ளாத தால் சில சொற்களுக்குச் சரியான பொருள் காண்பதில் இடர்ப்பாடு நேர்ந்திருப்பதையும் காண்கிறோம்.

இதற்குச் சுந்தர காண்டத்தின் தொடக்கத்திலேயே– கடவுள் வாழ்த்திற்கு அடுத்த பாட்டிலேயே—ஓர் உதார ணம் காணலாம். இச் செய்யுளில் 'வேண்டரு விண்ணாடு'

என்ற ஒரு சொற்றொடர் வருகிறது. 'வேண்டரு' என்பதை 'வேண்தரு' என்று பிரித்து 'ஆசையைக் கொடுக்கின்ற' என்ற பொருளும் வரைந்திருக்கிறார்கள். 'வேண்' என்ற சொல்லை ஆசை அல்லது விருப்பம் என்ற பொருளில் கம்பன் வேறு எங்குமே உபயோகிக்கவில்லை யென்பதைச் 'சொல்--தொடர் அகராதி' தயாரித்திருந்தால் எளிதில் தெரிந்துகொண்டிருக்கலாம். 'வேண்' என்றால் வேணுடு. 'வேள்' என்பதன் சிதைவு. 'வேண்' என்பது 'ஆசை' என்ற பொருளில் வரவில்லை.

'வேண்—ஆசை' என்ற பொருளே சென்னைப் பல்கலைக்கழகத்து அகராதியில் தவருகப் புகுந்துவிட்டது என்றும், இது அடுத்த பதிப்பில் திருத்தம் பெறவேண்டும் என்றும் திரு.வையாபுரிப்பிள்ளை என்னிடம் நேரில் சொன்னதுண்டு. யாழ்ப்பாணத்து அகராதி ஒன்றிலே முதன் முதலில் புகுந்த தவறுதான் பல்கலைக் கழகத்து அகராதியிலும் இடம்பெற்றுவிட்டது. 'வேண்' என்பது இலக்கியச் சொல் அன்று என்பதற்கு யாழ்ப்பாணத்துப் பெரும் புலவரும், பாலகாண்டம் சுத்தப் பதிப்பாக வருவதற்கு ஸ்ரீ கனகசுந்தரம் பிள்ளையுடன் ஒத்துழைத்தவருமான சுன்ஞகம் அ. குமாரசுவாமிப் பிள்ளை தொகுத்துள்ள இலக்கியச் சொல் அகராதியில் இச் சொல்விடப்பட்டிருப்பதும் ஒரு சான்ருகக் கருதத்தக்கது.

'ஆசைப்பெருக்கம்' அல்லது 'வேட்கைப் பெருக்கம்' என்று பொருள்படும் 'வேணவா' என்ற சொல்லிலிருந்தே 'வேண்' என்பதற்கு ஆசையென்ற பொருளைக் கற்பித்திருக்கவும் கூடும். 'வேட்கை + அவா = வேணவா' என்பதைத் தெரிந்துகொள்ளாமல் 'வேண்' என்பதற்கே 'வேட்கை' என்று பொருள் கொண்டிருக்கவும் கூடுமே!

இந்தப் பிழை தமிழ்ப் பல்கலைக் கழகத்துக் கம்பராமாயணப் பதிப்பு ஒன்றிலும் புகுந்துகொண்டது அதிசயமா

கத் தோன்றுகிறது. 'வேண்தரு விண்ணாடு—விருப்பத்தைத் தரும் விண்ணாடு என்று பொருள் கொள்வாரும் உளர்' என்று கலாக்ஷேத்திரப் பதிப்பிலும் ஒரு குறிப்பைக் காண் கிறோம். எனினும் இப்பதிப்பாசிரியர் தமது பதவுரையில் 'வேண்டு அரும் விண்ணாடு' என்றே பிரித்துப் பொருள் கூறுவது கவனிக்கத்தக்கது. இப்படிப் பிரித்துப் பொருள் காண்பதுதான் பொருத்தமாகும். ஆனால் 'வேண்டரு விண்ணாடு' என்பதற்கு, 'காணவேண்டுவது இல்லாத தேவருலகம்' என்றுதான் பொருள் கொள்ள வேண்டும் என்பதில்லை.

'வேண்டரு விண்ணாடு' என்பதற்கு வேண்டுதல் அல்லது விருப்பம் இல்லாமற் போகிற விண்ணாடு என்று பொருள் கொள்வதே கவியுள்ளத்திற்குப் பெரிதும் பொருந்துவதாகும். மகேந்திரமலையில் பேருருவோடு வளரும் நிலையில் அனுமன் துறக்க நாட்டை அதிசமீபமா கக் கண்டு, 'இதுதானோ இலங்கை' என்று ஐயம் அடை கிறான். இந்த நிலையில் சீதையைத் தேடவேண்டும் என்ற விருப்பத்தையும் இல்லாமற் போக்கக்கூடிய தேவபோக முள்ள பூமி இது என்ற மெய்ம்மை கண்டு உள்ளத்தை அரிதில் முயன்று மீட்டுக்கொள்கிறான் என்பது நேரான பொருளாகும்.

மூலபாடத்தைச் சரியான ஆராய்ச்சி முறையில்—அதாவது, திரு. வையாபுரிப் பிள்ளை பின்பற்றும் நேர்மை யான 'விஞ்ஞான' முறையில்—துணிந்துகொள்ளத் தவ றுவதாலும் உரையில் தவறு புகுந்துவிடும். இதற்கு மட்டும் ஓர் உதாரணம் காட்டி இக்கட்டுரையை முடித் துக் கொள்வேன். 'கடல் தாவு படல'த்திலே (புதிய பதிப் புக்களில் 'கடறுவுபடலம்' என்று அச்சிடாததற்கே வாசகர்களின் நன்றி உரியதாகும்) மைந்நாகம், கடல்தாவி வரும் அனுமன் வருத்தம் தீர இளைப்பாறிப் போகவேண்டு

மென்றும், விருந்து சாப்பிடவேண்டுமென்றும் முன்வந்து உபசரிக்கிறது. அதற்கு அனுமன்,

வருந்தேன் : அது என்துணை
வானவன் வைத்த
காதல் :

அருந்தேன் இனி யாதும், என்
ஆசை நிரப்பி-
யல்லால்

என்று விடை கூறுகிறான்.

இதுதான் சரியான பாடம். கலாக்ஷேத்திர வெளியீட்டிலும் இதே பாடத்தைத்தான் காண்கிறோம்.

'நான் கடல்தாவிவருவதால் வருத்தம் அடையவில்லை; அது ராமன் என்னிடம்வைத்த காதலின்பயன்தான்! வருத்தமில்லாததால் களைப்பாற வேண்டிய தேவையில்லை; பசியில்லாததால் உணவு அருந்தவேண்டிய தேவையும் இல்லை. இனி நான் பிராட்டியைக் கண்டுபிடித்தலாகிய என் ஆசையை நிரப்பிக்கொண்டால் அல்லாமல் எதனையும் அருந்தேன்' என்பது பொருள்.

இந்த அனுமன் வாக்கின் முதல்அடி நம் தமிழ்ப் பல்கலைக் கழகத்து மாதிரிப் பதிப்பிலே,

வருந்தேல்! இது என்?துணை
வானவன் வைத்த
காதல்!

என்று காணப்படுகிறது. 'வருந்தேன்' என்பதற்கு 'வருந்தேல்' என்ற தவறான பாடத்தைக் கொண்டதால் பொருள் கொள்வதில் பெரியதோர் இடர்ப்பாடு ஏற்பட்டு விட்டது.

' "வானவன் வைத்த காதல் துணை!" என இயைத்து, மைந்நாகத்தை நோக்கிய அனுமன் விளியாக்கித் தேவனு

கிய வாயுவினால் தலையளி செய்யப்பட்ட காதற்றுணை வனே, என்று பொருளுரைக்க. "வருந்தேல்!" "இது என் ?" என்பது முதலியவை மைந்நாகத்தை நோக்கிய அனுமன் கூற்று'—இப்படியெல்லாம் வலிந்து, நலிந்து பொருள் கொள்வதற்குக் காரணம் மூலபாடத்தின் உண்மையுருவைக் கண்டு கொள்ளாததுதானே !

'வானவன்' என்பதற்குத் 'தேவனாகிய வாயு' என்று பொருள்கொள்வதைக் காட்டிலும் 'ராமன்' என்று பொருள் கொள்வதே கம்பனுள்ளத்திற்கு இசைந்ததாகும் என்பதற்குக் கிஷ்கிந்தா காண்டம்—கார்காலப் படலத்தில் ' வானவன் ஏவிய தூதெனை இரவி ஏகினான் ' என்று வருவதும் ஒரு தக்க சான்றாகும்.

'காதல் துணை', என்று சொற்கள் கொண்டு கூட்டப் பெற்றிருப்பதே இப் பாடற்பொருளை இனிது விளக்கு வதற்கு மாறாக வாசகர்களைத் திகைக்க வைக்கிறது ; ரஸிகர்களைப் பிரமிக்கச் செய்கிறது. ' சேஷத்வம் துக்க ரூபமாகவன்றோ நாட்டில் காண்கிறதென்னில், அந்தநியமமில்லை, உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கு மிருப்பு சுகமாகக் காண்கையாலே' என்று முமுட்சுப்படி—திருமந்த்ரப்ரகரணத்தில் பிள்ளைலோகாசாரியர் கூறியிருப் பதும்,

> வருந்தேன்: அது என்துணை
> வானவன் வைத்த
> காதல்

என்ற பாடத்தையே அரண் செய்வதாகும். இப்படி உதாரணங்களைக் காட்டிக்கொண்டே போகலாம்.

'பதிப்புக்களின் அபக்குவமான நிலை' என்று திரு. வையாபுரி சுட்டிக் காட்டியிருக்கும் அந்தநிலைக்கு இந்த மாதிரிப் பதிப்பும் விலக்கன்று. இனி, தொடர்ந்து நடைபெறும் பதிப்புத் திருப்பணி நல்லதோர் ஆராய்ச்சி

முறையை அனுசரித்து நடைபெறுவதற்கு ஆனந்தக் கூத்தனின் திருவருள் முன்னிற்பதாக! என்பதுதான் என் பிரார்த்தனை.

இப் பதிப்பிற்குப் பூர்வாங்கமாக அமைந்திருக்கும் முன்னுரையும் தக்க ஆராய்ச்சி முறையில் எழுதப்பெற்றிருப்பதாகத் தோன்றவில்லை. கம்பரை 'உவச்சர் குடியினர் என்பர் சிலர். வேளாண்மரபினர், காரணைக் குடை என்னும் கோத்திரத்தினர் என்பர் பலர். பிற் கூறியது பொருந்துவதாகும்' என்று எழுதியிருப்பது உண்மையில் பொருந்துவதன்று. தனியன் என்ற பகுதியில் காணப் படும் ஒரு பிற்காலச் செய்யுளை ஆதாரமாகக்கொண்டே இவ்வூகம் செய்யப்படுகிறது. ஆனால் அந்தப் பாட்டிலே சரியான பழைய மூல பாடம் 'காரணி கொடையான்' என்பதுதான்; 'காரணைக்குடையான்' என்பதன்று. இப்படிப் பல விஷயங்கள் முன்னுரைப் பகுதியிலும் ஆராய்ச்சிக்கு உரியனவாகவே உள்ளன.

கம்பன் காவியம் ஆராய்ச்சி அறிஞர்களுக்கும் பொதுமக்களுக்கும் ஒருங்கே பயன்படுவதற்கு உரிய முறையில் ஆராய்ச்சிப் பதிப்பு ஒன்றை வெளியிடுவது மிகவும் சிரமமான காரியம்தான். 'உண்மையான கம்ப ராமாயணத்தை இன்னும் உலகம் காணவில்லை' என்று பல்கலைக் கழக வெளியீடாகிய சுந்தர காண்டம்— முதற் பகுதியின் முகவுரை தெரிவிப்பது உண்மைதான். 'எப்போதாவது உண்மையான கம்பனை நாம் காணப் போகிறோமா?' என்று அவநம்பிக்கை கொள்வோரும் உண்டு. கம்பனைப்பற்றிய செவிவழி வரலாற்றில் ஒரு செய்தியை ஸ்ரீ வையாபுரிப்பிள்ளை குறிப்பிட்டு அதை ஒட்டிக் கூறியிருப்பதும் இந்த அவநம்பிக்கைக்குச் சான்று தருவதுபோலவே காண்கிறது.

' கம்ப ராமாயணப் பிரசங்கம் நிகழ்ந்த இடத்திற்குக் கம்பன் ஒருமுறை சென்றானாம். அங்கு பிரசங்கித்த

செய்யுட்களையும் பொருள்களையும் வெகுநேரம் கேட்டுக் கொண்டிருந்தானும். பல போலி இராமாயணச் செய்யுட்களோடு கலந்து இடையிடையே தனது கவிதைகளும் சில சில உள்ளன என்று கூறினனும். இதனால், கம்ப ராமாயணத்தில் வெகு காலத்திற்கு முன்னரே இடைச் செருகல்கள் மிகுதியாக ஏற்பட்டுவிட்டன என்பது விளங்கும்.'

எனினும், நேர்மையான நியதிகளை 'விஞ்ஞான' முறையில் கையாண்டு ஓர் ஆராய்ச்சிப் பதிப்பை வெளியிட முயலும்போது பல இடைச் செருகல்களையும் கண்டு பிடிக்க முடியும் என்பதே இந்த ஆராய்ச்சிப் பேரறிஞரின் தேர்ந்த கருத்து. இவர் குறிப்பிடும் நியதிகள் மட்டு மல்ல, இவர் நீண்ட நாளாகக் குறித்துவைத்திருக்கும் குறிப்புக்களும், பாடங்களும், தேடிவைத்திருக்கும் சுவடிகளும் கம்பனை உள்ளபடியே கண்டுகொள்ளவழி காட்டும் என்பது எனது நம்பிக்கை.

# வையாபுரிப்பிள்ளை மாண்பு

## கலிவெண்பா

மன்னு தமிழ்மக்காள் வம்மின்—உரை ஒன்று
பன்னுவது கேண்மின் பழையதமிழ்—அன்னை
மகிழப் பிறந்து வளர்ந்து கலைவாய்ந்து
திகழும் கதிர்போல் சிறந்தோன்,—மிக இனிய
தென் மொழியும் ஆங்கிலமும் தேர்ந்தோன், வழக்கறிஞன்
பன் மொழியும் ஆய்ந்த பருணிதன்.—நன்மை நிறை
சென்னை நகரில் திருவாங்கூர் மாநகரில்
உன்னு கலைகள் உயர்ந்தோங்கத்—துன்னு
சருவகலா சங்க தமிழ்த்துறைகட்கு ஏற்ற
ஒரு பெரும் பேராசானாய், ஒண்மை—மருவு
தமிழ் வளர்த்த சான்றோன், தகவுமிகு சங்கத்து
அமிழ்தனைய தொன்னூல் அனைத்தும்—இமிழ்திரைநீர்
ஞாலம் பயில ஒருங்குதவும் நற்கொடையான்,
சீலம் பெரிதுடையான், செம்மனத்தான்,—பாலும்
தெளிதேனும் பாகும் எனத்தித்திக்கும் சொல்லான்,
எளிதா மொழிப் பொருள்கள் யாரும்—தெளிய
அகராதி தந்த அரிய குணக் குன்றம்,
நிகராவார் இல்லாத நேயன்,—சகமீது
கம்பன் புகழும் கவிவளமும் காட்டிவரு
நம்பி, உலகு புகழ் நாவலன்,—வெம்ப
வருபிணிகள் நீங்கியிந்த மாநிலத் தோர் வாழத்
திரிகடுகம் ஆய்ந்துதவும் செம்மல்,—பெருநோய்
உறு பஞ்சமூலம் ஒழிந்து உயிர்கள் உய்யச்
சிறு பஞ்சமூலம் நல்கு செல்வன், அறம் நெஞ்சு
உறத் தெருட்டி, நீங்கா உளத்திருட்டை ஓட்டும்

புறத்திரட்டுத் தந்த புலவன்,—திறத்ததமிழ்
வாழ் வேதன் வாழ்வா மதித்த பெரு மாண்புடையான்,
தாழ்வேதும் இல்லாத தாளாளன்,—ஏழ்பாரும்
வையா புரி யெனவே வாழ்த்தும் பெயருடையான்,
செய்யாள் உறையும் திரு மார்பன்—கையார்ந்த
சங்குடையான் சக்கரத்தான் தாளிணைகள் சார்ந்தமையால்
பொங்கு துயரம் பொறுத்து அடக்கி,—அவன்றன்
நல்கு பல நூலும் நயந்து பயின்று ஒழுகி
மல்கு தமிழோடு வளர்ந்தவன்—பல்கி
இனிது ஊழி வாழ இயன்றவெல்லாம் செய்தும்.
முனியாமல் நன்கு முயன்று அஃது—அனையான்பால்
ஒன்றிய நண்பர்க்கு உவப் பூட்டும்—மேலும் அவற்கு
அன்புடையார் நன் பணியும் ஆம்.

தந்தை திறத்து மக்கள் தாமே செயும் கடமை
சந்ததமும் செய்யும் சரோஜினிதான்—எந்தை
திருநாராயணன் அருளால் செல்வமெலாம் பெற்றுத்
தரைமீது வாழி தழைத்து.

19—10—56
அண்ணாமலைநகர்

T. K. இராமாநுஜன்

# பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளைமீது

# இரங்கற் பாக்கள்

**திராவிடக் கவிமணி**

**வே. முத்துஸாமி ஐயர், எம்.ஏ., எல்.டி.**

## நேரிசை வெண்பா

*மெய்யாக வுள்ளமுரை மெய்ம்மூன் றிவைமுற்றும்*
*ஐயா! தமிழ்ப் பணிக்கே ஆக்கினை ; நீ—செய்யோய்*
*உடல் பொருள்போல் ஆவியுமின் றேய்ந்தாய் தமிழாம்*
*கடலில் திளைத்திளைப்புக் கண்டு*

*செந்தமிழா ராய்ச்சிபல செய்து நனிசிறந்தாய்;*
*அந்தம் உறப்பேர் அகராதி—நந்தம்*
*சருவகலா சாலைவழித் தந்தாய் ; தமிழ்க்கே*
*பொருவகிலா தேதுமிதைப் போல்*

*கம்பரா மாயணத்துக் காண்பரிய காமருசீர்ச்*
*செம்பதிப்புக் காண்முயற்சி செய்தனையே—இம்பரில் நீ*
*அப்பணிகை கூடாமுன் அம்ம! அணைந்தாய் ; தலைக்கே*
*அப்பணி[1]ஈ சன்பொன் அடி.*

*என்பாற்பே ரன்புமிக எய்திளனைப் பாராட்டும்*
*பொன்போற் குணம்படைத்த புண்ணியனே—நின்போல்யார்*
*ஆழம் அகலமிவை ஆய்ந்தவுரித்தார்? செந்தமிழிற்*
*சூழும் வளங்கள் தொகுத்து*

---

1. *அப்பு அணி - கங்கை நீரைத் தரித்த.*

காரைநகர்க் கம்பன் கழகத்தும் வேறிடத்தும்
யாரை இனிக்கண்(டு) இனியவுரை—தாரை அமு(து)
ஆமாறு கேட்டுவப்பேம்? ஐயா! வையாபுரிவேள்!
போமாறெம் துன்பம் புகல்

சட்டம் நீ தேர்ந்தனையேனும் தனித்தமிழில்
இட்டமே வீட்டால் இனிதுழைத்த—சிட்ட[1]!
புறத்திரட்டு முன்னுப்பல் பொன்னுரைகள் போற்றி
உறத்திரட்டித் தந்தாய் உகந்து

எத்தனைசொல் ஆராய்ச்சி! எத்தனையா ராய்ச்சிப் பொருள்
எத்தனை நூல் ஆராய்ச்சி யின்விளைவு(இ)ங்(கு)—அத்தனையும்
ஐயா! வை யாபுரிப்பேர் அண்ணல்! நீ ஆராய்ச்சி
செய்வார்க் கருளுந் திறம்

வாழிநீ டீழிஎம் வள்ளல்வை யாபுரியார்;
வாழி இவர்வகுத்த வண்டமிழ்கள்;—வாழிகடல்
சூழும் உலகிலிவர் சுற்றமும் காலும்[2]மிக
வாழையடி வாழையா வந்து

1. சிட்ட - சிஷ்டனே 2. கால் - சந்ததி